சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# நால்வர் நான்மணி மாலை

சென்னை

கொ. இராமலிங்கத் தம்பிரான்

விருத்தியுரை

பதிப்பாசிரியர்

திரு. ஐயன்பெருமாள் கோனார்



ழனியப்பா பிரதர்ஸ்

னை - 600 014 திருச்சி 620 002

636 001 கோயமுத்தூர் - 641 001

- 625 001 ஈரோடு - 638 001

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# நால்வர் நான்மணி மாலை

சென்னை

கொ. இராமலிங்கத் தம்பிரான்

விருத்தியுரை

பதிப்பாசிரியர் :

**திரு. ஐயன்பெருமாள் கோனார்**

•



**பழனியப்பா பிரதர்ஸ்**

சென்னை - 600 014 திருச்சி 620 002

சேலம் - 636 001 கோயமுத்தூர் - 641 001

மதுரை - 625 001 ஈரோடு - 638 001

# முதற்பதிப்பின் பதிப்புரை

**'நால்வர் நான்மணி மாலை'** என்பது சைவ சமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரைப் பாராட்டிப் பாடிய ஒரு நூலாகும்.

**நான்மணி மாலை** - இது, தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் என்னும் நால்வகை மணிகளை முறையே கோக்கப்பட்ட மாலை போல வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்னும் நால்வகைப் பாக்களை அந்தாதித் தொடையால் அமைக்கப் பட்ட நாற்பது செய்யுள்களைக் கொண்டதொரு நூல்.

**வெண்பாக் கலித்துறை விருத்தம் அகவல்**
**பின்பேசும் அந்தா தியினாற் பதுபெறின்**
**நான்மணி மாலை யாமென நவில்வர்**

— இலக்கண விளக்கம்.

இந்த நூலில், திருஞானசம்பந்தர் பத்து வெண்பாக்களாலும், திருநாவுக்கரசர் பத்து கட்டளைக் கலித்துறைகளாலும், சுந்தரர் பத்து ஆசிரிய விருத்தங்களாலும், மாணிக்கவாசகர் பத்து ஆசிரியப் பாக்களாலும் புகழ்ந்து பாராட்டப்பட்டுள்ளனர்.

இந்நூல் சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணத்தின் சாரமாகச் சைவசமய குரவர் நால்வரது வரலாற்றை அங்கமாகக் கொண்டு, தேவாரத் திருவாசகங்களின் பெருமையையும், நால்வரும் நிகழ்த்திய செயற்கருஞ்செயல்களையும்; இறைவன் அவர்கட்குத் திருவருள் பாலித்ததையும் கற்பனை நயந்தோன்ற எடுத்துக் கூறும்.

சிவப்பிரகாச சுவாமிகள், "நன்றறிவாரிற் கயவர் திருவுடையர், நெஞ்சத் தவல மிலர்" என்னுங்குறளையும், "அறத்தா றிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தா னிடை" என்னுங் குறளையும் ஏற்றப் பெற்றி எடுத்தாண்டுள்ளார். சொன்னயமும் பொருணயமும் பொலிந்து சந்த இன்பம் பயக்கும் பான்மையனவாகப் பாக்கள் அமைந்துள்ளன.

இந்நூலுக்கு, சென்னை **கொ. இராமலிங்கத் தம்பிரான்** அவர்கள் விருத்தியுரை செய்துள்ளார். இவ்வுரை, நூலாசிரியரின் கருத்தைத்

தெள்ளிதில் உணர்ந்துகொள்ளுமாறு பல நூல்களை மேற்கோளாக் கொண்டு, புராண வரலாறுகளை விளக்கித் தெளிவாக எழுதப் பட்டுள்ளது. இதனை, **சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் முதனிலைத் தேர்வுக்குப்** பாடமாகத் தேர்ந்தெடுத்துள்ளனர். இவ்வுரை நூல் 1921 ஆம் ஆண்டு மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை உரிமை யாளரால் பதிப்பிக்கப் பெற்றது. இந்நூலில் வட சொற்கள் மலிந் திருந்தமையின், ஏற்ற பெற்றி அவற்றைக் களைந்தும், நடையைச் செப்பஞ்செய்தும் திருத்தமுறப் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையின் தற்கால உரிமையாளராகிய உயர்திரு. **குமா. நாகப்பச் செட்டியார்** அவர்கள் இவ்வுரையைப் பதிப்பித்துக் கொள்ளுமாறு அருள்கூர்ந்து அனுமதியளித்தமைக்கு யான் என்றுங் கடப்பாடுடையேன். இவ்வுரை நூலைத் தமது வெளியீடாக நன்முறை யில் வெளியிட்டுள்ள எனது உழுவலன்பர்கள் **பழனியப்பா சகோதரர்** கட்கு யான் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். தமிழ் உலகம் இவ்வுரை நூலைப் போற்றிப் பயின்று நலம் பெறுக.

**திரு. ஐயன்பெருமாள் கோனார்**

சென்னை

கொ. இராமலிங்கத் தம்பிரான்

## முதற்பதிப்பின் முகவுரை

**நால்வர் நான்மணிமாலை** என்னும் இவ்வரிய நூலை இயற்றியவர்; நம் தொண்டை நாட்டிற் சிறப்புற்றோங்கிய உத்தம கவிகளில் தலைமை பெற்றவரும், சிவனடியே சிந்திக்கும் சிவஞானச் செல்வரும், வீரசைவ மதத்தினருமாகிய **துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்** என்னும் பெரியார். இந்நூலில் காப்புச் செய்யுள் நீங்கலாக, வெண்பாவும் கலித்துறையும் விருத்தமும் அகவலுமாக நாற்பது செய்யுள்கள் உள்ளன. இது, சொற்சுவையும் பொருட்சுவையும் சித்தாந்தக் கருத்துகளும் நிரம்பப்பெற்றது. திருக்கைலாயப் பரம்பரைப் பொம்பபுரம் ஈசானிய மடம் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளின் விருத்தியுரையையும், யாழ்ப்பாணத்து வண்ணைநகர், ஸ்ரீமத் சுவாமிநாத பண்டிதர் அவர்களின் குறிப்புரையையும் தழீஇ, ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளின் மாணவர், ஸ்ரீமத் க. வ. திருவேங்கட நாயுடு அவர்களிடத்துப் பாடங்கேட்டவற்றுள் மறப்பெனுங்கள்வன் வாரிக்கொண்டது போக, எம் சிற்றறிவினுக்கு இயன்ற அளவில் எம்மால் இந்நூலக்கோர் உரை காணப்பட்டது. இந்நூலுள் சுவாமிகள் எழுதிய இலக்கணக் குறிப்புகளையெல்லாம் ஐயந்திர வினாவிடைகளான் நன்கு விளக்கியுள்ளோம். இந்நூலிலுள்ள சரித்திரங்களையெல்லாம் சுருக்கியும், ஆங்காங்கு வேண்டிய இன்றியமையாத் தேவாரங்களை உணர்த்தியுமுள்ளோம்.

இவ்வுரையிலுள்ள குற்றங்களை எமக்குத் தெரிவிப்பவர்கள் மாட்டு நன்றி பாராட்டி, மறுபதிப்பில் திருத்திப் பதிப்பிக்க முயல்கின்றோம். சுவாமிகள் உரை கிடைப்பதரிதாகையால், மாணவர்கட்குப் பயன்படுமாறு, இவ்வுரையை இயற்றுவித்து அச்சில் பதிப்பித்து வெளிப்படுத்திய ஸ்ரீ சை. சிவசங்கர செட்டியார், B.A.,B.L. அவர்கட்கு மனப்பூர்வமாக வந்தனம் செலுத்தக் கடவேனாக.

இங்ஙனம்,

**சென்னை கொ. இராமலிங்கத் தம்பிரான்**

# சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு

சிவப்பிரகாச சுவாமிகள் தொண்டை நாட்டிலே காஞ்சிபுரத்திலே, ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகட்கு முன், தொண்டை மண்டல வேளாளருக்கு தீக்ஷா குருவாக விளங்கிய குமார சுவாமி தேசிகர் என்பார் திருவண்ணாமலையில் குருதேவரிடத்துத் தாரண தீக்ஷை செய்துகொண்டு வீரசைவ மதத்தினராய், அவரிடத்து விடை பெற்றுக்கொண்டு காஞ்சீ புரத்துக்கு வந்து வாழும் நாளில் அவருக்குச் சிவப்பிரகாசர், வேலாயுதம் கருணைப்பிரகாசர் என மூன்று புதல்வர்களும், ஞானாம்பிகை என்னும் புதல்வியும் பிறந்தனர்.

தந்தையார் காலஞ்சென்ற பின்னர் சிவப்பிரகாசர் தம்முடன் பிறந்தாரோடு திருவண்ணாமலைக்குச் சென்று குருதேவரை வழிபட்டுத் துறவறத்தை மேற்கொண்டு வாழுநாளில், திருவண்ணாமலையை வலஞ் செய்து வரும்போதே, **சோணசைலமலை** என்னும் நூலைப் பாடினர். பின்னர்த் தமிழிலுள்ள பேரிலக்கண விலக்கியங்களை மேலுங் கற்பான் வேண்டித் தமது உடன்பிறந்தாரோடு சென்று வாலிகண்டாபுரத்திற்குத் தெற்கிலுள்ள **துறைமங்கலம்** என்னும் ஊரையடுத்துள்ள ஒரு நந்த வனத்தில் சிவபூசை செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது, **அண்ணாமலை ரெட்டியார்** என்பவர், சுவாமிகளது வரவைக் கேள்வி யுற்று அவரையடைந்து வணங்கிச் சில காலம் துறைமங்கலத்தில் தங்கி இருக்க வேண்டுமென்று விண்ணப்பித்து, ஒரு திருமடங்கட்டுவித்து, அதில் சுவாமிகளை எழுந்தருளச் செய்து, இடைவிடாது அணுக்கத் தொண்டராய் அமர்ந்திருக்க, சுவாமிகள் அண்ணாமலை ரெட்டியாருக்கு உண்மைகளை எடுத்துக் காட்டிக்கொண்டு அங்கு இரண்டாண்டுகள் எழுந்தருளியிருந்தார்.

அதன் பின்பு சுவாமிகள், தாம் கொண்ட கருத்தை நிறைவேற்ற விரும்பித் திருநெல்வேலியையடைந்து, தருமபுரவாதீனத்து **வெள்ளி** யம்பலத் தம்பிரானைக் கண்டு, தாம் இலக்கணங்கற்பான் வேண்டி வந்தமையைத் தெரிவித்துக்கொண்டனர். அத்தம்பிரான், சுவாமிகளது இலக்கியப் பயிற்சியை அறிதற்பொருட்டு, "கு என்பதை முதற் கொண்டு, ஊருடையான் என்பதை இடைப்பெய்து, கு என்பதையே ஈற்றினுங்கொண்டு முடியும்படி ஒரு வெண்பாப் பாடுக" என்று கூறச் சுவாமிகள்,

> ''குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
> முடக்கோடு முன்னமணி வாற்கு – வடக்கோடு
> தேருடையான் றெவ்வுக்குத் தில்லைத்தோன் மேற்கொள்ள
> லூருடையா னென்னு முலகு''*

என்னும் வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளினார். அத்தம்பிரான் அவ்வெண்பாவை வியந்து பாராட்டிச் சுவாமிகளைத் தழுவித் தம்மரு கிருத்திச் சுவாமிகளது உடன்பிறந்தாராகிய வேலையர், கருணைப் பிரகாசர் ஆகிய இருவருக்கும் ஐந்திலக்கணங்களையும் பாடஞ்சொல்லி முடித்தார். சுவாமிகள் பேருவகையுற்று அண்ணாமலை ரெட்டியார் தமக்கு வழிச்செலவிற்கு உதவிய பொன்னை குருதக்ஷிணையாக வைக்க, அத்தம்பிரான், ''இது நமக்கு வேண்டா; நம்மை இகழ்தலையே இயல் பாகக் கொண்டு திருச்செந்தூரில் வாழும் தமிழ்ப்புலவர் ஒருவரோடு கல்வியில் வாதிட்டு அவரை வென்று அவர் வந்து நம்மை வணங்கும்படி செய்வித்தலே குருதக்ஷிணையாகும்'' என்று மறுத்தருளினர்.

அவரது கருத்தறிந்த சுவாமிகள் அதற்குடன்பட்டுத் திருச் செந்தூரையடைந்து, அப்புலவரோடு கல்வியில் வாதிட்டு அவரை வென்று அடிமையாக்கி, அப்புலவர் தம்பிரானை வந்து வணங்கும்படி செய்வித்தனர். அதனைக் கண்டு தம்பிரான் உளமகிழ்ந்து, சிவப் பிரகாச சுவாமிகளைப் பார்த்து, ''நீர் பாடிய வெண்பாவில் சிவபிரானுக் குரிய தலம் சிதம்பரமேயெனச் சுட்டிக் குறிப்பால் விளக்கினமையால் அத்தலத்திலே சில காலம் இருந்து வருக'' என்று விடை கொடுத் தனுப்பினார்.

சுவாமிகள் அவ்விடத்தைவிட்டு நீங்கிச் சிவத்தலந் தோறும் சென்று வழிபாடு செய்துகொண்டு துறைமங்கலத்தைச் சார்ந்து முன் போலவே அண்ணாமலை ரெட்டியார் என்பவருக்குத் திருவருள் பாலித்து, அவரது வேண்டுகோளின்படி வாலிகண்டபுரத்தின் வடமேற் பகுதியிலுள்ள திருவெங்கைமாநகரத்தில் தம்பொருட்டு அவரால் கட்டப்பெற்ற திருமடத்தில் வீற்றிருந்து அத்தலத்தில் எழுந்தருளி யுள்ள பழமலைநாதர்மீது **திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம்** முதலிய நூல்களை இயற்றினார். பின்பு அண்ணாமலை ரெட்டியாரோடு சிதம்பர தலத்தையடைந்து அங்கு ஒரு திருமடங் கட்டுவித்து, அதில் வீற்றிருந்து இறைவழிபாடு செய்துகொண்டு, **நால்வர் நான்மணி மாலை, சிவப்பிரகாச விகாசம்** முதலிய நூல்களை இயற்றி, அத்தலத்தை விட்டு நீங்கிப் பிற தலங்களையும் வணங்கித்

---

*(இ–ள்) மேற்றிசையை நோக்கி ஓடுகின்றவனாகிய சூரியனது பற்களைத் தகர்த்தவரும், திருமாலாகிய பன்றியினது வளைவாகிய கொம்பை மதாணிப் பதக்கமாக முற்காலத்திலணிந்தவரும், வட திசையை நோக்கி ஓடுகின்ற தென்றலாகிய தேரையுடையவனாகிய மன்மதனது பகைவருமாகிய சிவபெருமானுக்குத் தில்லை நகரம் ஊராகும். யானைத்தோல் புலித்தோல்கள் ஆடையாகும். ஊர்தல் இடபமாகும் என்று உலகத்தவர் சொல்வர் (எ–று.)

திருக்காட்டுப்பள்ளியை அடைந்து இறைவழிபாடு செய்துகொண்டு அங்குத் தங்கியிருந்தனர். பின்னர்ச் சுவாமிகள் அண்ணாமலை ரெட்டியாரோடு காஞ்சித்தலம் நோக்கிப் புறப்பட்டார். வழியிடையே **சாந்தலிங்க சுவாமிகளைக்** கண்டு அவரோடு அளவளாவிப் பின்னர்ப் பொம்மைய பாளையத்தையடைந்து **சிவஞான பாலைய சுவாமிகள்**மீது தாலாட்டு முதலிய நூல்களைப் பாடி அவர்முன் அரங்கேற்றி; அச்சுவாமிகளிடத்து ஞானோபதேசம் பெற்று அண்ணாமலை ரெட்டியாரைத் துறைமங்கலத்திற்கு அனுப்பிவிட்டு, ஞானாசாரியரோடு தங்கியிருந்தார்.

சில காலஞ்சென்ற பின்னர் ஞானாசாரியரிடம் விடை பெற்றுக் கொண்டு காஞ்சீபுரத்தை யடைந்து, இறைவழிபாடு செய்துகொண்டு அங்கு வாழும் நாளில், **வேதாந்த சூடாமணி, பிரபுலிங்க லீலை** முதலிய நூல்களை இயற்றினார். ஞானாசிரியர்மீது **திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ்** என்னும் இரண்டு நூல்களை இயற்றினார். பின்னர்க் காஞ்சியினின்றும் புறப்பட்டு இடையிலுள்ள சிவத்தலங்களை வணங்கிக்கொண்டு திருக்கூவம் என்னும் தலத்தையடைந்தார். அங்குள்ள வேளாளர் முதலியோர் வேண்டுகோளின்படி **திருக்கூவப் புராணம்** பாடி அரங்கேற்றி, அங்கு நின்றும் புறப்பட்டு மயூராசலத்துப் பால சித்தர் மடத்தையடைந்து, ஞானாசிரியரை வணங்கி உடன் வாழ்ந்து வந்தனர். பின்னர் விருத்தகிரியையடைந்து பழமலை நாதரை வணங்கி, **பழமலையந்தாதி, பெரியநாயகியம்மை விருத்தம்** முதலிய நூல்களை இயற்றினார்.

இங்ஙனம் இருக்கும் நாளில் தமது ஞானாசிரியர் இஷ்டலிங்க பரசிவத்திலே கலந்தருளினார் என்பதையறிந்த சிவப்பிரகாச சுவாமிகள் கள் பொம்மபுரத்தையடைந்து ஆசிரியர் ஒடுங்கிய குகையை வணங்கி வழிபட்டார்; அங்கிருக்கும் நாளில் **நன்னெறி வெண்பா** என்னும் நூலை இயற்றினார். பின்னர், சுவாமிகள் திருத்தலங்களை வணங்கவேண்டி அங்கிருந்தும் புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கி, நல்லாற்றூரை யடைந்து அங்கு வாழும் நாளில் **ஏசுமத நிராகரணம், க்ஷேத்திர வெண்பா, சிவநாம மகிமை,** இஷ்டலிங்கப் பெருமான்மீது **அபிஷேக மாலை, நெடுங்கழி நெடில், குறுங்கழி நெடில், நிரஞ்சன மாலை, சீகாளத்திப் புராணத்தில்** கண்ணப்பச் சருக்கமும் நக்கீரச் சருக்கமும் இயற்றினார்; அங்கிருந்துகொண்டே, நன்மாணாக்கர் பலர்க்குக் கல்வி கற்றுக் கொடுத்துத் தமது முப்பத்திரண்டாம் வயதில் இஷ்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினார். அப்பொழுது வேலைய சுவாமிகள்,

> "அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
> சொல்லு மிருவருடைத் தோன்றியயான் — முல்லை
> யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய் !
> கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்"

என்னும் வெண்பாவைப் பாடியருளினார்.

# நால்வர் நான்மணி மாலை

**நால்வர் நான்மணி**மாலை என்பது, நால்வரது நான்மணிமாலையென விரியும். இது, பொருட்பிறிதின் கிழமைப் பொருளதாகிய ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். இனி, இத்தொடர் மொழியை இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்கத் தொகையாகவும் கொள்ளலாம்; அதற்குப் பொருள், நால்வரைக் குறித்துப் பாடியதொரு நூல் என்பதாம்.

சைவ சமய குரவர்களாகிய **திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரையும் திருநாவுக்கரசு நாயனாரையும் சுந்தரமூர்த்தி நாயனாரையும் மாணிக்கவாசக அடிகளையும்** பாடியது என்பது கருத்து. நால்வராவார் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய நால்வர்.

**நான்மணி மாலை என்பது** முத்து, பவளம், மரகதம், மாணிக்கம் இவற்றாலாகிய மாலை; அஃது உவமையாகுபெயராய் நூலை உணர்த்திற்று. இந்நூல் அந்தாதித் தொடையால் அமைந்த வெண்பாவும், கலித்துறையும், விருத்தமும், அகவலும் உடையது. இதனை,

> **"வெண்பாக் கலித்துறை விருத்த மகவல்**
> **பின்பேசு மந்தா தியினாற் பதுபெறி**
> **னான்மணி மாலை யாமென நவில்வர்."**

என்னும் இலக்கண விளக்கப் பாட்டியலான் அறிக.

•

## காப்பு

### குறள் வெண்பா

**எப்போ தகத்து நினைவார்க் கிடரில்லை**
**கைப்போ தகத்தின் கழல்.**

பதவுரை

**எ போதும்** - எக்காலத்தும்,
**அகத்து** - மனத்தின்கண்,
**கை போதகத்தின்** - துதிக்கையையும் யானை முகத்தையுமுடைய விநாயகப் பெருமானது,
**கழல்** - திருவடிகளை,
**நினைவார்க்கு** - நினைப்பவர்க்கு,
**இடர் இல்லை** - யாதொரு துன்பமும் இல்லை.

### விளக்கவுரை

**காப்பு**—காத்தல்; அஃதிங்குக் காக்கின்ற கடவுட்குரிய வணக்கத் துக்குத் தொழிலாகுபெயர். சைவ சமயத்தவர் யாதானும் ஒரு நூல் செய்யத் தொடங்குங்கால், முதலில் விநாயக வணக்கம் கூறுதல் மரபாதலால், இந்நூலாசிரியரும் ஆன்றோர் ஒழுக்கத்தைப் பின் பற்றியே காப்புச் செய்யுளில் விநாயக வணக்கம் கூறினார்.

இங்ஙனம் கூறுதல் யாதுக்கெனின், தாம் தொடங்கும் நூல் இடையூறின்றி இனிது முடியுமென்பது கருதியென்க. இடையூறு வாராமற்காத்தலால் விநாயகக் கடவுளுக்கு 'விக்கின விநாயகர்' என்னும் பெயர் வழங்கும். வாழ்த்தல், வணங்கல், பொருளியல்புரைத்தல் என்னும் மூவகை வாழ்த்துள் இக்காப்புச்செய்யுள் **பொருளியல்புரைத் தல்** என்க.

அகத்தும் என்பதிலுள்ள உம்மை, பிரித்து 'எப்போது' என்பத னோடு கூட்டப்பட்டது. 'எப்போதகத்தும்' என்பதற்கு எக்காலத்தின் கண்ணும் எனப் பொருள் கூறினும் அமையும்; இனி, எவ்வகைப்பட்ட மன மலரினும் எனப் பொருள் கூறலும் ஒன்று; அதற்கு அகப்போது என மாறுக. எவ்வகை மனமாயினும் நினைப்பின் இடரில்லை. எனவே, ஏனை மெய்யால் வணங்குவோர்க்கும், வாயால் துதிப்போர்க்கும் இடரில்லையென்பது போதரும்.

விலங்கினுள் யாளியும் கை (அத்தம்) உடையதேனும், அத்தி யெனக் கூறப்படுவது யானை ஒன்றேயாகலின், அச்சிறப்புத் தோன்ற விநாயகரைப் 'போதகம்' என்றார்.

**கழல்**—தானியாகுபெயர்; அதனையணியும் காலுக்காயினமையின். அஃது அரவின் படம் போலமைந்து கொக்கிபோலிருக்கும் ஓர் அணி; வீரத்தின்பொருட்டுக் கட்டுவது. கழல் என்புழி இரண்டாவது தொக்கது. இதனை,

> "ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
> மெய்யுருபு தொகாஅ விறுதி யான."

என்பதனாலறிக.

விநாயகப் பெருமானது திருவடிகளை எக்காலத்தும் சிந்தித்திருப் போர்க்கு யாதொரு துன்பமும் அணுகாது என்பது கருத்து.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

> **பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியற்**
> **பாவான் மொழிஞானப் பாலுண்டு—நாவான்**
> **மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் றண்டை**
> **வெறித்தண் கமலமே வீடு.**

### பதவுரை

**பூவால்** - தாமரைப் பூக்களால்,
**மலி** - நிறைந்த,
**மணி நீர் பொய்கை கரையின்** - தூய்மையான நீரையுடைய தடாகக் கரையில்,
**மொழி ஞானப்பால் உண்டு** - (அம்மையாரால் கொடுக்கப் பட்ட) புகழ்கின்ற ஞானப் பாலை உண்டு,
**மறித்து** - மத்தித்து,
**அமுதாய்** - அமுதாக,
**இயற்பாவால்** - தேவாரப் பாக்களால்,
**எம் செவி** - எம் காதுகளுக்கு,
**வார்த்த பிரான்** - வார்த்த பிரானாகிய திருஞானசம்பந்தனது,
**தண்டை** - தண்டையையணிந்த,
**வெறி தண் கமலமே** - மணம் பொருந்திய குளிர்ந்த தாமரை மலர் போன்ற திருவடியே,
**வீடு** - அடியேனுக்கு வீட்டைத் தருவதாகும்.

### விளக்கவுரை

பூ என்றது தாமரை மலரை; 'பூவிற்குத் தாமரையே' என்பதனாலும், 'பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை' என்பதனாலும், 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே,' என இவ்வாசிரியர் இந்நூலிற் கூறியிருப்பதனாலும் அறிக. நூன்முகத்துப் பூ எனக் கூறியது மங்கலச் சொல்லாதலான் என்க.

**மணி** - தூய்மை; **மணி நீர்** - முத்துகளையுடைய நீர் எனினும் அமையும். **பொய்கை** - சீகாழித்தலத்தில் உள்ள பிரமதீர்த்தம்.

'**இயற்பாவால் மொழி**' என்பதற்கு இயற்பாக்களால் துதிக்கப்படுகின்ற எனப் பொருள் கூறி, ஞானப்பாலுக்கு அடையாக்கினும் அமையும். **மறித்தல்** - மத்தித்தல்; திருப்பல் எனினுமாம். ஞானப் பாலையுண்டு அதனைத் தாம் மொழிந்த இயற்பாவோடு சேர்த்து, எமது செவிக்கு அமுதாய் வார்த்த பிரான் எனினும் அமையும். அவ்வமைவுக்கு, ஆன், "தூங்குகையான் ஓங்கு நடைய" என்புழிப் போல 'ஒடு' உருபின் பொருளது. **எம் செவி** - எம் செவியில் என ஏழாவது தொக்கதாகவும் கொள்ளலாம். **அமுதாய்** - அமுதாக: எச்சத் திரிபு. திருஞானசம்பந்தர் முருகக்கடவுளின் திருவவதாரமெனப் பல சான்றுகளிருத்தலின் ஆசிரியர, 'பிரான்' என்றார். **கமலம்** - கமலம் போன்ற பாதத்தைக் கமலம் என்றமையால் உவமையாகுபெயர். கமலமே - ஏகாரம் தேற்றம். வீடு தருவதனை வீடு என்று உபசரித்தார்.

உமாதேவியாரால் கொடுக்கப்பெற்ற ஞானப்பாலை உண்ட திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரின் திருவடிகளே அடியேன் வீடு பெறுவதற்கு ஏதுவாகும் என்பது கருத்து.

**ஆளுடைய பிள்ளையார் ஞானப்பால் உண்ட வரலாறு:** இவர் சோழ மண்டலத்தில் சீர்காழியென்னுந்திருப்பதியில் அந்தண குலத்தில்

கௌணியர் கோத்திரத்தில் உலகெலாமுய்யத் திருவவதாரஞ்செய்த வர். தந்தையார் சிவபாதவிருதயர்; தாயார் பகவதியம்மையார். தாய் தந்தையராகிய இவ்விருமுதுகுரவரும் தோணியப்பரின் திருவடிகளைத் தமது மனத்தில் நிறுத்தி அன்பு பூண்டு ஒழுகுபவர். பிள்ளையாரது மூன்றாம் ஆண்டிலே, ஒருநாள் தந்தையார் நீராடுதற்குப் போக, பிள்ளையார் அழுதுகொண்டே பின் செல்ல, ஆலயத்தின் உட்புறத்தி லிருக்கும் பிரமதீர்த்தக் கரையில் பிள்ளையாரை இருத்தித் தாம் குளத்தில் இறங்கி நீராட முழுகினார். அப்போது பிள்ளையார் திருத் தோணிச் சிகரத்தைப் பார்த்து, "அம்மே, அப்பா" என்று தம்முடைய புனித வாய் மலர்ந்து அழ, தோணியப்பர் அருள்புரியத் திருவுளங் கொண்டு, பார்வதி தேவியாரோடு இடபத்தில் எழுந்தருளி, வாவிக் கரையை அடைந்தனர். உமாதேவியார், தம்முடைய திருமுலைப்பாலைப் பொன் வள்ளத்திலே கறந்து, சிவஞானத்தைக் குழைத்துக் கையிலே கொடுத்துக் கண்ணீரைத் துடைத்து ஊட்டியருளினர். தந்தையார் சிவ பாதவிருதயர் நீராடிவிட்டுக் கரையேறிப் பிள்ளையாரைக் கண்ணுற்று, "நீ யார் தந்த பாலையுண்டனை!" எனச் சினந்து, "உனக்கு இதனைத் தந்தவரைக் காட்டு" என்று சொல்லிக் கையிலெடுத்த ஒரு சிறு மாறு கொண்டு ஓச்ச, அப்போது பிள்ளையார் ஆனந்தக் கண்ணீர் சொரிய, உச்சியின்மேல் எடுத்தருளிய ஒரு திருக்கை விரலாலே சுட்டி, ஆகாயத் திலே இடபத்தின்மீது உமாதேவியாரோடு தோன்றிய பெருமானைக் காட்டி, 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடி யருளினர்.

பிள்ளையார், சிவன் சத்தி இருவராலும் ஆளப்பட்டமையினாலே ஆளுடைய பிள்ளையார் என்னும் பெயரும், சிவஞானத்தோடு சம்பந்தஞ் செய்தலினாலே திருஞானசம்பந்தமூர்த்தி என்னும் திருப்பெயரும் உடையராயினார்.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

**வீட்டிற்கு வாயி லெனுந்தொடை சாத்துசொல் வேந்தபொது**
**வாட்டிற்கு வல்ல னொருவற்கு ஞான வமுதுதவி**
**நாட்டிற் கிலாத குட்டநோய் நினக்குமுன் னல்கினுமென்**
**பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே.** 2

பதவுரை

**வீட்டிற்கு** - முத்தியடைதற்கு,
**வாயில் எனும்** - ஏது என்று (யாவ ராலும்) சிறப்பித்துச் சொல் லப்படுகின்ற,

**தொடை சாத்து** - தேவாரப்பாக் களைச் (சிவபெருமானுக்கு) அணிந்த,
**சொல்வேந்த** - திருநாவுக்கரசே,

**பொது ஆட்டிற்கு வல்லன்** - கனக சபையில் நடனஞ் செய்தற்கு வல்லவனாகிய சிவபெருமான்,
**ஒருவற்கு** - ஆளுடைய பிள்ளை யார்க்கு,
**நாட்டிற்கு இலாத** - உலகத்திற்கு இல்லாத,
**ஞான அமுது உதவி** - ஞானப் பாலைக் கொடுத்து,
**நாட்டிற்கு இலாத** - உலகத்திற்கு இல்லாத,
**குடர் நோய்** - சூலை நோயை;
**நினக்கு** - உனக்கு,
**முன் நல்கினும்** - முற்காலத்தில் கொடுத்த போதிலும்,
**பாட்டிற்கு** - (அச்சிவபெருமான் மீது பாடும்) பாட்டிற்கு,
**அவனும் நீயும்** - ஆளுடைய பிள்ளையாரும் நீரும்,
**எப்படியினும்** - எவ்வகையினும்,
**ஒப்பீர்** - ஒத்திருக்கின்றீர்;
**என்** - (அங்ஙனம் கொடுத்த அச் சிவபெருமானுக்கு) யாது பயன்?

**விளக்கவுரை**

இவர் அருளிச்செய்த தேவாரம் ஒவ்வொன்றும் வீட்டு நெறிக்கு ஏதுவாயிற்றுஎன்பார், '**வீட்டிற்கு வாயி லெனுந்தொடை**' என்றார். **வாயில்** - வழியுமாம். இனி இவர் அருளிச்செய்த தேவாரம் வீட்டிற்கு நிமித்த காரணமாகிய முதற்பொருளையுணர்தற்கு வழி என்பார், 'வீட்டிற்கு வாயிலெனுந்தொடை' என்றார் எனினும் அமையும். வீட்டிற்கு வாயிலெனுந்தொடை என்பதற்கு, வீட்டிற்கு வாயில் என்னும் கருத்தினைக்கொண்ட தேவாரம் எனப் பொருள் கூறலும் ஒன்று. என்னை, இவ்வாசிரியரே பிறாண்டும்,

> **"வேண்டுவோர் வேண்டியதே யீவா னென்னும்**
> **வியன்றிருநா வுக்கரசின் மாற்றம் பொய்யோ?"**

எனக் கூறுதலானும் அறிக.

**பொது** - ஈண்டுக் கனக சபை. இனிப் 'பொதுவாகப் பேசுதலில் வல்லவனாகிய சிவபெருமான், ஒருவனுக்கு ஞானப் பாலைக் கொடுத்து, இதுகாறும் நாட்டில் இல்லாத குடர்நோயை உனக்கு முன் கொடுத்தாலும், எனது பாட்டிற்கு நீயும் அவ்வாளுடைய பிள்ளையாரும் எவ்வகையினும் ஒத்திருக்கின்றீரெனப் பொருள் கோடலும் ஒன்று.

'நாட்டிற்கிலாத' என்பது, தாப்பிசைப் பொருள் கோளாதலின், 'ஞானவமுது' என்பதற்கு முன்னும் கூட்டப்பட்டது. நாட்டிற்கு - வேற்றுமை மயக்கம்; அது நான்காவது ஏழாவதன்கண் வந்தது. குடர் - குடல் என்பதன் போலி. 'நல்கினும்' என்பதில், உம்மை இழிவு சிறப்பு. ஆன்மாக்கள் தம்மை இயக்கினன்றித் தாமே இயங்குந் தன்மை இன்மையின், ஆடுவார் போன்று பொதுவினின்று அவற்றை ஆட்டுவிப்பார் என்பார். '**பொதுவாட்டிற்கு வல்லவன்**' என்றார். எவ்வகை நோயினும் இந்நோய் மிகக் கொடிதென்பார், '**நாட்டிற்கிலாத குடர் நோய்**' என்றார். பொதுவிலிருந்தும் தாம் ஒருபாற் கோணி ஒருவற்கு நன்மையும் மற்றொருவற்குத் தீமையும் செய்தலான் குறைபாடு

அவற்கேயன்றி நுமக்கு இல்லை என்பார், "நல்கினும் என்" என்று கூறினார். சிவபெருமான் வேறுபாடாக நல்கினும் இருவீரையும் வழிபட்டுய்தற்குரிய என் தகுதிக்கு நீவிர் இருவீரும் எவ்விதத்திலும் ஒப்பாவீர் என்பதும் ஒன்று. **என் பாட்டிற்கு** - என் தகுதிக்கு; பாடு - தகுதி.

**திருநாவுக்கரசருக்குக் குடர்நோய் நல்கிய வரலாறு:** திருநாவுக்கரசர், தம் தாய் தந்தையர் சிவபதமடைந்த பின், தமக்கையாராகிய திலகவதியாரைக் கைவிட்டுச் சைவ சமயத்தினின்றும் சமண சமயத்திற்புக்குத் **தருமசேனர்** என்னும் பெயர் பெற்றிருந்தனர். அது கண்ட திலகவதியார் திருவதிகை வீரட்டானேச்சுரரை இரந்து வேண்ட, அப்பெருமானும் அவ்வேண்டுகோளுக்கிணங்கி, அவ்வம்மையார் கனவிலே தோன்றி, "அம்மா! நீ உன் மனக்கவலையை ஒழி; உன் தம்பி, நம்மை அடையும்பொருட்டே முன் தவஞ்செய்துள்ளான்; அத்தவத்தில் சிறிது வழுவுற்றதனால் புறச்சமயத்தைச் சார்ந்தான்; இனி அவனைச் சூலை நோயால் வருத்தி ஆட்கொள்வோம்" என்று அருள்புரிந்து மறைந்தனர். அவ்வாறே தருமசேனர் வயிற்றில் கொடிய சூலை நோய் உண்டாகிக் குடலைக் குடைதலுற்றது. அதனால் அவர் வருந்தித் தமக்குக் கைவந்த மந்திரத்தால் தடுக்கவும், அந்நோய் தடைப்படாமல் மேற்கொள்ள, பாம்பின் விடம் தலைக்கொண்டாற்போல மயங்கி மூர்ச்சையடைந்தனர். அது கண்ட சமணர் பலர், கமண்டலநீரை மந்திரத்தோடு குடிப்பித்தும், மயிற்பீலிகொண்டு தடவியும், நோய் தணியாமல் முன்னிலும் அதிகப்பட, அவர்கள் "இதனை நீக்குதற்கு யாம் வல்லமல்லோம்" எனக் கூறிக் கைவிட்டுச் சென்றனர். பின் தருமசேனர் தம் தமக்கையாராகிய திலகவதியாரை நினைந்து, "அவரே நமக்கு உதவி செய்ய வல்லவர்" எனத் துணிந்து தம்முடைய பாசுகனை அவரிடத்திற்கு அனுப்பினார். அப்பாசுகன் திருவதிகையிற்சென்று செய்தியைத் தெரிவிக்க, அவ்வம்மையார், "சமணர்களுடைய பள்ளிக்கு யான் வாரேன்," என்றனர். அச்செய்தியைப் பாசுகன் தருமசேனருக்குத் தெரிவிக்க, தருமசேனர், சிவபெருமானுடைய திருவருள் கூட்டுதலால், தமக்குக் கைதந்து வருகின்றவர்களைப் பற்றிக்கொண்டு, இரவில் ஒருவரும் காணாதபடி திருவதிகையிற்சென்று திலகவதியாரை அணுகி, "தமியேன் உம்மையே கதியென்று அடைந்தேன்; இனிக் கரையேறும் வழியை அருள் செய்யும்," என விண்ணப்பித்து, அவர் அடியில் விழுந்து அயர்ந்தனர். திலகவதியார் தம்பியரை நோக்கித் தமக்குப் பெருமான் கனவிலே அருள் செய்தபடி முடிந்ததை நினைந்துருகிக் கைகுவித்து வணங்கி, "இது திருவருட்செயலேயாகலான், அப்பெருமானையே வணங்கி அவருக்குத் திருத்தொண்டு செய்யும்," என்று கூறித் திருவருளை நினைந்து, ஐந்தெழுத்து ஓதித் திருநீற்றைக்

கொடுக்க, நாயனார் அதனை அன்போடு வணங்கி வாங்கி உடல் முழுமையும் அணிந்துகொண்டார்.

திலகவதியார், திருப்பள்ளியெழுச்சியிலே, திருவலகு திருமெழுக்குத் தொண்டு எடுத்துக்கொண்டு, திருக்கோயிலுக்குத் தம்பியாரை அழைத்துக்கொண்டு போனார். தம்பியார், வீரட்டானேச்சுரரை வலம் வந்து திருமுன்னர் விழுந்து வணங்கி எழுந்து நின்று அப்பெருமானுடைய திருவருளினாலே தமிழ்ச்செய்யுள் பாடும் ஆற்றல் உண்டாகப் பெற்று, தம்முடைய சூலை நோய் நீங்கும்பொருட்டும், பிற்காலத்தில் அன்போடு ஓதுகின்ற யாவருடைய துன்பமும் நீங்கும் பொருட்டும் சிவபெருமான்மீது,

"கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியே
னேற்றா யடிக்கே யிரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்றா தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதொடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட்டானத் துறையம் மானே."

என்னும் திருப்பதிகம் பாடியருளினார். உடனே சூலைநோய் நீங்கிற்று. அப்பொழுது நாயனார், தமக்கு உயிரையுந்தந்து முத்தி நெறியையுந் தந்த சிவபெருமானுடைய கருணைக்கடலில் அழுந்தி, ஆனந்தக் கண்ணீர் சொரிய நிலத்திலே விழுந்து புரண்டு, "சமண சமயப் படுகுழியில் விழுந்து மயங்கிய பாவியேன், இப்பேரின்ப வாழ்வைப் பெறும்படி செய்த சூலை நோய்க்குக் கைம்மாறென் செய்வேன்?" என்றார். அப்பொழுது வீரட்டானேச்சுரருடைய திருவருளினால் "நீ இனிமையாகிய தேவாரப்பதிகத்தைப் பாடினபடியால், உனக்கு **நாவுக்கரசு** என்னும் பெயரே வழங்குக" என ஓர் அருள்வாக்கு எழுந்தது. திருவதிகையிலுள்ள யாவரும் அதனைக் கேட்டு, "திருநாவுக்கரசு நாயனார், சமண சமயம் பொய்ந்நெறி என்பது புலப்படும்படி சைவ சமயத்திலே நுழைந்து திருவருள் பெற்றபடியால் உலகம் உய்ந்தது," என்று சொல்லிக் களிப்புற்றனர்.

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

**படியிலா நின்பாட்டி லாரூர! நனிவிருப்பன் பரம னென்ப**
**தடியனே னறிந்தனன்வான் றொழுமீச னினைத்தடுத்தாட் கொண்டு மன்றித்**
**தொடியுலா மென்கைமட' மாதர்பா னினக்காகத் தூது சென்று**
**மிடியிலா மனைகடொறு மிரந்திட்டு முழன்றமையால் விளங்கு மாறே. 3**

## பதவுரை

**ஆரூர** - நம்பியாரூரனே!
**வான் தொழும் ஈசன்** - தேவர்கள் தொழுகின்ற சிவபெருமான்,
**நினை** - நின்னை,
**தடுத்து ஆட்கொண்டும்** - திருமணம் செய்துகொள்ளா வண்ணம் தடுத்து அடிமை கொண்டும்,
**அன்றி** - அஃதல்லாமல்,
**தொடி உலாம்** - வளைகள் பொருந்தியுள்ள,
**மென் கை மட மாதர்பால்** - மெல்லிய கைகளையும் மடமையையுமுடைய பெண்களிடத்து,
**நினக்காக** - நின்பொருட்டு,
**தூது சென்றும்** - தூது போயும்,
**மிடி இலா** - வறுமையில்லாத,
**மனைகள்தொறும்** - வீடுகள் தோறும்.
**இரந்து இட்டும்** - அன்னம் ஏற்றுக் கொடுத்தும்,
**உழன்றமையால்** - நின் பின் திரிந்தமையாலும்,
**நின் படி இலா பாட்டில்** - நினது ஒப்பில்லாத பாட்டில்,
**பரமன் நனி விருப்பன் என்பது** - அப்பெருமான் மிக விருப்பமுடையான் என்பதை,
**அடியேன்** -,
**விளங்குமாறு** - விளங்கும்படி,
**அறிந்தனன்** - ஆராய்ந்து அறிந்தேன்.

## விளக்கவுரை

ஏனைய பாக்கள் போலாது பத்தி ரசமேயன்றிச் சிங்கார முதலிய ரசங்களும் நம்பியாரூரர் திருப்பாட்டில் குடிகொண்டன என்பார், **'படியிலா நின்பாட்டு'** என்றார். **படி** - ஒப்பு. **ஆரூர** - அண்மை விளி.

சிவபெருமான் முதிய அந்தணவுருக்கொண்டு புத்தூருக்கும் திருவெண்ணெய் நல்லூருக்குமுழன்று, அந்தணர் அவைமுன் வல் வழக்கிட்டுச் சாதித்து அடிமை கொண்டதும், திருவொற்றியூரிலும் திருவாரூரிலும் நாச்சிமாரிருவரையும் கூட்டுவித்தற்பொருட்டு, சங்கிலியார் கனவில் தூது சென்றதேயன்றிப் பரவையாரிடத்தும் நள்ளிரவில் அடிமலர் சிவக்க ஒருகாலன்றி இருகாற்றூது சென்றதும்; திருக்கச்சூரில் கடும்பகற்பொழுதில் இடும்பலி வேண்டிச் செல்வர் மனைதொறுஞ்சென்று இரந்து அமுது அளித்ததும், பாட்டின் விருப்பானன்றிப் பிறிதொன்றானன்று என்பார், **'பாட்டில் நனி விருப்பன் பரமன்'** என்றார். பரமன் என்பது, எவர்க்கும் முதற்கடவுள் என்பதை விளக்கிற்று.

**'என்பது'** - என்று சொல்லுதல்; இது பிறர் கூற்று. பிறர் கூற்றால் துணிதலின்றி, யானே இவ்வேதுக்களால் ஐயமின்றித் துணிந்தனன் என்பார், **'விருப்பன் என்பது உழன்றமையால் விளங்குமாறு அறிந்தனன்'** என்றார். விளங்குமாறு - விளங்கும்படி; **அன்றி** - வினையெச்சம். **வான்** - இடவாகுபெயர்; தேவர்களை உணர்த்திற்று. ஈசன் என்றது சிவபெருமானை. சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தடுத்தாட்கொண்டது, திருவெண்ணெய் நல்லூரில் நிகழ்ந்த

திருமணத்திலென்க. 'தொடியுலா மென்கை மடமாதர்' என்றது, பரவை நாச்சியாரும் சங்கிலி நாச்சியாருமாகிய இருவரை. இனி, மாதர் என்பதில் அர் போலியாக்கிப் பரவை நாச்சியாரை மாத்திரங்கூறுதலும் ஒன்று. மகளிர்க்கு அணி பலவற்றுள்ளும் வளையல் இன்றியமையா அணியாதலான், 'தொடியுலா மென்கை மடமாதர்' என்றார். இதனை,

> "இரங்குமே கலைசிலம் பன்றி யேனைய
> விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை
> மருங்கிறச் சுமப்பினும் வளைகைக் கில்லெனின்
> அரும்பிய முலையினார்க் கழகுண் டாகுமோ?"

என வரும் திருவிளையாடற்புராணம் வளையல் விற்ற படலச் செய்யுளானுணர்க. தொடி - வளையல்.

பரமன் நின் பாட்டில் நனிவிருப்பமுடைமையாலும், நட்பு மிகுதியாலும், தம்பிரான் தோழன் என்பதனாலும், தானே நீயாயிருத்தலினாலும், நின் கருமம் தன் கருமமாயெண்ணுதலானும் 'நினக்காகத் தூது சென்றும்' என்றார். தூது செல்லுதல் - தூது மொழிகளைச் சொல்லச் செல்லுதல். தானே வகுத்துக் கூறுதல், கூறியது கூறுதல் எனத் தூது இருவகைத்து. அவற்றுள் இது, முந்தியது.

வறிஞர் மனையில் செல்லின் இன்னடிசிலும் இனிய கறிகளும் இடையாவாகலின், செல்வர் மனைகடொறும் தேடிச் சென்று யாசித்தனர் என்பார், 'மிடியிலா மனைகடொறும் இரந்திட்டு' என்றார். மிடியிலா மனைகளென்றது, இடத்திலுள்ளார் தன்மையை இடத்தின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது என்க. இரந்து இட்டு - யாசித்து அமுது அளித்து; ஒரு சொல் நீர்மைத்தாகக் கொள்ளுதலும் ஒன்று.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கயிலையினின்றும் பூமியில் தோன்றுங்கால்,

> "செய்ய சேவடி நீங்கும் சிறுமையேன்
> மையல் மானுட மாய்மயங் கும்வழி
> ஐய னேதடுத் தாண்டருள் செய்யென"

வேண்டியாங்கு, ஆட்கொண்டும், தூது சென்றும், இரந்திட்டும் காத்தமை முதலிய புலப்படுப்பார், ஈசன் என்றார். ஈசன் என்பது அடியார்க்கு மறுமை இன்பமும் அருள்பவன் என்பதை விளக்கி நின்றது.

மடமாதர் என்புழி, மடமை - பிறர் உணர்த்துவதை உட்கொள்வதன்றித் தாம் உணர்ந்ததை வெளியிடாமை. மடப்பத்தையுடைய மாதர் எனினும் அமையும்; அப்பொருட்கு, மடம் - மென்மை; அழகுமாம். இனி, மடம் என்பதன் கடைக்குறையாகக்கொண்டு இளமையுடைய மாதர் எனலும் ஒன்று.

கொண்டும், சென்றும், இரந்திட்டும் என்பவற்றிலுள்ள உம்மைகள் மூன்றும் எண்ணின்கணின்ற உயர்வு சிறப்பு; இனி, தடுத்தாட்கொண்டு உழன்றமையாலும், தூது சென்று உழன்றமையாலும் என உம்மையைப் பிரித்து, உழன்றமையால் என்பதோடு சேர்த்து, அவ்வுழன்றமை என் பதனைக் கடைநிலைத் தீவகமாக ஆங்காங்குக் கூட்டிப் பொருள் கொள்ளுதலும் ஒன்று.

சுந்தரமூர்த்தி நாயனாரைத் த டு த் தா ட் கொ ண் ட வரலாறு: சுந்தரமூர்த்தி நாயனார், திருமுனைப்பாடி நாட்டிலே, திருநாவலூரிலே, ஆதிசைவ குலத்திலே, **சடையனார்** என்னும் சிவாசாரியருக்கு அவருடைய மனைவியாராகிய கற்பிலே சிறந்த **இசை ஞானியார்,** என்பவரிடத்திலே தோன்றினார். தாய்தந்தையர் **நம்பியாரூரர்** என்று பெயர் சூட்டினார். இவரது அரிய செயலைக் கண்டு திருமுனைப் பாடி நாட்டரசராகிய **நரசிங்க முனையரையர்** என்பவர், தாய் தந்தை யர் இசைவு பெற்று இவரை வளர்த்துக்கொண்டார். நம்பியாரூரர் பூணூல் அணியப்பெற்று, மறைகளை ஓதியுணர்ந்து, எல்லாக் கலைகளி லும் பெரும்புலமையுடையவராய், திருமணம் செய்தற்குரிய பருவத்தை அடைந்தார். அது கண்ட சடையனார், ஆதிசைவ குலத்திலே சடங்கவி சிவாசாரியருடைய மகளை மணம் பேசி முடித்து, திருமணம் செய்தற் குரிய நல்ல நாளையும் வேளையையும் உறுதி செய்து, புத்தூருக்குச் சென்று நம்பியாரூரரை மணக்கோலம் செய்வித்துத் திருமணப்பந்தரில் மணையிலிருக்கச் செய்தார். நம்பியாரூரர் மணையிலிருக்கும் தறுவாயில், சிவபெருமான், தாம் கயிலையிலே அவ்வாலால சுந்தரர்க்கு வாக்களித்த படி, அவரை ஆட்கொள்ளும்பொருட்டுக் கிழவேதிய வடிவங்கொண்டு அவ் விடத்திற்கெழுந்தருளி, யாவருங்காண நம்பியாரூரரை நோக்கி, "எனக்கும் உனக்கும் ஒரு வழக்கிருக்கின்றது; அது முடிந்த பின்பே நீ மணம் புரிதல் வேண்டும்" என்று அருளிச்செய்தார். நம்பியாரூரர் திடுக் கிட்டு, "அங்ஙனம் உளதேல், அதனை முடித்தன்றி யான் மணம் புரியேன்," என்று சொல்ல, அந்த ஐயர் யாவரையும் நோக்கி, "இந்தத் திருநாவலூரன் எனக்கு அடியவன் ; இவன் பாட்டன் எழுதித் தந்த அடிமையோலை இதுவே," என்றார். உடனே நம்பியாரூரர் "அந்தணருக்கு அந்தணர் அடிமையாதல் எங்கேனும் உண்டோ?" என்று சொல்லி, அவர் கையிலிருக்கும் ஓலையைப் பறித்துக் கிழித்தெறிந்தனர். ஐயர், சுந்தரமூர்த்தியைப் பிடித்துக்கொண்டு அவையினரை நோக்கி, "இது முறையோ !" என்று சத்தமிட, அவையினர் "அந்தணரே! நீர் எங்குள்ளவர்?" என்ன, ஐயர், "நாம் இருப்பது திருவெண்ணெய் நல்லூர்" என்றனர். வேதியர் யாவரும் "நீர் இருப்பது திருவெண்ணெய் நல்லூராயின், அங்கேயே இவ்வழக்கைப் பேசித் தீர்ப்புச் செய்ய வாரும்," என்று சொல்ல, ஐயர் அவ்வாறே அவர்களுடன் திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று வேதியர்களுடைய அவையில் நடந்தவற்றைச் சொல்லி, மூல ஓலையைக் காட்டி, **ஆட்சி ஆவணம் அயலார் காட்சி** என்னும் மூன்றினாலும் வழக்கை வென்று, தமக்கு இருப்பிடமாக

அவ்வூரில் திருவருட்டுறை என்னும் சிவாலயத்தைக் காட்டி, அதனுட் புகுந்து மறைந்தனர். உடன் சென்ற வேதியர் யாவரும் ஐயரைக் காணாது திகைத்து நின்றனர். அப்போது சுந்தரமூர்த்தி நாயனார், தம்முடன் வல்வழக்கிட்டுத் தம்மை அடிமை கொண்டவர் சிவபெருமானே எனத் தேர்ந்து, மிகுந்த ஆசையோடு அவரைத் தனியே தொடர்ந்து போய்க்கூப்பிடப் பெருமான் உமையம்மையுடன் ஏறூர்ந்து வெளிப்பட்டு, சுந்தரமூர்த்தி நாயனாருக்கு, "நீ நமக்குத் தொண்டனாயிருந்து பெண்கள் மேல் இச்சை வந்ததனால் நம்முடைய ஆணையின்படி பூமியிலே பிறந்தாய்; இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற இல்லறத் தொடர்பு உன்னைத் தொடராதபடி நாமே வெளியே வந்து ஆட்கொண்டோம்; நம்முடன் நீ வலிந்து பேசினமையால் வன்றொண்டன் என்னும் பெயர் பெற்றனை; நமக்கு அருச்சனையாவது பாட்டேயாதலின் தமிழ்ப்பாக்களைப் பாடுக" என்று அருளிச் செய்தனர். அதற்கு நாயனார், "என் சொல்லிப் பாடுகேன்?" என்றனர். கடவுள், "நீ முன்னே என்னைப் பித்தனென்றாய்; அதனையே அடியாக வைத்துப் பாடுக," என்ன, உடனே நாயனார், "பித்தா பிறைசூடி" என்னும் திருப்பதிகம் பாடியருளினார. கடவுள் நாயனாரைநோக்கி, "தொண்டனே! நீ இன்னும் நமது புகழைக் குறித்துப் பல வகையாகப் பாடுக," என்று அருள் செய்து மறைந்தனர்.

திருவொற்றியூரில் சிவபெருமான் சங்கிலி நாச்சியாரிடத்துத் தூது சென்றமையை,

"ஆண்டு கொண்ட வந்தணனா ரவருக் கருளிக் கருணையினா
னீண்ட கங்குல் யாமத்து நீங்கி வானி னிறைமதியந்
தீண்டு கன்னி மாடத்துச் சென்று திகழ்சங் கிலியாராந்
தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவிற் றோன்றினார்"

"தோற்றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமா
யாற்ற வன்பு பொங்கியெழுந் தடியே னுய்ய வெழுந்தருளும்
பேற்றுக் கென்யான் செய்வதெனப் பெரிய கருணை பொழிந்
நீற்றுக் கோல வேதியரு நேர்நின் றருளிச் செய்கின்றார்" [தனைய

"சாருந் தவத்துச் சங்கிலிகேள் சாலவென்பா லன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரி
லியாரு மறிய யானாள வுரியா னுன்னை யெனையிரந்தான்
வார்கொண் முலையாய்! நீயவனை மனத்தா லணைவாய்
[மகிழ்ந்தென்றார்"

என வரும் பெரிய புராணச் செய்யுள்களான் உணர்க.

**சிவபெருமான் பரவை நாச்சியாரிடத்துத் தூது சென்றது :**

சுந்தரமூர்த்தி நாயனார், திருவொற்றியூரில் **சங்கிலி நாச்சியாரை** மணம் செய்துகொண்ட செய்தியைக் கேட்டு, மிக்க சினங்கொண்டிருந்த முதல் மனைவியாராகிய **பரவையார்**, நாயனார் தம்மிடம் வருவதற்கு உடன்படாமல், 'வந்தால் உயிரைப் போக்கிக்கொள்வேன்!' என்றிருக்க, அதனையறிந்து பரமசிவனை வேண்டலுற்றனர். அப்பெருமான் ஓர் ஆதிசைவ வடிவங்கொண்டு, நள்ளிரவில் பரவையார்பால் தூது சென்று, அவ்வம்மையாரது ஊடலைத் தணிவித்து, நாயனாரை அவரிடத்துப் போம்படி செய்தனர்.

**திருக்கச்சூரில் சிவபெருமான் இரந்து அன்னம் படைத்த வரலாறு :**

சுந்தரமூர்த்தி நாயனார், திருக்கச்சூரிற்சென்று, ஆலயத்துட் புகுந்து பெருமானைத் தரிசித்து, புறத்தே வந்து, அமுது செய்யும் பொழுதாகியும் உணவு சமைப்போர் வாராமையால் மிக்க பசியினால் மதிற்புறத்தில்இருந்தனர். அப்பொழுதுசிவபெருமான் ஓர் அந்தணராகி, அவரிடத்திற்சென்று, "நீர் பசியினால் இளைப்புற்றிருக்கின்றீர்; யான் உமக்கு அன்னம் யாசித்து வருவேன். நீர் எங்கும் போகாமல் சிறிது பொழுது இங்கேயிரும்," என்று சொல்லி, அவ்வூரிலுள்ள பார்ப்பனர் இல்லங்களில் அன்னம் யாசித்துக் கொண்டுவந்து, நாயனாருக்குக் கொடுக்க, நாயனார் மகிழ்ச்சியோடு பெற்றுத் தாம் தம் தொண்டர் களுடனே அமுது செய்தார். உடனே பெருமான் அந்தணவுருக் கரந்து மறைந்தருளினார். நாயனார், அது கண்டு அன்னம் படைத்தவர் பெருமானே என்றுணர்ந்து மனங்கசிந்துருகி,

"முதுவா யோரி கதற முதுகாட்
டெரிகொண் டாடன் முயல்வானே !
மதுவார் கொன்றைப் புதுவீ சூடும்
மலையான் மகடன் மணவாளா !
கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக்
கண்டா லடியார் கவலாரே
அதுவே யாமா றிதுவோ கச்சூ
ராலக் கோயி லம்மானே!"

என்னும் திருப்பதிகம் பாடியருளினார் என்பதாம்.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேந்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்க
டொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே. 4

பதவுரை

**விளங்கு இழை** - விளங்குகின்ற அணிகலன்களையுடைய உமா தேவியார்,
**பகிர்ந்த** - பங்கிட்டுக்கொண்ட,
**மெய் உடை** - திருமேனியையுடைய,
**முக்கண் காரணன்** - மூன்று கண்களையுடைய உலகக் காரணனாகிய சிவபெருமானது,
**உரை எனும்** - திருவாக்கு என்று சிறப்பித்துச் சொல்லும்,
**ஆரண மொழியோ** - வேத வாக்கோ,
**ஆதிசீர் பரவும்** - அச்சிவபெருமானது சிறப்பைத் துதிக்கின்ற,
**வாதவூர் அண்ணல்** - திருவாதவூர்த் தலைவராகிய மாணிக்கவாசகரது,
**மலர் வாய் பிறந்த** - செங்குமுதம் போன்ற வாயினின்றும் உண்டான,
**வாசகத் தேனோ** - திருவாசகமாகிய தேன்தானோ,
**சிறந்தது** - மேன்மையுடையது,
**யாதோ என்குவீராயின்** - யாதோ என்று வினாவுவீரேல்,
**மன்பதை உலகில்** - மக்கட்பரப்பையுடைய இவ்வுலகத்தில்,
**வேதம் (பலகால்) ஓதின்** - வேதத்தைப் பல முறை ஓதினாலும், (அது கேட்டு)
**விழி நீர் பெருக்கி** - கண்களினின்றும் நீரைப் பெருகச் செய்து,
**நெஞ்சம் நெக்குருகி** - மனம் குழைந்துருகி,
**நிற்பவர் காண்கிலேம்** - நிற்கின்றவர்களை யாம் கண்டிலம்,
**திருவாசகம்** - திருவாசகத்தை;
**இங்கு ஒருகால் ஓதின்** - இப்பொழுது ஒருமுறை ஓதினாலும்,
**கருங்கல் மனமும்** - கருங்கல்லைப் போன்ற மனமும்,
**கரைந்து உக** - உருகிக் கசிய,
**தொடுமணல் கேணியில்** - தோண்டுகின்ற மணற்கேணி சுரக்குமாறு போல,
**கண்கள் நீர் சுரந்து** - கண்கள் நீர் பெருகி,
**பாய** - சுற்றும் பாய,

**மெய் மயிர்** - உடலிலுள்ள மயிர்கள்,
**பொடிப்ப** - சிலிர்க்க,
**விதிர்விதிர்ப்பு எய்தி** - நடுநடுக்க மடைந்து,
**அன்பர் ஆகுநர் அன்றி** - அன்பர் ஆகுபவரல்லது,
**மற்றையர் இலர்** - அன்பர் ஆகார் இலர்.

## விளக்கவுரை

உமாதேவியார், தமக்கும் சிவபெருமானுக்கும் வேற்றுமை யின்மையை உயிர்களுக்கு உணர்த்துவான்வேண்டித் தவங்கிடந்து அச்சிவபெருமானது இடப்பாகத்தைப் பெற்றனர் என்பார், '**விளங்கிழை பகிர்ந்த மெய்**' என்றார். விளங்கிழை - விளங்குகின்ற அணிகளையுடையாள் (உமாதேவி); வினைத்தொகைப் புறததுப் பிறந்த அன்மொழித்தொகை.

**பகிர்ந்த** - செம்பாதியாகக் கொண்ட. **மெய்யுடை முக்கண் காரணன்** என்பதற்கு, மெய்யையும் சந்திர சூரிய நெருப்புகள் என்னும் மூன்று கண்களையுமுடைய முதற்கடவுள் எனலும் ஒன்று. **ஆதி** - சிவ பெருமான்.

**ஆரணமொழியோ** - வேதமொழி; ஓ - வினா. **வாதலூர்** என்பது வாயு வழிபட்ட தலம்; இது பாண்டி நாட்டிலுள்ளது; இவ்வூரில் மணிவாசகப்பெருமான் தோன்றியமையால், 'வாதலூரண்ணல்' எனப் பட்டார். இனி, எவரால், எங்கர் விளக்கமுற்றதோ அவரை அந்நகர்த் தலைவரென்றல் ஆன்றோர் வழக்காதலின், 'வாதலூரண்ணல்' என்றார் எனினும் அமையும். இதனை, 'கொச்சைக் கிறைவன் சிவஞான சம்பந்தன்'' எனப் பிறர் கூற்றானுமறிக.

வேதம், தம் வழி நிற்பார்க்கு இன்பத்தையும், நில்லார்க்குத் துன்பத் தையும் பயந்தும், விதிவிலக்குகளை அனைவர்க்கும் உணர்த்தியும், உண்மையுணர்வு கொளுத்தியும், இம்மை மறுமைகளைத் தருதற்கே இறைவரால் அருளிச்செய்யப்பட்டனவென்பார், '**காரண னுரையெனு மாரண மொழியோ ?**' என்றார் ; இனி பிராமுகமாகக் கூறினார் எனினும் அமையும். மலர்வாய் என்பதற்கேற்ப, வாசகத்தேனோ என இயைபு உருவகம் செய்யப்பட்டது. தேனோ என்புழி ஓகாரம் வினா. திருவாசகம் மனத்திற்கினியதும் செவிக்கினியதும் வாய்க்கினியதுமாகி, மலர்த் தேனையொப்ப இனித்தும், எவரையும் சிவானந்த மயமாக்கும் என்பார், **மலர் வாய்ப் பிறந்த வாசகத் தேனோ**' என்றார்.

அன்பை விளைத்தலில், ஆரணம் சிறந்தது என்பது சித்தாந்த மன்று எனவும், திருவாசகம் சிறந்ததென்பது சித்தாந்தமாமெனவும் கூறும். அக்குறிப்புத் தோன்ற '**ஆரண மொழியோ வாசகத் தேனோ யாதோ சிறந்தது**' என்றும் கூறினார். இனி வேதத்திலும் திருவாசகம் சிறந்ததென்பது வாசகத்தேன் என உருவகித்தமையாலும் விளங்கும்.

பெருக்கி, உருகி, நிற்பார் எனச் சினைவினை முதலொடு செறிந்தது. வேதமோதின் அதன் உண்மைப் பொருள் அறிந்தார் சிலர் எவ்விடத்திலேனும் அரிதாக மனமுருகி நிற்றலும் கூடுமேனும், யாம் கண்கூடாகக் கண்டதில்லை' என்பார், '**உருகி நிற்பவர்க் காண்கிலேம்**' என்றார்.

மலரிற்பிறந்த தேன் என்பதொரு நயம் தோன்றுதற்கும், இவர் நூலில் ஞானவாணி குடிகொண்டமையை நாட்டுதற்கும் வாய் என வேண்டாது கூறினார். **என்குவீராயின்** - என்குவீரேல்; இஃது ஒரு சொன்னீர்மைத்து : கு - சாரியை. **கருங்கல் மனமும்** என்புழி, மலரன்மையின் இழிவின் மிகுதியைத் தெரிவிக்கின்றமையால் உம்மை இழிவு சிறப்பு. **தொடுமணற்கேணி** - வினைத்தொகை. கண்கள் நீர் சுரந்து பாய என்பது, பாய்தல் என்னும் இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றப்பட்டது. 'ஊருணி நீர் நிறைந்தற்று' என்புழிப் போல. மயிர்ப் பொடித்தல் - மயிர்க்கூச்செறிதல்; 'விதிர் விதிர்ப்பு' என்பது, இரட்டைக்கிளவி. இதனை, 'இரட்டைக்கிளவி யிரட்டிற் பிரிந்திசையா' என்பதனாலறிக.

ஓதுவோரும் கேட்போரும் அன்பின் பயனாகும் முத்திப் பேறுடையராதலை முன்னர்த் தனித்தனி கூறுபவாகலின் அன்பராகுநரென்றது. அவ்விரு திறத்தினரையும் என்க. **மற்றையர்** - அன்பராகாதவர். இது சுட்டியதற்கினம்.

**உமாதேவியார் சிவபெருமானது மெய்யைப் பகிர்ந்துகொண்ட வரலாறு :** பிருங்கி முனிவர், பரமசிவனை மாத்திரம் வலம் செய்யக் கண்ட உமாதேவியார், நாயகனை நோக்கி, "பிருங்கி முனிவர் என்னையும் வலம் செய்யாமைக்குக் காரணம் யாது?" என வினவ, அதற்குப் பெருமான், "தமது விருப்பங்கள் நிறைவேறப்பெற விரும்புகின்றவர் உன்னையும், வீடுபெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர்" என, அது கேட்ட தேவியார் பெருமானிடத்தினின்றும் என்றும் பிரியாதிருக்குமாறு தவம் புரிந்து பெற்றனர் என்பதாம்.

**மாணிக்கவாசகர் திருவாசகம் பாடினமை :** சிவபெருமானால் ஆளப்பட்டு ஆளுடைய அடிகள் என்னும் பெயரையுடைய வாதவூரர், சிதம்பரத்தில் வந்து தங்கித் திருப்படையாட்சி முதலியவற்றைப் பாடி, சிவானந்தப் பெருவாழ்வையுடையவராயிருக்கும் நாளில், ஒரு நாள் பொன்னம்பலமுடையார் வேதியவுருக்கொண்டு ஒரு புத்தகத்தைக் கையிலேந்திச் சிவந்த திருவடிகள் நோவ எழுந்தருளி எதிராக நின்றார். நின்ற வேதியரைத் திருவாதவூரர் பார்த்து, "இரும்" என்று சொல்ல, அவர் இருந்த பின்பு, "வேதியர்களிற்சிறந்தவரே! நீவிர் யாண்டுள்ளவர்? இங்கு வந்த காரியம் யாது?" என வினவ, வேதியர், "சிற்சபையிலாடுகின்ற கடவுளைப் பத்தியினால் நீர் பாடிய தமிழ்ப்பாடல் முழுமையும் ஓத வேண்டுமென்று இங்கு வந்தேன்; அப்பாடல்களை யான் எழுதிக்

கொள்வேன்,'' என்றார். வாதவூரரும் அதற்கிசைந்து திருவாசகத்தைச் சொல்லினர். சொல்லிய பாடல்களையெல்லாம் பொன்னம்பலத்தில் ஆடுகின்ற கடவுளானவர், தமது அருமைத் திருக்கரத்தால் ஏட்டில் தெளிவாய் எழுதின பின்பு, வாதவூரரைப் பார்த்து, "அம்பலவாணரைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு ஒரு கோவை பாட வேண்டும்,'' என்றார். அங்ஙனமே வாதவூரரும் பாட, அதனையும் பெருமான் எழுதி முடித்து, முடிவில், "திருவாதவூரர் சொல்லிய இந்தத் திருவாசகம் பொன்னம்பலத்திலே நடனமாடுகின்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையான் கையெழுத்தாகும்,'' என்று மைக்காப்புமிட்டு வாதவூரர் பெருமையை யாவருக்கும் அறிவிக்க நினைத்து, அம்பலத்தின் வாசற்படியில் திருவாசகத் திருமுறையை வைத்து மறைந்தருளினார். பூசை செய்யும் ஓர் அந்தணன் அத்திருமுறையைக் கண்டு தில்லையிலுள்ளார்க்குத் தெரிவிக்க, அவர்களும் "இஃதென்ன அதிசயம்'' என்று ஓடோடி வந்து அப்புத்தகத்தைப் பார்த்தார்கள். அதன் இறுதியில் "திருச்சிற்றம்பலமுடையான் கையெழுத்து'' என்று இருத்தலையும் கண்டார்கள். உடனே வாதவூரரிடம் சென்று அதன் பொருளைக் கேட்டார்கள். அவர், "இத்தமிழ் நூலுக்குப் பொருள் இவர்தாம்,'' என்று அம்பலவாணரைக் காட்டி அவையிலே எல்லோருங்காண மறைந்தருளினார் என்பதாம்.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த வன்னையோ முன்னின்—னிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தா ளார்சொல் லெனக்கு. 5

பதவுரை

சம்பந்தா - திருஞானசம்பந்தப் பெருமானே!
**இலை படர்ந்த**-தாமரை இலைகள் பரவிய,
**பொய்கையிடத்து** - (பிரம தீர்த்தம் என்னும்) தடாகக் கரையில்,
**அழுதல் கண்டு** - நீ அழுதலைப் பார்த்து,
**முலை சுரந்த** - திருமுலைப் பால் சுரந்த,
**அன்னையோ** - தாயாகிய உமா தேவியோ?
**முன்** - முன்னே,
**நின் நிலை விளம்ப** - (சோழ நாட்டு அந்தணன் ஒருவன்) நினது நிலையைச் சொல்லும் போதே,
**கொங்கை சுரந்த**- திருமுலைப்பால் சுரந்த,
**அருள் கோ மகளோ** - அருட் பெருக்கையுடைய மங்கையர்க் கரசியோ?
**இங்கு** - இவ்வுலகத்தில்,
**உயர்ந்தாள்** - இவ்விருவருள் உயர்ந்தவள்,
**ஆர்** - யார்?
**எனக்கு சொல்** - எனக்குச் சொல்வாய்,

## விளக்கவுரை

**இலை** - தாமரையிலை ; பொய்கைக்கு அழகாகப் புகழப்படுவது அதுவாகலான். **பொய்கை** - பிரமதீர்த்தம். பொய்கை என்பது, அதன் கரையை உணர்த்தினமையால் முதலாகுபெயர். **அழுதல்** - தோணியப் பரையும் திருநிலை நாயகியையும், 'அம்மா! அப்பா!' என்று அழைத்து அழுதல்.

சிவபெருமான் பணிக்கத் திருமுலைப்பால் சுரந்து பொன் வட்டிலிற் கறந்து அப்பாலையூட்டியருளினளாதலால், இறைவியை, '**அழுதல் கண்டு முலை சுரந்த அன்னையோ**' என்றார். முன் என்பதனை இடைநிலை விளக்காகக்கொண்டு 'முன் முலை சுரந்த அன்னையோ ?' எனவும் 'முன் நிலை விளம்பக் கொங்கை சுரந்த அருட்கோமகளோ?' எனவும் கூறினும் அமையும்.

'முலை' என்பது அதன் பாலையுணர்த்தினமையின் முதலாகு பெயர். பாலின் சுரத்தல் என்னும் இடத்து நிகழ்பொருளாகிய தொழில் முலையாகிய இடத்தின்மேலேற்றப்பட்டது. **அன்னை** - உமாதேவியார். '**நிலை விளம்பல்**' என்பது சோணாட்டந்தணர் ஒருவர் எய்தி உணர்த் தினமையைச் சுட்டி நின்றது.

இதனை, "திருமுலைப் பாலினொடு" என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளானுணர்க. '**விளம்ப**' என்பது, முற்பிற்பாடின்றி நிகழ்காலத்தில் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட் டாய் வந்த செயவெனெச்சம். கொங்கை என்பது, அதன் பாலை யுணர்த்தலின் முதலாகுபெயர். 'சுரத்தல்' என்னும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றப்பட்டது. மங்கையர்க் கரசியார் என்னும் பொருள்படக் **கோமகள்** என்றார்.

அன்பின் முதிர்வே அருள் என்பதை, 'அருளென்னும் அன்பீன் குழவி' என்பதனாலும், அன்பை முலைப்பாலும் கண்ணீரும் வெளிப் படுத்தலானும், '**கொங்கை சுரந்த அருட்கோமகளோ**' என்றார். அன்பி னால் முலைப்பாலும் கண்ணீரும் உண்டாதலை, '**இல்லா முலைப் பாலும் கண்ணீரும் ஏந்திழைபா னல்லா யுளவாம்**' என்பதனாலறிக.

"அன்னையோ கோமகளோ" என்பனவற்றிலுள்ள ஓகாரங்கள் இரண்டும் வினாப் பொருள். 'இங்கு' என்பதை அசையாகக் கோடலும் ஒன்று. நின் நிலை விளம்ப அவற்றைக் கேட்கும்போதே கொங்கை சுரந்தாரேனும், அதனையூட்டுதற்செயல் இவரிடத்து நிகழாமையின், அன்னை என்னாது, 'கொங்கை சுரந்த அருட்கோமகள்' எனப் பராமுக மாகக் கூறினாரேனும், பிள்ளையினியல்பைக் கேட்புழி முலை சுரத்தல் தலையன்பும், கண்டுழி முலை சுரத்தல் இடையன்பும், அழுதல் கண்டு பிறர் தூண்ட முலை சுரத்தல் கடையன்புமாம் ஆதலின், அருட்

கோமகள் அம்பிகை போலாது, தலையன்புடையராயினமை தோன்ற 'உயர்ந்தாளார்' என்றார். 'தேவரீர் ஞானசம்பந்தராய் இருவழியல்பும் அறிந்துள்ளீராதலின், உண்மை உணர்த்துக' என்பார், 'சம்பந்தா எனக்குச் சொல்' என்றார். நிலை விளம்பக் கொங்கை சுரந்ததை,

"சுரந்த திருமுலைக்கே துய்யதிரு ஞானஞ்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த
தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு"

என்று **திருக்களிற்றுப்படியார்** கூறுவதாலறிக.

## மங்கையர்க்கரசியார் கொங்கை சுரந்தமை :

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாருமாகிய இருவரும், 'பொய்ச்சமயமாகிய சமணங்கெடச் சைவந்தழைக்கச் செய்யுமவர் யாவரோ!' என்று மனங்கவன்று, சோமசுந்தரக் கடவுளையடைந்து வழிபட்டிருக்க, ஒரு நாள் ஓர் அந்தணர் சோமசுந்தரக் கடவுளை வணங் கும்பொருட்டு அங்கு வந்தனர். அவரை அவ்விருவரும், "ஐயரே! நீவிர் யாண்டுள்ளவர்? சிறப்பான செய்தி யாது?" எனக் கேட்க, அதற்கு அவர், 'யான் இருப்பது சீர்காழி; அங்குச் சிவபாதவிருதய ரென்று ஒருவர் உளர். அவருக்குச் சிவனருளால் ஒரு குழந்தை தோன்றியது. அக்குழந்தைக்கு மூன்றாம் ஆண்டிலே உமாதேவியார் தமது திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்திலே கறந்து ஞானத்தோடு கலந்து ஊட்டினார். உடனே அப்பிள்ளையார் வேதாகம சாத்திரங்களை எல்லாம் தமிழிலே துதிப்பாக்களாகப் பாடி, சிவபெருமானிடத்திலே பொற்றாளமும் முத்துப் பல்லக்கும் முத்துச் சின்னமும் முத்துப் பந்தரும் படிக்காசும் பெற்று, திருமறைக்காட்டிலே திருக்கதவடைக்கப் பாடி, சிவத்தல யாத்திரை செய்கின்றார். அவர் இறைவழிபாட்டின் பொருட்டு இங்கும் வருவார்" என்றனர். அது கேட்ட மங்கையர்க்கரசி யாரும் குலச்சிறையாரும் மகிழ்ச்சி எய்தி, உடனே நாயனாருக்கு ஓர் ஓலையெழுதி அவ்வந்தணர் கையிற்கொடுத்தனுப்பிவிட்டுப் பெரு மானை வணங்கித் திரும்பினார்கள். மங்கையர்க்கரசியார் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரைத் தமக்குக் காதல் மைந்தராக முறை கொண்டமையால், உடனே முலைப்பால் சுரத்தலோடு அவ்விருவரும் வீட்டிற்குப் போயினர் என்பதாம்.

இவ்வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்துக் கூறாராயினும், இந்நூலாசிரியர் பிறர் நூன்மதமேற்கொண்டு கூறினார் என்க.

# திருநாவுக்கரசர்

## கட்டளைக் கலித்துறை

எனக்கன்பு நின்பொருட் டெய்தாத
தென்கொல்வெள் ளேறுடையான்
றனக்கன்பு செய்திருத் தாண்டக
வேந்தவித் தாரணியி
னினக்கன்பு செய்கின்ற வப்பூதி
யைச்சிவ நேசமுறு
மினர்க்கன்பு செய்நம்பி யாரூர
னேத்து மியல்பறிந்தே.

### பதவுரை

**வெள் ஏறு உடையான் தனக்கு** - வெள்ளிய ஏற்றினை ஊர்தியாக வுடைய சிவபெருமானை,
**அன்பு செய்** - அன்பு செய்விக்கின்ற,
**திருத்தாண்டக வேந்த** - திருத்தாண்டகமென்னும் தேவாரப் பாக்களைப் பாடியருளிய திருநாவுக்கரசே!
**இத்தாரணியில்** - இவ்வுலகத்தில்,
**நினக்கு** - நின்னிடத்து,
**அன்பு செய்கின்ற** -,
**அப்பூதியை** - அப்பூதி நாயனாரை,
**சிவநேசம் உறும்** - சிவபெருமானிடத்து அன்புற்ற,
**இனர்க்கு** - அடியவரிடத்து,
**அன்பு செய்** - அன்பு செய்கின்ற;
**நம்பி ஆரூரன்** - சுந்தரமூர்த்தி நாயனார்,
**ஏத்தும் இயல்பு அறிந்தும்** - துதிக்கின்ற இயல்பை அறிந்திருந்தும்,
**எனக்கு** -,
**அன்பு** - அன்பானது;
**நின்பொருட்டு** - நின்னிமித்தம்,
**எய்தாதது** - அடையாதது,
**என்** - யாது காரணம்?

### விளக்கவுரை

'வேந்த! நம்பி ஆரூரன் அப்பூதியை ஏத்தும் இயல்பறிந்தும் நின்பொருட்டு எனக்கு அன்பு எய்தாதது என்?' எனக் கூட்டுக. கொல் - அசை. 'சுந்தரமூர்த்தி நாயனார் நின் அடியவராகிய அப்பூதி நாயனாரைத் துதித்தது. கேள்வியளவானாய வரலாறன்றி அருள் வாக்காகிய திருத்தொண்டத் தொகையானும் அறிந்து வைத்தும், நின்பால் அன்பு தோன்றாமைக்கு யாது காரணம்?' என்பார், 'எனக்கன்பு நின்பொருட்டு எய்தாதது என்!' என்றார். இனி, 'அன்பு எய்தாதது என்கொல்' என்பதற்கு அன்பு தோன்றாதது என்ன வியப்பா எனலும் ஒன்று. அப்பொருட்குக் கொல் வியப்பிடைச்சொல்.

சிவபெருமான் ஏறிச் செலுத்துவது தரும விடையாதலின், 'வெள்ளேறுடையான்' என்றார். ஏறு - இடபம். மூவர் பாடிய தேவாரப் பாக்களுள் இத்திருத்தாண்டகம் இறைவனது அருட்டிறங்களையே இனிது புகழ்ந்துளவாகலின், அதில் இறைவற்கு மிக்க விருப்பம் உண்டாகின்றமையின், 'அன்புசெய் திருத்தாண்டகம்' என்றார்.

தாண்டகமாவது, ஒவ்வோரடியும் இருபத்தாறெழுத்தின் மிக்குவர நான்கடியால் பாடப்படும் பாட்டு. பெருமானை இப்பாடலால் பெரிதும் துதித்துளாராகலின் திருத்தாண்டகவேந்தர் எனத் திருநாமம் பெற்றார் என்க. வேந்த - அண்மை விளி; ஈறு அழிதலினால்.

அப்பூதியடிகள் திருநாவுக்கரசு நாயனாரை வழிபட்டதும், அவ்வப் பூதியடிகளைத் திருத்தொண்டத்தொகையில் ஆளுடைய நம்பிகள் துதித்ததும் நம் கண்களுக்குப் புலப்படாத வேறுலகத்தன்று, கண் கூடாக இவ்வுலகத்திலே இத்தமிழ்நாட்டிலே என்பார், 'இத்தாரணியில்' என்றார். இப்பொருட்கு இத்தாரணியில் என்பதனை 'அன்பு செய்கின்ற அப்பூதி' என்பதனோடும், 'நம்பியாரூரன் ஏத்து மியல்பறிந்தே' என்பதனோடும் இயைக்க. அப்பூதியடிகள் அன்பு செய்தமையை,

"அந்தணரின் மேம்பட்ட வப்பூதி யடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளந் தருதண்ணீர்ப்
பந்தர்பல வாண்டவர செனும்பெயராற் பண்ணினமை
வந்தணைந்த வாகீசர் கேட்டவர்தம் மனைநண்ண"

என வரும் பெரிய புராணச் செய்யுளானும் அறிக. இனி, 'அப்பூதி யடிகளிடத்துச் சிவநேசமுற்ற அடியவரிடத்து அன்பு செய்கின்ற நம்பியாரூரன்' எனினும் அமையும். இதனை, 'ஒரு நம்பி யப்பூதியடி யார்க்கு மடியேன்' என்னும் திருத்தொண்டத்தொகையானும் உணர்க.

அன்பு செய்கின்ற என்பது, இயல்பு பற்றி வந்த காலவழுவமைதி. உறு - மிகுதிப்பொருட்டுமாம். இனர்க்கு - இனரிடத்து, வேற்றுமை மயக்கம். நம்பி - ஆடவரிற்சிறந்தவன்; 'நம்பி' என்பது சிறப்புப் பெயரும், 'ஆரூரன்' என்பது மூதாதைக்குரிய முறையிற் போந்த இயற்பெயருமாதல் பற்றி, 'நம்பியாரூரன்' என முறைப்படுத்தார். 'ஏத்தும்' என்னும் எச்சத்தை 'இயல்பு' என்பதனோடு இயைத்து, அறிந்து என்பதில் உம்மை விகாரத்தாற்றொக்கதாகக் கொள்க; அல்லது, ஏத்து என்பதனை வினைத்தொகையாக்கி அதிலுள்ள உம்மையைப் பிரித்து, அறிந்து என்பதனோடு கூட்டினும் அமையும்.

## அப்பூதியடிகள் வரலாறு

சோழ மண்டலத்திலே, திங்களூரிலே, பார்ப்பனக் குலத்திலே அப்பூதியடிகள் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் இல்லறத்தை மேற்கொண்டு, சிவபத்தி அடியார் பத்தியில் மிகச்சிறந்தவர். திருநாவுக்கரசு நாயனாருடைய பெருமையைக் கேள்வியுற்று அவர்மீது மிக அன்பு கூர்ந்து தம்முடைய வீட்டிலுள்ள அளவை, தராசு, பசு, எருது, பிள்ளை முதலிய யாவற்றிற்கும் அந்த நாயனாரது பெயரை

இட்டு வழங்கிக்கொண்டு வருவார். இன்னும் அவர்மீது வைத்த பேரன்பினால் திருமடங்கள், தண்ணீர்ப் பந்தர்கள், குளங்கள், நந்தன வனங்கள் முதலியவற்றை அந்நாயனாரது பெயரினாலேயே செய்து கொண்டிருந்தனர். இருக்கும் நாளிலே ஒருநாள் திருநாவுக்கரசு நாயனார் திங்களூருக்கு அண்மையிலுள்ள வழியே செல்லும்போது ஒரு தண்ணீர்ப் பந்தரையடைந்து, அதில் தம்முடைய பெயரே எங்கும் எழுதப்பட்டிருத்தலைக் கண்டு, அங்குள்ள சிலரால் அப்பூதியடிகளின் கொள்கையையறிந்து, அவருடைய வீட்டுத் தலைக்கடை வாயிலிற் செல்ல, உள்ளிருந்த அப்பூதியடிகள் கேள்வியுற்று விரைவாக வந்து வணங்கி நிற்க, நாயனார், "அப்பூதியடிகள் நீர்தானோ? அடியார்கள் பொருட்டு நீர் வைத்த தண்ணீர்ப் பந்தரிலே உம்முடைய பெயரை எழுதாது வேறொரு பெயரை எழுதியதற்குக் காரணம் யாது?" என்று வினவ, அப்பூதியடிகள் அதனைக் கேட்டதும், "திருநாவுக்கரசு நாயனார் என்னும் பெயரோ வேறொரு பெயராகும்? அவரது மகிமையை நீர் அறிகிலீர் போலும்! நீவிர் யாவர்? எங்கேயுள்ளவர்? சொல்லும்," என்றார். அதற்கு நாயனார், "பரமசிவனால் ஆட்கொள்ளப்பெற்ற அப்பெயருடையவன் யான்," என்றனர். உடனே அப்பூதியடிகள் நடுக்க முற்று, கைகளைக் குவித்து நாயனாரது திருவடிகளைப் பணிய, நாயனாரும் எதிர்வணங்கி எழுந்தருளினார்; தம் மனைவியார் மக்கள் முதலாயினாரையும் பணிவித்தனர். அப்பூதியடிகள் நாயனாருக்குத் திருவமுது செய்விக்க விரும்பித் தம் மைந்தராகிய மூத்த திருநாவுக் கரசை நோக்கித் 'தோட்டத்திற்சென்று வாழைக்குருத்தை அரிந்து கொண்டு வா' என்றனுப்ப, அவர் வாழைக்குருத்தை அரியப் புகுந்த பொழுது பாம்பு தீண்டி இறந்துபட்டனர். அச்செயலைத் திருநாவுக்கரசு நாயனார் அறிந்து அச்சவத்தைச் சிவாலயத்தின் முன் கொணர்வித்து,

"ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே"

என்னும் திருப்பதிகம் பாடியருள, உடனே அம்மைந்தர் உயிர் பெற்றெழுந்தனர். அப்பூதியடிகளும் மனைவியாரும் தம் புதல்வர் பிழைத்தமையைக் கண்டும் அதைக் குறித்து மகிழாமல், நாயனார் திருவமுது செய்யாதிருந்தமையால் சிந்தை நொந்திருந்ததைத் திருநாவுக்கரசு நாயனார் அறிந்து, திருவமுது செய்தருளினார். அப்படியே சில நாள் அங்கிருந்து, பின் திருப்பழனத்திற்குப் போயினர். அப்பூதியடிகள் திருநாவுக்கரசு நாயனாருடைய திருவடிகளைத் துதித்தலே தமக்குப் பெருஞ்செல்வமெனக் கொண்டு வாழ்ந்திருந்து, சில காலஞ்சென்ற பின் பரமசிவனுடைய திருவடிகளையடைந்தார் என்பதாம்.

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அறிந்து செல்வ முடையானா
மளகைப் பதியாற் றோழமைகொண்
டுறழ்ந்த கல்வி யுடையானு
மொருவன் வேண்டு மெனவிருந்து
துறந்த முனிவர் தொழும்பரவை
துணைவா! நினைத்தோ ழமைகொண்டான்
சிறந்த வறிவு வடிவமாய்த்
திகழு நுதற்கட் பெருமானே. 7

பதவுரை

**துறந்த முனிவர்** - முற்றத்துறந்த முனிவர்கள்,
**தொழும்** - தொழுகின்ற,
**பரவை துணைவா** - பரவை கேள்வனே!
**சிறந்த அறிவு வடிவமாய்**-இயற்கை யறிவு வடிவமாய்,
**திகழும்** - விளங்குகின்ற,
**நுதல் கண் பெருமானே** - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் றானே,
**அறிந்து** - தெரிந்து,
**செல்வம் உடையான்** - பொருட் செல்வத்தையுடையவனும்,
**அளகைப் பதியான் ஆம்** - அளகாபுரிக்குத் தலைவனுமாகிய குபேரனை,
**தோழமை கொண்டு** - நட்புக் கொண்டு,
**உறழ்ந்த** - தம்மையொத்த,
**கல்வியுடையானும்**-கல்விச் செல்வ முடையவனும்,
**ஒருவன் வேண்டுமென** - ஒருவன் வேண்டுமென்று,
**இருந்து** - தேடியிருந்து,
**நின்** - நின்னை,
**தோழமை கொண்டான்** - நட்புக் கொண்டான்.

விளக்கவுரை

கல்விச் செல்வமும் பொருட்செல்வமும் உடையார் நட்பு ஒருவற்கு இன்றியமையாததென்பார், **'அறிந்து'** என்றார். பொருட்செல்வம் இழிந்தார்கண்ணும் உளதொன்றாகலின் அரிது நாடுதலின்றி எளிதிற் பெற்றனர் என்பார் **'செல்வமுடையானாம் அளகைப் பதியாற் றோழமை கொண்டு'** என்றார். தாம் இயற்கை அறிவினராதலின் தமக்கிணை யொத்துக் கல்வியிற்சிறந்தாரைப் பெறுதலருமையான் நெடுங்காலம் தேடியிருந்தனர் என்பார, **'உறழ்ந்த கல்வியுடையானும் ஒருவன் வேண்டு மென இருந்து'** என்றார். இனி உறழ்ந்த என்பதற்கு அப்பொருட் செல்வத்திற்கொத்த எனப் பொருள் கூறலும் ஒன்று. உடையானும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. இருந்து - காத்திருந்து எனினுமாம்.

**'துறந்த முனிவர் தொழும் பரவை துணைவா'** என்பதற்குத் துறந்த முனிவராற்றொழப்படும் பரவை துணைவா எனச் செயப்பாட்டு வினை யாக்கலும் ஒன்று. பரவை துணைவன் - சுந்தரமூர்த்தி நாயனார்.

முனிவர் என்றது உபமன்யு முதலாயினாரை. தொழும் என்னும் எச்சத்தைப் பரவையோடு இயைப்பாரும் உளர். 'நினை' என்பது, நெற்றிக்கண் படைத்தவரே தோழமை கொள்வாராயின் நின் பெருமை புகலவெளிதோ என்பது தோன்ற நின்றது. 'சிறந்த அறிவு' என்றது, இயற்கையறிவை. 'பெருமானே' என்பதில் ஏகாரம் சிறப்பு.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

**பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள**
**மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே**
**வாசக மதற்கு வாச்சியந்**
**தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே. 8**

#### பதவுரை

**பெருந்துறை புகுந்து** - திருப்பெருந் துறையென்னும் திருப்பதியை அடைந்து,

**பேரின்ப வெள்ளம் மூழ்கிய** - பேரின்பமாகிய வெள்ளத்தில் அமிழ்ந்த,

**புனிதன்** - பரிசுத்தனாகிய மணி வாசகப் பெருமான்,

**மொழிந்த வாசகமே** - சொல்லிய திருவாசகமே,

**வாசகம்** - வாசகமாகும்;

**அதற்கு** - அத்திருவாசகத்திற்கு,

**வாச்சியம்** - வாசகத்தால் உணர்த் தப்படும் பொருள்,

**தூசு அகல் அல்குல்** - ஆடை யணிந்த அகன்ற அல்குலையும்,

**வேய் தோள்** - மூங்கிலையொத்த தோளையுமுடையஉமாதேவியை

**இடத்தவனே** - இடப்பாகத்திற் கொண்ட சிவபெருமானே யாவான்.

#### விளக்கவுரை

'**பெருந்துறை**' என்றது பாண்டி நாட்டுத் திருப்பதியுள் ஒரு பதியை. சிறு துறையிற்புகுந்தால் குறைபாடின்றி மூழ்க முடியாதாகலின் சிவபெருமான் அருளால் வியன் துறை வாய்ந்ததென்பார், 'பெருந்துறை புகுந்து' என்றார். இளமை துறந்தே இம்மை மறுமையின்பங்கள் வெறுப்புற்றமையாலும் அதனால் தூயோராய்த் தோன்றினமையாலும், '**பேரின்ப வெள்ள மூழ்கிய புனிதன்**' என்றார். பேரின்ப வெள்ளம் என்றது சிவானந்த வெள்ளத்தை. வெள்ளம் - பெருக்கு.

ஒவ்வொரு சொல்லும் மாணிக்கம் போலுதலின், மாணிக்கவாசகரெனச் சிவபெருமானால் திருநாமம் பெற்றாராகலின், இவர் வாசகத்தையொத்த வாசகம் பிறிதின்றென்பார், '**மொழிந்த வாசகமே வாசகம்**' என்றார். வாசகமே என்புழி ஏகாரம் தேற்றம். அதற்கு என்பது, மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தைச் சுட்டி நின்றது. வாச்சியம் - சொல்லாற்பெறும் பொருள் மொழிந்த

வாசகத்திற்குப் பொருளறிவுறுப்பான் அனைவரும் வேண்ட, செப்புவா மெனச் செம்பொன்னம்பலத்தையடைந்து 'இவரே பொருள்' என இறைவரைச் சுட்டிக்காட்டி மறைந்தனராகலின் சொற்பொருள் உருவாய் விளங்கும் அம்மையப்பரே அதற்குப் பொருளாவார் என்பார், **'அதற்கு வாச்சியம் தூசக லல்குல் வேய்த்தோ ளிடத்தவனே'** என்றார். அல்குல் வேய்த்தோள் - உமாதேவி; அன்மொழித்தொகை. 'தோளி டத்தவனே' என்பதற்குத் தோள்களையுடைய முதல்வியை இடப் பாகத்திலுடைய தவவடிவினராகிய சிவபெருமானே எனினும் அமையும். அதற்கு, தோள் இடம் தவன் எனக் கண்ணழிக்க; தவன் - கணவனு மாம். உயிர்களுக்கு இன்ப நிகழ்ச்சியின்பொருட்டு இன்புறுவான் போன்று உமாதேவியை இடப்பாகத்திற்கொண்டிருப்பினும், திருக்கயிலையைச் சூழ்ந்த நாற்பெருமலைகளுள், ஆமார்த்த மலையில் திருமாலுக்கும், புட்பமலையில் நான்முகனுக்கும், கோளமலையில் முனிவர்க்கும், சந்தான மலையில் தேவர்கட்கும், திருக்கயிலையில் திருநந்திதேவர், சனகர் முதலாயினோர்க்கும் மெய்ஞ்ஞானத்தை அறிவுறுத்திக் காமனை முனிதல் நெடுஞ்சடை முடித்தல் கல்லாடை புனைதல் முதலிய அருட்சின்னமுடையவராயமர்தலின் யோகியே என்பார். இரட்டுற மொழிதற்பொருள்படத் **'தவனே'** என்று சாற்றினார் என்க.

**'தோளிடத் தவனே வாச்சியம்'** என்றது புறப்பொருளை நோக்கி நிற்கும் நிலையில் சத்தி எனவும், ஒளியும் ஞாயிறும் போல முதல்வ னொருவனே ஒருமைப்பட்டிருக்கை என்னும் இயைபால் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும் உரிமை தோன்றலான். ஒருமைப்பட்டிருக்கை என்னும் இயைபாவது - பொருளால் ஒன்றேயாகியும் ஒருவாற்றால் வேறுபட்டிருத்தற்குரிமையுடைமை. 'இடத்தவனே' என்பதில் ஏகாரம் தேற்றம்.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

இடுகாட்டுண் மாத ரெலும்பிற் புரண்மால்
சுடுகாட்டு ளாடுவாற் சுட்டி—னொடுகாட்டுஞ்
சம்பந்தா! என்புநின்பாற் றந்தாக்கிக் கொண்டிலனென்
கும்பந்தா மென்னுமுலைக் கொம்பு. 9

பதவுரை

**சுடுகாட்டுள்** - சுடுகாட்டிலே,
**ஆடுவான்** - நடிப்பவனாகிய சிவ பெருமானை,
**சுட்டினொடு காட்டும்** - சுட்டுத லோடு காட்டிய,
**சம்பந்தா** - திருஞானசம்பந்தப் பெருமானே!
**இடுகாட்டுள்** - சுடுகாட்டுள்,
**மாதர்** - பிருந்தையினது,
**எலும்பில்** - எலும்பிலே,

**புரண்மால்** - புரண்ட திருமால்,
**என்பு நின்பால் தந்து** - அவ் வெலும்பை நின்னிடத்துக் கொடுத்து,
**கும்பம் தாம் என்னும்** - அமுத கலசம் என்று சொல்லும்படியான,
**முலைக்கொம்பு** - முலைகளையுடைய பூங்கொம்பு போலும் ஓர் அரிய பெண்ணாக,
**ஆக்கிக்கொண்டிலன் என்** - அங்ஙனம் செய்துகொள்ளாமைக்குக் காரணம் யாது?

### விளக்கவுரை

'மால் என்பு தந்து கொம்பு ஆக்கிக்கொண்டிலன் என்' எனக் கூட்டுக.

சலந்தரன், திருமால் முதலிய தேவரை வென்ற செருக்கால் சிவபெருமானையும் வெல்வான் கருதித் திருக்கயிலையையடைந்து, ஆங்குப் பெருமான் திருவடியால் நிலத்திற்கீறிய திகிரியான் மடிந்ததும், அத்திருமால் அவனுடம்பிற்புக்கு, அவன் மனைவியாகிய பிருந்தையைப் புணர்ந்திருக்க, அவளஃதுணர்ந்து, கற்பழித்தமைக்குக் கவன்று தீக்குளித்தலும், தான் வெந்து எலும்பாய்க் கிடக்க, விருப்பமிகுதியால் அவள் என்பில் புரண்டார் என்பார், '**இடுகாட்டுண் மாதர் எலும்பிற் புரண்மால்**' என்றார். இதனை,

> "இக்கொடு மொழிபுகன் றெரியை மூட்டியே
> புக்குயிர் துறந்தனள் புலம்பி யாங்கவ
> ளக்குறு சுடலைநீ றாடி வாடினான்
> மைக்கடன் மேனியன் மாலின் மூழ்கியே"

என்னும் கந்தபுராணத்துத் ததீசியுத்தரப் படலச் செய்யுளானறிக.

சுடுகாட்டுளாடுவான் என்றது சிவபெருமானை; இவர், எவற்றையும் ஒடுக்கும் ஆற்றல் திருமால் முதலியோருக்கு இன்மையாலோ, அத்தொழிலைத் தாமே மேற்கொண்டு அதில் நடித்து நிற்பவர் என்பார், '**சுடுகாட்டுள் ஆடுவான்**' என்றார். 'ஆடுவான்' என்புழி உயர்திணைப் பெயர் இயல்பாக வேண்டுமிடத்து இரண்டாம் வேற்றுமைத்தொகையாதலான் னகரவீறு திரிந்தது.

'**சுட்டினொடு காட்டும் சம்பந்தா**' என்பது தந்தையாராகிய சிவபாத விருதயர் நீராடுதற்குப் போம்பொழுது பிள்ளையார், பரமசிவனுடைய திருவருள் கூட்ட அவரைத் தொடர்ந்து சென்று பிரம தீர்த்தக் கரையில் நின்று, பிரமபுரப் பெருமானது திருத்தோணிச் சிகரத்தை நோக்கி, 'அம்மா! அப்பா!' என்று அழுகையில் தோணியப்பர் திருநிலை நாயகியோடும் விடையூர்ந்து வந்து உமாதேவியாரை நோக்கி, "உன்னுடைய முலைப்பாலைப் பொன் வள்ளத்திற்கறந்து இப் பிள்ளைக்கு ஊட்டுக" என்று அருளிச் செய்தனர். அங்ஙனம் உண்ட பிள்ளையாரது கடைவாயில் பால் ஒழுகுதலைக் கண்ட சிவபாத விருதயர், "நீ யார் தந்த பாலையுண்டாய்?" என்ற சினந்து மாறு

கொண்டு ஓச்ச, பிள்ளையார் ஆனந்தக் கண்ணீர் சொரிய, உச்சியின் மேல் எழுந்தருளிய ஒரு திருக்கை விரலினாலே சுட்டி, ஏறூர்ந்து உமாதேவியோடு நின்றருளிய பரமசிவனைக் காட்டி,

"தோடு டையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடு டையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன்
ஏடு டையமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த
பீடு டையபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே."

என்று பாடத் தொடங்கினமையாம். சுட்டினொடு காட்டும் என்புழி ஒடு, "ஊசியொடு குயின்ற தூசு" என்புழிப்போலக் கருவிப் பொருட்டு. காட்டும் - கால மயக்கம். சுட்டு - முதனிலைத் தொழிற் பெயர். 'என்பு' என்றது, பிருந்தையின் எலும்பை. என்பு என்புழி அகரச்சுட்டு எஞ்சிற்று. புரளக்கண்ட பிரமன் முதலிய தேவர்கள், அம்பிகை அளித்த வித்தை அச்சுடலையிலிட்டு அமுதம் பெய்ய அதிற் றோன்றிய துளபம் கன்னிகையாகக் காணப்பெற்றமை போலாது அமிர்தின்றிச் சொல்லளவானே அங்கம் பூம்பாவையாக்க வல்ல ஆற்றலை நும்பால் கண்டிருந்தும் திருமாலானவர் அங்ஙனம் செய்து கொள்ளாமை ஆராய்ச்சியின்மை போலுமென்பார், 'என்பு நின்பாற்றந் தாக்கிக்கொண்டிலன் என்' என்றார். 'கும்பந்தாம்' என்பதில், தாம் என்பது "அல்லமர் இவர்தாம்" என்புழிப் போலக் கட்டுரைக்கண் வந்த அசை. கொம்பு - பெண்; உவமையாகுபெயர்.

இனி, 'மால் பந்தாமென்னு முலைக்கொம்பு ஆக்கிக்கொண்டிலன் என்கும்' எனக் கண்ணழித்து, திருமால் பந்தை நிகர்க்கும் எனப்படும் முலைகளையுடைய ஓர் பெண்ணாக ஆக்கிக்கொண்டிலன் என்கும் என்றலும் ஒன்று. 'பந்தாம்' என்புழி, ஆதல் உவமைப் பொருள் குறித்து நின்றது; "ஆள்வாரிலுமா டாவேனோ" என்றாற்போல, இப் பொருட்கண், என்கும என்பது குச்சாரியையேற்ற செய்யுமென்னு முற்றெனக் கொண்டு, அது பல்லோரொழிந்த படர்க்கை நான்கு பாற்கும் உரித்தாகலின் ஆணொருமைப் பயனிலையாக்கினாரெனக் கூறுவாருமுளர். அற்றேல், 'என்னும்' என்ற செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று என்கும் எனக் குச்சாரியை பெற்ற போது கும் விகுதியாக நின்று தன்மைப் பன்மையை உணர்த்துமேயன்றி பலர்பால் ஒழிந்த ஏனைப் படர்க்கை முற்றுப்பாலை உணர்த்தாதெனக் கூறி மறுக்க.

## திருமால் பிருந்தையின் எலும்பிற்புரண்ட வரலாறு

பரமசிவத்தின் சினத்தீயிற்றோன்றிய சலந்தரன் அப்பெருமானது சக்கரத்தால் இறந்துபட்டமையைக் கேள்வியுற்ற திருமால், சலந்தரன் மனைவியாகிய பிருந்தையின் பேரழகைக் கண்டு மையல் கொண்டு,

அவள் தன்னைத் தன் கணவனென்று நம்பும்படி சூழ்ச்சி செய்து அவளுடன் நெடுங்காலம் கலவி செய்திருந்தான். ஒரு நாள் திருமால் கோலம் காணப்பட்டது. அது கண்ட பிருந்தை, 'இவன் மாயோனாகும்' என்றுணர்ந்து, திருமாலுக்குச் சாபமிட்டுத் தீப்பாய்ந்திறந்தாள். இவள்மீதுள்ள விருப்ப மிகுதியால் இவள் எரிந்து போன சாம்பரில் திருமால் விழுந்து புரண்டழுதார் என்பதாம்.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

**கொள்ளைக் கதிர்முத்தின் பந்தரும் சின்னமுங் கொள்ளுமொரு**
**பிள்ளைக் கதுதகு நாவர சாய பெருந்தகையோய்!**
**கள்ளைக் குவளை யுமிழ்வீ ழியிற்படிக் காசொன்றுநீ**
**வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென் வாங்கினையே. 10**

#### பதவுரை

**நாவரசு ஆய பெருந்தகையோய்** - வாகீசர் என்னும் திருப்பெயர் பொருந்திய பெருந்தகைமை வாய்ந்தவரே,
**வள்ளைக்குழை உமை பங்காளர் கையில்** - வள்ளையிலை போலும் காதுகளையுடைய உமாதேவியின் பாகராகிய சிவ பெருமானது கையில்,
**கொள்ளைக் கதிர் முத்தின் பந்தரும்**-(திருப்பட்டீச்சுரத்திலே) மிகுதியான கிரணங்களை வீசும் முத்துப் பந்தரும்,
**சின்னமும்** - (திருவரத்துறையிலே) முத்துச்சின்னமும்,
**கொள்ளும் ஒரு பிள்ளைக்கு** - வாங்கிக்கொண்ட ஆளுடைய பிள்ளையாருக்கு,
**குவளை கள்ளை உமிழ் வீழியில்** - குவளை மலர் தேனைச் சொரிகின்ற திருவீழிமிழலையிலே,
**படிக்காசு ஒன்று அது தகும்** - படிக்காசு ஒன்றை வாங்குதலும் தகும்,
**நீ என் வாங்கினை** - நீர் அப்பிள்ளை போல அப்படிக்காசு ஒன்றை யாதுக்குப் பெற்றீர்? (சிவபெருமானது கட்டளையை மறுத்தற்கு அஞ்சியோ?)

#### விளக்கவுரை

'பெருந்தகையோய்! பிள்ளைக்கு அது தகும். நீ வீழியில் படிக்கா சொன்று உமை பங்காளர் கையில் வாங்கினை என்?' என மாற்றிப் பொருள் கூறலும் ஒன்று. **'அது'** என்றது படிக்காசு ஒன்று வாங்குதலை. சுட்டினைப் பெயர்க்கு முந்திக் கூறினார். **கொள்ளை** - மிகுதி. சிவபெருமானுக்குரிய புதல்வர் இருவருள் இளைய பிள்ளையார் (முருகர்) அவதாரம் இவர் என்பார், **'ஒரு பிள்ளை'** என்றார். ஒரு பிள்ளையென்றது ஆளுடைய பிள்ளையாரை (**திருஞானசம்பந்தரை**).

பெருந்தகையான் என்னும் முதல் வேற்றுமை 'பெருந்தகையோய்' என விளி வேற்றுமையாயிற்று. பந்தரும் சின்னமும் என்றதனால்

முத்துச்சிவிகை முத்துக்காளம் முத்துத்தாரை பொற்கிழி முதலியனவும் தழீஇக்கொள்க. 'கொள்ளும்' என்பது இயல்பு பற்றி வந்த காலமயக்கம். கள்ளைக் குவளை யுமிழ் வீழி என்றதனால் இத்தலம் எத்தன்மையார்க்கும் இன்பம் பயப்பதொன்றென்று உள்ளுறை யுவமையாற்கூறலாயிற்று.

**படிக்காசு** - படியில் வைக்கப்படும் காசு. திருஞானசம்பந்தரும திருநாவுக்கரசும் திருவீழிமிழலையில் சிவபெருமானிடத்துப் படிக்காசு பெற்றதனை,

> "ஈசர் மிழலை யிறையவர்பா லிமயப் பாவை திருமுலைப்பால்
> தேச முய்ய வுண்டவர்தாம் திருமா மகனா ராதலினால்
> காசு வாசி யுடன்பெற்றார் கைத்தொண் டாகு மடிமையினால்
> வாசி யில்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர்."

என்னும் செய்யுளானும் அறிக. **வள்ளை** - வள்ளைக்கொடி. அது பொருளாகுபெயராய் அதன் இலையை உணர்த்திற்று. **குழை** - குண்டலம்; அது தானியாகுபெயராய்க் காதை உணர்த்திற்று. **கையில்** - இடத்தில்; கை இடத்தை உணர்த்திற்று. 'நாவின் செல்வ முடைமை திருநாவுக்கரசெனச் சிவபெருமான் அருளப்பெற்றமையே யன்றி, அறிவு முதலியவற்றான் முதிர்தவின் அப்பிள்ளையும் 'அப்பர்' என முறை கொண்டாடத் தக்க நீர் படிக்காசு ஒன்று வாங்கத் தகுமோ?' என்பார், 'என் வாங்கினை?' என்றார். 'என் வாங்கினை' என்பதற்கு யாதுக்குப் பெற்றீர் எனப் பொருள் கொள்ளுமிடத்து என் என்பதில் நான்கனுருபு தொக்கது. அப்பொருட்கு அது பெயர். இறைவர் கட்டளையை மறுத்தற்கு அஞ்சியோ என்பது குறிப்பெச்சம்.

## திருஞானசம்பந்தர் முத்துப்பந்தரும் முத்துச்சின்னமும் பெற்றது

திருஞானசம்பந்தர் தந்தையார் தோளின்மேலிருந்து, தலயாத்திரை செய்து வந்து, பின் திருவடித்தாமரை நோவப் பைய நடந்து மாறன் பாடி என்னும் பதியை அடைய, திருவரத்துறையில் எழுந்தருளி யிருக்கும் கடவுள் அது கண்டு மனம் பொறாது, அத்தலத்திலுள்ள பார்ப்பனர் அனைவருக்கும் தனித்தனியே கனவிலே தோன்றி ஆளுடைய பிள்ளையாருக்கு முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னம் இவைகளைக் கொண்டுபோய்க் கொடுக்கும்படி கட்டளையிட்டு மறைந்தருளினார். உடனே வேதியர்கள் விழித்தெழுந்து பார்க்க, அவைகளிருக்கக் கண்டு ஆனந்தங்கொண்டு, முத்துச்சிவிகை முதலிய வற்றை மங்கல இசைகள் முழங்கப் பிள்ளையாருக்குக் கொண்டு போய்க் கொடுத்தார்கள். அதற்கு முன் சிவபெருமான் ஆளுடைய பிள்ளையாருக்கும் கனவிலே தோன்றி, "நாம் உனக்கு முத்துச்சிவிகை

முதலியவற்றை அனுப்புகின்றோம்; நீ அவைகளை ஏற்றுக்கொள்,'' எனத் திருவாய் மலர்ந்தருளினர். பிள்ளையார் விழித்தெழுந்து தாம் கண்ட கனவைத் தந்தையாருக்கும் அடியார்களுக்கும் அருளிச்செய்து, வைகறையிலே திருநீறணிந்து ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டு எழுந்தருளினார். அவ்வமயத்தில், அந்தணர்கள் சிவனடியார்களோடு இறைவன் திருப்பெயர்களைச் சொல்லித் துதித்துக்கொண்டு முத்துச் சிவிகை முதலியவற்றைக் கொண்டுவந்து பிள்ளையாரை வணங்கி நின்று, "இவை, திருவரத்துறையில் எழுந்தருளியுள்ள கடவுள் தந்த பொருள்கள்; ஏற்றருளும்!'' என்றார்கள். பிள்ளையார் அதைக் கேட்டுக் கடவுளுடைய திருவடிகளை,

"எந்தை யீச னெம்பெருமா னேறமர் கடவு ளென்றேத்திச்
சிந்தை செய்ப வர்க்கல்லாற் சென்று கைகூ டுவதன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புன னிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வா யரத்துறை யடிகடம் மருளே.''

என்னும் திருப்பதிகத்தைப் பாடி, திருவருள் வடிவாகிய முத்துச் சிவிகையை வலஞ்செய்து, பூமியிலே விழுந்து வணங்கி, ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டு, உலகெலாம் உய்யும்படி அதில் ஏறியருளினார். அப்போது அடியார் அனைவரும் ஆர்த்தனர். அந்தணர் அனைவரும் மறை முழக்கம் செய்தனர். இந்திரன் முதலிய தேவர் அனைவரும் மலர்மழை பொழிந்தனர். பல வகைப்பட்ட இசைக்கருவிகள் ஒலித்தன பல்லக்கில் ஏறியருளிய பிள்ளையாரின் மேலே முத்துக் குடை நிழற்ற அடியார்களும் அந்தணர்களும் ஆனந்த வெள்ளத்தே குளித்தார்கள். முத்துச்சின்னங்கள் "பரசமய கோளரி வந்தார்; சைவ சிகாமணி வந்தார்; ஞானப்பாலுண்டவர் வந்தார்; ஓதாதுணர்ந்த பெருமான் வந்தார்'' என்று ஊதச்சென்று திருவரத் துறையையடைந்து, கோபுர வாயிலுக்குச் சேய்மையிலேயே சிவிகையி னின்றும் இறங்கி வணங்கிய கையராய்த் திருக்கோயிலினுட்சென்று வலம் வந்து, திருமுன் சென்று வணங்கித் திருப்பதிகம் பாடிச் சில நாள் அத்தலத்தில் எழுந்தருளியிருந்தார் என்பதாம்.

## திருநாவுக்கரசு நாயனாரும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றமை

இவ்விரண்டு நாயன்மார்களும் திருவீழிமிழலையில் எழுந்தருளி யிருக்கும் நாளிலே, பஞ்சம் நேர்ந்தது. அதனால் உயிர்களெல்லாம் வருத்தமுற்றன. அக்காலத்தில் பரமசிவன் இவ்விருவருக்கும் தோன்றி, 'காலவேறுபாட்டால் நீங்கள் மனவாட்டம் அடையீர்களாயினும் உங்களை வழிபடுகின்ற அடியார்களுக்காகத் திருக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும், மேற்குப் பீடத்திலும் நாடோறும் படிக்காசு வைக்கின்

றோம் ; பெற்றுக்கொள்ளுங்கள்,'' எனத் திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறே தாங்கள் பெற்றுச் சிவனடியார்களை உணவருந்தச் செய்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், வாக்குத் தொண்டு மட்டும் செய்தமையால் பெற்ற படிக்காசை வட்டங்கொடுத்து மாற்றப் பெற்றார். திருநாவுக்கரசு நாயனாரோ, உடற்றொண்டும் செய்தமையால், தாம் பெற்ற படிக்காசை வட்டங்கொடாது மாற்றப் பெற்றார். இருவருடைய திருமடங்களிலும் சிவனடியார்கள் நாடோறும் உண வருந்தி மகிழ்ந்திருக்கும் நாளில் எங்கும் மழை பெய்து பயிர் வகைகள் மிக விளைந்தமையால் பஞ்சம் நீங்கிற்று என்பதாம்.

## சுந்தரர்

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

வாங்குசிலை புரையுமுட லெனுங்குளத்தின் மூல
மலமெனுமோர் வெங்கரவின் பகுவாயி னின்றும்
தீங்கிலுயி ரெனும்பனவக் குலமகனை யாதி
திரோதாயி யென்னுமொரு வெந்திறற்கூற் றுவனால்
ஓங்குறுநா தாந்தமெனப் பெயரியவக் கரையின்
உமிழ்வித்துச் சிவமெனுமோர் தந்தையொடுங் கூட்டாய்
கோங்கமுகை கவற்றுமிள முலைப்பரவை மகிழக்
குண்டையூர் நென்மலைமுற் கொண்டவருட் கடலே. 11

#### பதவுரை

**கோங்கம் முகை** - கோங்கரும்பை, **கவற்றும்**-தாம் அழகால் வருத்தும், **இள முலை** - இளமை வாய்ந்த முலைகளையுடைய, **பரவை மகிழ** - பரவை நாச்சியார் மகிழ்ச்சியடையும்படி, **முன்** - முன்பு, **குண்டையூர்** - குண்டையூரிலுள்ள, **நெல் மலை** - நெல் மலையை, **கொண்ட** - (திருவாரூரில் பூதங்களாற்கொணர்ந்து) குவிக்கப் பெற்ற, **அருட்கடலே** - கருணைக் கடலாகிய நம்பியாரூரரே ! **வாங்கு சிலை புரையும்** - வளையும் வில்லையொத்திருக்கின்ற, **உடல் எனும் குளத்தில்** - உடம்பு எனப்படும் மடுவிலே, **மூலமலம் எனும்** - ஆணவ மலம் எனப்படும், **ஓர் வெம் கரவின்** - ஒரு வெவ்விய முதலையினது, **பகுவாயின் நின்றும்** - பிளவுபட்ட வாயிலிருந்தும், **தீங்கு இல்** - அழிவில்லாத, **உயிர் எனும்** - உயிர் எனப்படும், **பனவக் குலமகனை**- அந்தண குலப் புதல்வனை, **ஆதி திரோதாயி எனும்** - தொடக்கத்தே திரோதான சத்தி எனப் படும், **ஒரு வெம் திறல் கூற்றுவனால்** - ஒரு வெவ்விய யமனால், **ஓங்குறும்** - உயர்ந்த, **நாதாந்தம் என பெயரிய**-நாதாந்தம் எனப் பெயர் பெற்ற, **அ கரையின்** - அக்கரையிலே, **உமிழ்வித்து** - கக்குவித்து, **சிவம் எனும்** - சிவமெனப்படும், **ஓர் தநதையொடும்** - ஒப்பற்ற அப்பனோடும், **கூட்டாய்** - சேர்ப்பீராக.

**விளக்கவுரை**

நிலைபேறின்றித் தோன்றியழியும் தன்மைத்தாகலின் இவ்வுடல் இந்திரவில்லை நிகர்ப்பதென்பார், **'வாங்கு சிலை புரையும்'** என்றார். வாங்கு சிலை - இந்திரவில்; வானவில்; வினைத்தொகைக் குறிப்பு.

புண்ணாகிய சேறும், செந்நீராகிய புனலும், புழுக்களாகிய கொடிகளும், பிணிகளாகிய நீர்வாழ் உயிர்களும் முதலியன நிறைந்ததென்பார் **'உடலெனுங் குளம்'** என்றார்.

**மூலமலம்** - ஆணவமலம். அது ஆகந்துகமன்றிச் சகமாய், மற்றைக் கன்மமாயை என்னும் இரு மலங்களுக்கும் மூலமாய் அநாதி பந்தமாயுள்ளது. அம்மலம் உயிரின் அறிவை விழுங்க நிற்றலின் முதலையையொத்ததென்பார், **'மூலமல மென்னும் ஓர் வெங்கரவு'** என்றார்.

மறைப்புண்டு கிடப்பினும் அநாதி நித்தமாதலின் என்றும் உள்ளதாகலின் அழிவின்று என்பார் **'தீங்கில் உயிர்'** என்றார். அதனைப் பனவக்குல மகனாக உருவகப்படுத்திக் கூறினார். அவிநாசியில் முதலையுண்ட பாலனை மீட்டுத் தந்தைபாற்சேர்த்தமையின், இவ்வுயிரையும் சிவமாகிய தந்தையிடத்துச் சேர்ப்பார் என்பது குறிப்பு.

**'திரோதாயி என்னும் ஒரு வெந்திறற் கூற்றுவன்'** என்பது, அவ்வவ்வுடலின் ஈட்டிய வினைகளின் பயனை ஒருவாறு நுகர்விக்கும் எமன் போன்று, படைப்புத் தொடங்கியே மலத்தின் வழி நின்று, அம்மலத்தின் காரியமாகிய மோகம் முதலியவற்றைத் தொழிற்படுத்தும் இச்சைக்கு ஏதுவாதல் பற்றி மலமென்று உபசரித்துக் கூறப்படுவதாய், உயிரைத் தன் வசப்படுத்தி வினைப்பயன்கள் நுகர்வித்துப் பாகம் வருவிக்கும் திரோதான சத்தி எனப்படும் சிவசத்தியே பின் அருட்சத்தியாய் அம்மூலமல சத்தியையொழித்துச் சிவத்தை அடைவித்தற்கேது என்பதாம்.

**வெந்திறல்** - கடத்தற்கரிய ஆணை. 'கூற்றுவனால் உமிழ்வித்து' எனக் கூட்டுக. ஊனக் கண்கொண்டு உணரப்பட முடியாத நாத முடிவே சிவம் நிலவுமிடமாதலின், ஆங்குச் சேர்த்துக என்பார், **'ஓங்குறு நாதாந்தமெனப் பெயரிய வக்கரையினுமிழ்வித்து'** என்றார்.

**'சிவமெனும் ஓர் தந்தை'** என்றது, அவ்வுடற்குக் காரணமாய் வரும் தந்தையார் போலாது, சிவம் எல்லா உயிர்களுக்கும் உடல் மன உலக இன்பங்களைத் தந்து உண்ணின்றுணர்த்தி உபசரித்து நிற்கும் தனித் தந்தை என்றபடி, உயிர் முத்தியினும் முதல்வன் போல ஐந்தொழிற்கும் வினை முதலாகுமுரிமையின்றிச் சிவானுபவம் ஒன்றனுக்கே உரியதாய் முதல்வனில் கலந்திருப்பதாகலின், அங்ஙனம் ஆக்குக என்பார், **'கூட்டாய்'** என்றார். 'தந்தையொடு' என்பதில் ஒடு கலப்புறு பொருள்; **'பாலொடு தேன் கலந்தற்றே'** என்பதிற்போல.

கோங்கமுகை என்புழி அம் சாரியை; கோங்கரும்பு. 'கோங்க' என்புழி அகரம் ஆறாம் வேற்றுமைப் பன்மையுருபு என்பர். அது தனைகைகள் என்பது போல வாராமையால் பொருந்தாதென்க. முகையைக் கவற்றுவது முலைக்கில்லையாகவும் உளதாக உபசரித்தது; அது போன்று அலர்தலின்மை குறிப்பித்தற்கென்க. மங்கைப் பருவமுடைமை தோன்ற 'இளமுலைப் பரவை' என்றார்.

'வாங்குசிலை' என்பது குறிப்பான் இந்திரவில்லை உணர்த்திற்று; உடற்கு உவமிக்கப்படுவது அச்சிலையேயாகலான்; 'வானிடு வில்' என்றார் பிறரும். 'புரையும்' நிகழ்காலப் பெயரெச்சம்; இயல்பு பற்றி வந்த காலவழுவமைதி. அல்லதூஉம் தனுவெனப் பெயரிய இவ்வுடல் இளமையில் கூனுதலின்மையின், தனுவை நிகர்க்கிலதேனும் சின்னாளில் நிகர்த்துவிடுமென்பார், 'வாங்குசிலை புரையும்' என எதிர் காலத்தாற் கூறினார் எனினும் அமையும். வாங்கு சிலை-வளையும் வில் எனப்படுமெனற்பாலது, செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் படு விகுதி தொக்கு எனும் என நின்றதென வருமிடந்தோறும் கொள்க. கரவு என்பது முதலைக்குக் கரத்தலுடைமையாற் போந்த பெயராய் இரட்டுற மொழிதலாய் நின்றது. 'ஆதி திரோதாயி என்னும்' எனவே, அந்தத்தில் அதுவே அருட்சத்தி எனப்படும் என்றாராயிற்று.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

கடனிற வண்ணன் கண்ணொன் றிடந்து
மறைச்சிலம் பரற்று மலரடிக் கணியப்
பரிதி கொடுத்த சுருதிநா யகற்கு
முடிவிளக் கெரித்தும் கடிமலர்க் கோதையைச்
5 சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்து
மருமக ணறும்பூங் கருமயி ருதவியு
நென்முளை வாரி யின்னமு தருத்தியுங்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்து
மகப்படு மணிமீ னாற்கென விடுத்தும்
10 பூட்டி யரிவா ளூட்டி யரிந்துந்
தலையுடை யொலிக்குஞ் சிலையிடை மோதியு
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்துந்
தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றுங்
குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்

15 பூக்கொளு மாதின் மூக்கினை யரிந்து
மிளமுலை மாதர் வளமை துறந்தும்
பண்டைநா ளொருசிலர் தொண்ட ராயினர்
செங்கண்மா றடக்கையிற் சங்க நாண
முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல்
20 வலம்புரி கிடக்கும் வாதவூ ரன்ப
பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரைமா நகரிற் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழின் மேனியின் மாற்றடி பட்டு
25 நின்னைத் தொண்ட னென்னக் கொண்டன
னிருக்கு மடுக்க லரக்க னெடுப்ப
முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமக டழுவ மனமகிழ் வோனே. 12

பதவுரை

**செம் கண் மால்** - செந்தாமரை மலர் போலும் சிவந்த கண்களை யுடைய திருமாலினது,
**தட கையில் சங்கம் நாண** - பெரிய கையிலேந்திய பாஞ்சசன்னியம் என்னும் சங்கு நாணும்படி,
**முள் தாள் தாமரை** - முள்ளரை களையுடைய நாளத்தையுடைய தாமரையினது,
**முறுக்கு அவிழ் மலர் மேல்** - கட்ட விழ்ந்த மலரின்மீது,
**வலம்புரி கிடக்கும் வாதவூர் அன்ப** - வலம்புரிச் சங்கு தங்கும் திருவாதவூரில் தோன்றிய அன்பரே,
**கடல் நிறம் வண்ணன்** - கடல் போலும் கரிய நிறத்தையுடைய திருமால்,
**கண் ஒன்று இடந்து** - திருவீழி மிழலையில் தன் கண்களுள் ஒன்றைப் பெயர்த்து,
**மறை சிலம்பு அரற்றும்** - வேத மாகிய சிலம்பு ஒலிக்கின்ற,
**மலர் அடிக்கு அணிய** - மலர்ந்த திருவடிக்குச் சாத்த,
**பரிதி கொடுத்த** - அத்திருமாலுக்குச் சக்கரப் படையைக் கொடுத்த,
**சுருதி நாயகற்கு** - வேதமுதற் பொருளாகிய சிவபெருமானுக்கு,
**முடி விளக்கு எரித்தும்** - (கணம் புல்ல நாயனார்) தம் முடியை விளக்காக எரியச் செய்தும்,
**கடிமலர் கோதை** - மணம் பொருந்திய மலர் மாலையணிந்த,
**சுரிகுழல்** - சுருண்ட கூந்தலையும்,
**கருங்கண்** - கரிய கண்களையுடைய,
**துணைவியை** - இல்வாழ்க்கைத் துணையாகும் தம் மனைவியை,
**அளித்தும்** - (இயற்பகை நாயனார்) கொடுத்தும்,
**அருமகள்** - (மானக்கஞ்சாற நாயனார்) தம் அரிய புதல்வியின்,
**நறும்பூ கருமயிர்** - மணமிக்க அழகிய கரிய கூந்தலை,
**உதவியும்** - கொடுத்தும்,
**நெல் முளை வாரி** - (இளையான்குடி மாற நாயனார்) வயலில் நீரில் மிதந்த நெற்களின் முளையை வாரிக் கொண்டுவந்து,
**இன் அமுது அருத்தியும்** - இனிய அமுதாகச் சமைத்து அதனை உண்பித்தும்,
**கோவணம் நேர்** - கோவணத்திற்கு நேராக,

**தனை நிறுத்து கொடுத்தும்**-(அமர் நீதி நாயனார்) தம்மையும் நிறுத்துக் கொடுத்தும்,
**அகப்படும் மணி மீது** - (அதிபத்த நாயனார் தம் வலையில் முன்) அகப்படுகின்ற இரத்தின மயமான உறுப்புகளமைந்த பொன் மீனை,
**அரற்கு என விடுத்தும்** - சிவபெருமானுக்கு உரித்தெனக் கடலில் விடுத்தும்,
**அரிவாள் பூட்டி** - (அரிவாட்டாய நாயனார்) அரிவாளைப் பூட்டி,
**ஊட்டி அரிந்தும்** - தம் கழுத்தை யறுத்தும்,
**உடை ஒலிக்கும்** - ஆடையைத் துவைக்கின்ற,
**சிலையிடை** - கற்பாறையினில்,
**தலை மோதியும்**- (திருக்குறிப்புத் தொண்ட நாயனார்) தம் தலையைத் தாக்கியும்,
**மொய் மலர் கோதை** - (கழற்சிங்க நாயனார் தமது) வண்டுகள் மொய்க்கின்ற மலர்களையணிந்த கூந்தலையுடைய மனைவியின்,
**மலர் கை துணித்தும்**- செந்தாமரை மலர்போன்ற கையைச் சேதித்தும்,
**தந்தையைத் தடிந்தும்**-(சண்டேசுர நாயனார்) தம் தந்தையின் தாளைத் துணித்தும்,
**மைந்தனைக் கொன்றும்** - (சிறுத்தொண்ட நாயனார்) தம் புதல்வனைச் சமைத்தற்குக் கொன்று அரிந்தும்,
**குற்றம் செய்த** - சிவபிரான் திறத்துக் குற்றம் செய்த,
**சுற்றம் களைந்தும்** - உறவினருள் ஒரு சிறுவனும் எஞ்சா வகை (கோட்புலி நாயனார்) சிதைத்தும்,
**பூ கொளும்** - (சிவபிரான் திருமுற்றத்துச் சிந்திய) மலரை எடுத்த,
**மாதின் மூக்கினை** - நங்கையின் மூக்கை,
**அரிந்தும்** - (செருத்துணை நாயனார்) அரிந்தும்,
**இளமுலை மாதர் வளமை** - இளங்கொங்கைகளையுடைய மகளிர்பால் நுகரும் இன்பத்தை,
**துறந்தும்** - (திருநீலகண்ட நாயனார்) ஒழித்தும்,
**பண்டை நாளில்** - முற்காலத்தில்,
**ஒரு சிலர் தொண்டர் ஆயினர்**-ஒப்பற்ற சிலர் அடியராயினர்;
(அவர் அங்ஙனமாக)
**இருக்கும் அடுக்கல்** தான் இருக்கின்ற கயிலையை,
**அரக்கன் எடுப்ப** - இராவணன் தூக்கலும்,
(அது கண்டஞ்சி)
**வரை பொரும் மொய்ம்பில்** மலையை ஒத்த தோள்களில்,
**முலைபொர**-முலைகள் தாக்கும்படி,
**மலை மகள் தழுவ**-மலையரையன் மகளாராகிய உமாதேவியார் அணைக்க,
**மனம் மகிழ்வோனே** - மனம் மகிழ்வோராகிய சிவபெருமானே,
**பாடும் பணி** - பாடுகின்ற திருத்தொண்டை,
**நீ கூடும் பொருட்டு** - நீ அடையும் நிமித்தம்,
**மதுரை மாநகரில்** - மதுரை மாநகரத்தில்,
**குதிரை மாறியும்** - (நரியைப்) பரியாக்கிப் பாண்டியனுக்கு அதனை விற்றும்,
**விண்புகழ்** - தேவரும் துதிக்கின்ற,
**முடிமிசை** - திருமுடிமீது,
**மண் பொறை சுமந்தும்** - மண் செறிந்த கூடையை வலிந்தெடுத்தும்,
**நீறு எழில் மேனியில்**- திருநீற்றின் எழில் படைத்த திருமேனியில்,
**மாறு அடி பட்டும்** - அப்பாண்டியனால் பிரம்படி ஏற்றும்,
**நின்னைத் தொண்டன் என்ன**-நின்னைத் திருத்தொண்டன் என்று சொல்லும்படி,
**கொண்டனன்** - கொண்டருளினார்.

### விளக்கவுரை

திருமாலைக் "கடனிற வண்ணன்" என்றது, காத்தற்றொழிலால் சத்துவ குணமுடையவரேனும் தமோகுண உருவத்தராதலான். **சுருதி நாயகன்** - வேதநாயகன் (சிவபெருமான்). பரிதி - சக்கரப்படை. சிவபெருமானது திருவடியில் வேதங்களே சிலம்பு வடிவம் என்பார்; **'மறைச்சிலம்பரற்று மலரடி'** என்றார். இதனை,

> "மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையா
> மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமா
> மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகு
> மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும்"

என்பதனாலுணர்க.

ஈண்டுக் கூறிய நாயன்மாருள், கணம்புல்ல நாயனார், அரிவாட்டாய நாயனார், திருக்குறிப்புத் தொண்டநாயனார் ஆகிய இவர்கள் தமக்கு வரும் இறுதியையும் நாடாது தம் விரத முடித்த தவத்தினரும்; இயற்பகை நாயனார், மானக் கஞ்சாற நாயனார், கழற்சிங்க நாயனார், சண்டேசுர நாயனார், சிறுத்தொண்ட நாயனார், கோட்புலி நாயனார், செருத்துணை நாயனார் ஆகிய இவர்கள் உலகியலைக்கடந்து வழிபட்ட உத்தமரும்; இளையான்குடி மாற நாயனார், அதிபத்த நாயனார் ஆகிய இவர்கள் சுற்றமும் தாமும் உறுபசியுழந்தும் தம் நியதி குன்றாத் தகையினரும்; அமர்நீதி நாயனார், திருநீலகண்ட நாயனார் என்னும் இவர்கள் சத்திய நெறி வழாச் சால்பினரும் ஆவர் என்க. இங்ஙனம் உலகப்பற்றை ஒழித்து, அகப்பற்றையும் அகற்றி, சிவபெருமானை வழிபடல் சிவபுண்ணிய முதிர்ந்த சிலர்க்கன்றிப் பிறர்க்கெய்தாமையின் அவ்வியல்பினர் அம்புவியில் மிக அரியர் என்பார், **'ஒரு சிலர் தொண்டராயினர்'** என்றார்.

> "கடனிறவண் ணக்கவியிற் கனுலியமெய்த் தொண்டர்
> கணம்புல்ல ரியற்பகையார் கஞ்சாற ரிளையார்
> குடிமாற ரமர்நீதி கோதிலதி பத்தர்
> கூரரிவாட் டாயரதிருக் குறிப்பறிநற் றொண்ட
> ரடல்கொள்கலிக் கம்பமைந்த ராயசண்டி கேச
> ரரியசிறுத் தொண்டர்சுற்ற மதுகளைகோட் புலியார்
> திடமுடைய செருத்துணையர் திருநீல கண்டர்
> செப்புமிவ ராமெனனத் தேர்ந்தறிக முறையே.

(இஃது, இத்திருப்பாடற்குறிப்பு)

**செங்கண்மால்** - 'செந்தாமரை போன்ற கண்களையுடைய மால். 'செங்கண்மால்' என்பது குறிப்பு மொழியாய்த் தாமரையையுணர்த்திற்று; அடியவர்க்கு அருள் செய்து செய்து சிவந்த கண் எனினுமாம்.

**சங்கம்** - பாஞ்சசன்னியம்; அது பஞ்சசனன் உரு எனும்பாதலை,

> "சங்க நேருருப் பஞ்ச சனப்பெயர்
> வெங்க ணானையு மாயிடை வீட்டியே
> துங்க வோசை வலம்புரித் தோற்றமா
> மங்க வன்றனெலும்பை யணிந்தனன்."

என்பதனாலுமறிக. இப்பி ஆயிரம் சூழ்ந்தது இடம்புரியும்; அஃதாயிரஞ்சூழ்ந்தது வலம்புரியும், அஃதாயிரஞ்சூழ்ந்தது சலஞ்சலமும், அஃதாயிரஞ்சூழ்ந்தது பாஞ்சசன்னியமுமாக, செங்கண் மாறடக்கையிலுள்ள அத்தகைய பாஞ்சசன்னியம் நாணுவதெற்றுக் கெனின், தான் உயர்ந்த இனத்ததாயினும் தெய்விகத் தலத்தின் தோன்றுதலின்றி, பாஞ்சசனனென்னும் அசுரனுருவெனும்பாயுதித் தமையின் எவராலும் புகழப்படுதலும் பற்றியென்க. அன்றி, பாஞ்சசன்னியமும் வலம்புரி (வலம்புரியே முறுக்குடையது) ஆகலின், தடக்கையிலுள்ள தனக்குத் தான் விரும்பியவாறு இயக்கமின்மையும், அதற்கஃதுண்மையும் பற்றி இனங்கண்டுழி நாணாநின்றதெனினும் அமையும். எனவே, அம்பிகை பாகரை வழிபடுவான் திருமாலணுகுந்தோறும் அவர் தடக்கையிற்சங்கம், ஈங்குள வலம்புரி கண்டு இவ்வியல்பான் நாணாநின்றதென்பது. **வாதவூர்** - வாயுதேவன் சிவபெருமானை வழிபட்டமையால் அப்பெயர் ஆயது.

## திருமால் சிவபெருமானிடத்துச் சக்கரப்படை பெற்றது:

ததீசி முனிவர்மேல் திருமால் சக்கரப்படையை ஏவ, அது தன் கூர்வாய் மழுங்கித் திரும்பியது. அங்ஙனங்கண்ட திருமால், சிவபெருமானிடம் சலந்தரனைக் கொன்ற சக்கரமிருக்கக் கண்டு அதனைப் பெறக் கருதித் திருவீழிமிழலையில் ஆயிரந்தாமரை மலர்களால் நாடோறும் சிவபெருமானைப் பூசனை செய்து வருங்கால், ஒருநாள் ஒரு மலர் ஒரு மந்திரத்திற்குக் குறையத் தம் கண்ணையே மலராகக் கருதி அதனை இடந்து, திருவடியில் அருச்சித்து, அச்சக்கரத்தையும் ஆழியான் என்னும் பெயரையும் பெற்றனர். இதனை,

> "அவன்சலந் தரனை வீட்டு மாழியை வாங்கப் பன்னாட்
> சிவன்கழல் வழிபட் டோர்நாட் செங்கணே மலராச் சாத்த
> வுவந்தனன் விடைமேற் றோன்றி யப்படை யுதவப் பெற்று
> நிவந்தன னதனால் வைய நேமியா னென்ப மாதோ."

என்னும் ஸ்கந்தபுராணத்துத் ததீசியுத்தரப் படலச் செய்யுளானும்,

"அலரா யிரந்தந்து வந்தித்து மாலா யிரங்கரத்தால்
அலரார் கழல்வழி பாடுசெய் தாற்கள வில்லொளிகள்
அலரா விருக்கும் படைகொடுத் தோன்றில்லை யானருள்போன்
றலராய் விளைகின்ற தம்பல்கைம் மிக்கைய மெய்யருளே."

என்னும் திருக்கோவையாரானும் அறிக.

## முடி விளக்கெரித்தவர் கணம்புல்ல நாயனார்:

இவர், சிதம்பரத்திலே புலீச்சுரமென்னும் சிவாலயத்தில் திரு விளக்குத் தொண்டினை மேற்கொண்டு, அதனால் தமது செல்வத்தை யெல்லாம் இழந்து வறியராயினர். அங்ஙனமாகியும் திருத்தொண் டிற்கு முட்டின்றிக் கணம் புல்லை அரிந்து விற்று அதனால் வரும் ஊதி யத்தைக் கொண்டு செய்து வருநாளில் ஒரு நாள் நெய் போதாது தமது திருமுடியைத் திருவிளக்கிலேற்றித் தமக்கு வரும் இறுதியையும் நாடாது எரிக்கையில் சிவபெருமானால் வீடளிக்கப் பெற்றனர்.

## துணைவியை அளித்தவர் இயற்பகை நாயனார்:

இவர், காவிரிப்பூம்பட்டினத்தில் வதிந்தருளிய வணிகர் குலத்தவர்; சிவனடியார்மாட்டு அன்பு பூண்டொழுகுபவர். சிவபெருமான் இவரன்பினை வெளியிடும்பொருட்டு, ஓரந்தண வடிவங்கொண்டு திரு மேனியில் திருநீறு விளங்க, காமுக வேடத்தராய் நாயனார் வீட்டிற்கு எழுந்தருளினர். நாயனாரும் செய்த உபசரிப்புக்கு அளவில்லை. பெரு மான் அவ்வுபசரிப்புக்கு மகிழ்ந்து நாயனாரை நோக்கி, "உம்மிடத்தி லுள்ள ஒரு பொருளை விரும்பியே இன்றைக்கு ஈண்டு வந்தேன்," என்றனர். அதற்கு நாயனார், "எத்தகைய பொருளாயினுமாகுக; அப்பொருள் அடியேனிடத்துள்ளதேல் நும்முடையதே; திருவுளம் விரும்பியதை இன்னதெனவருளுக," எனறனர். அதற்கு ஐயர், "உம்முடைய மனைவியை விரும்பி வந்தேன்," என்றார். நாயனார் அதற்கிசைந்து தம் மனைவியைக் கொடுக்கத் தாம் பெற்றுச் செல்லு கையில் அவரது சுற்றத்தார் அத்தீச்செய்கைக்கு இசையாது இறை வரைச் சூழ்ந்து தடுக்க, நாயனார் சென்று அவர்களைக் கண்டித்து இறைவரை வழி விட்டனுப்பி மீண்டனர். நாயனார் மீண்டதும், சிவ பெருமான், ஓரிடையூறு வந்தவர் போல நாயனாரை ஒலமிட்டழைத்து விடையூர்ந்து காட்சி தந்தருளினார். நாயனார் ஆராமை மேற்கொண்டு நிலத்தில் விழுந்தனர்; எழுந்து ஆரத்துதித்தனர். சிவபெருமான் அவரை நோக்கி, "நம்மேலும் நம்மடியார்மேலும் களங்கமற்ற அன்பு வைத்த இயற்பகையே! நீ உன் மனைவியோடு நம்முடனே வா," என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர். நாயனாரும் மனைவியாரும் சிவலோகத்தை அடைந்து பேரின்பத்தைத் துய்த்து வாழ்ந் திருந்தனர்.

## அருமகள் நறும்பூங்கருமயிர் உதவியவர் மானக்கஞ்சாற நாயனார்:

இவர் கஞ்சானூரில் வேளாண்குலத்துதித்து, சிவபத்தி அடியார் பத்தியிற்சிறந்த புண்ணிய சீலர். தாம் அருமையாகப் பெற்ற புதல்வியை ஏயர் கோன் கலிக்காம நாயனாருக்கு மணம் செய்விப்ப தாய் நிச்சயித்து மணநாளில் மறைச்சடங்கு நடக்கும் வேளையில், சிவபெருமான் மாவிரத வேடந்தாங்கி வந்து மணப்பெண்ணை ஆசீர் வதித்து, தந்தையாராகிய மானக்கஞ்சாறரை நோக்கி, "இப்பெண் ணின் கூந்தல் நமக்குப் பஞ்சவடிக்குதவும்," என்று சொல்ல, உடனே நாயனார் தம் உடைவாளையுருவிக் கூந்தலை அடியோடரிந்து அம்மாவிரதியர் கையிற்கொடுத்தனர். உடனே இறைவர் மறைந்தனர். பின்னர்ச் சிவனருளால் கூந்தல் வளர்ந்தது. ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்குத் தம் பெண்ணை மணமுடித்து முத்தி பெற்றனர்.

**பஞ்சவடி** - மயிரினால் அகலமாகச் செய்யப்பட்டு மார்பிலே பூணூலாக அணியப்படும் ஒரு வடம். பஞ்சம் - விரிவு. வடி - வடம்.

## நென்முளை வாரி இன்னமுதருத்தியவர் இளையான்குடி மாற நாயனார்:

இவர், இளையான்குடி என்னும் ஊரிலே, வேளாண்குலத்தில் மாறனென்னும் பெயருடையராய் அடியார்கட்குத் திருவமுது செய் விப்பதே கடனெனக் கொண்டு ஒழுகுபவர். சிவபெருமான் இவரது மெய்யன்பினை வெளியிடுதற்பொருட்டு இவரைப் பெருமிடியிலிருத் தினார். அங்ஙனமாக்கியும் தமது கொள்கைக்கு மாறாது கடன்பட்டும் இவர் சிவனடியார்களை உபசரித்து வந்தனர். இறைவர், பெருமழை பொழியும் ஒரு நள்ளிரவில் ஓர் அடியார் போல இவர் வீட்டினை யடைந்து, "உணவு வேண்டும்" எனக் கூற, நாயனார் அவரை உபசரித்து இருத்தி, பகல் வித்திய நெல்லினைக் கழனியிற்சென்று கூடையிற்றாங்கியேற்று, பாத்தி நிரம்பா இளங்கீரையுடன் கொணர்ந்து மனைவியார்பாற்கொடுப்ப, மனைவியார் அந்நெல்லினை வறுத்துப் பதஞ்செய்து அரிசியாக்கிச் சமைத்து, கீரையைக் கறியாக்கி அடியவருக்கு உணவளிப்ப, சிவபெருமான் நாயனாரது அன்பின் முதிர்ச்சிக்குக் களிகூர்ந்து நாயனார் முத்தியளிக்கப் பெற்றனர்.

## கோவண நேர் தமை நிறுத்துக்கொடுத்தவர் அமர்நீதி நாயனார்:

சோழநாட்டிலே, பழையாறை என்னுமூரிலே, வணிகர் குலத் துதித்துத் திருநல்லூரில் மடங்கட்டுவித்து, அடியார்கட்டுக் கந்தை கீள்கோவணம் என்பவற்றை ஈந்து அவர்களை உபசரிப்பவர் அமர்நீதி நாயனார். சிவபெருமான், அந்நாயனாரது பெருங்குணத்தை உலகி

னர்க்கு வெளியிடும்பொருட்டு, ஒரு நாள் மாணவக் கோலந்தாங்கி வந்து, தமது கோவணமிரண்டனுள் ஒன்றை அவரிடம் கொடுத்து, "நாம் நீராடி வருகின்றோம்; அதுவரையில் இதனை வைத்திருந்து நமக்குக் கொடும்," என்று கூறிச் சென்று, அதனைத் தாமே மறைத்தருளி, மழையில் நனைந்து வந்து, "வைத்த கோவணத்தைக் கொடும்" எனக் கேட்க, நாயனார் வைத்தவிடத்திற்சென்று தேடிக் காணாமையால் அஞ்சி நிற்க, அம்மாணவர் அது கண்டு, "அது போனால் போகட்டும்; அதற்குச் சமமான இம்மற்றொரு கோவணத்திற்கு ஒப்பான எடையையுடையதைக் கொடுத்தால்தான் உடன்படுவோம்," என்று கூற, நாயனார் துலை நாட்டி, ஓர் தட்டில் அக்கோவணத்தையிட்டு மற்றோர் தட்டில் தமது ஆடை பொன் முதலிய பொருளனைத்தையும் இட்டும் அதற்கொப்பாகாமையால், தாமும் ஏறி எடையை நிறுத்துச் சிவகதியை அடைந்தனர்.

## அகப்படு மணிமீன் அரற்கென விடுத்தவர் அதிபத்த நாயனார்:

சோழ மண்டலத்திலே, நாகபட்டினத்திலே கடற்கரையிலுள்ள நுளைப்பாடியில் பரதவர் குலத்துதித்த அதிபத்த நாயனார், சிவபத்தியிற்சிறந்து தமது குலத்தொழிலாகிய மீன்பிடித்தலையே தொழிலாகக் கொண்டு, முதலில் அகப்படுமீனைச் சிவனுக்கென்று விட்டுவந்தார்; ஒரு நாளில் ஒரு மீன் அகப்படினும், அதனைப் பரமனுக்கென்றே விட்டு விடுவார். இங்ஙனம் ஒழுகு நாள்களில், அடுத்தடுத்துப் பல நாள்களில் ஒவ்வொரு மீனே அகப்பட, அதனைக் கடலிலே விட்டு வந்தார். இங்ஙனம் நெடுநாள் கழிய உணவின்மையால், திருமேனி தளரவும் தம்முடைய தொழிலிலே நிலை நின்றமையைப் பரமசிவன் அறிந்து அவரது அன்பென்னுமமுதை உண்பவராயினர். இவ்வாறு நிகழும் நாளில் வேறொரு நாள் பரதவர்கள், முதலில் அகப்படும் ஒரு மீனையும் அவ்வாறே விட்டு, மறுபடியும் விலை மதிப்பில்லாத பேரொளி செய்யும் நவரத்தினங்களால் உறுப்பமைந்த அற்புதமாகிய ஒரு மீனை வலைப்படுத்துக் கரையில் ஏறியபோது, அம்மீன், கதிரவன் உதித்தாற்போல உலகெலாம் வியக்கும்படி ஒளி வீசிக்கொண்டிருக்கக் கண்டு, அதனை எடுத்து, "ஒரு மீன் படுத்தோம்" என்றார்கள்.."இது இரத்தினங்களால் உறுப்பமைந்த பொன்மீனாதலால் என்னை ஆட்கொண்டருளிய பரமசிவனுக்காகும்" என்று கடலிலே விட்டார். அப்பொழுது பரமசிவன் விடையேறி வந்து ஆகாயத்திலே தோன்றியருள, அதிபத்த நாயனார், ஆனந்த அருவி சொரிய மனங்கசிந்துருகி வணங்கித் தலையின்மேலே அஞ்சலி செய்தார். சிவபெருமான் தமது உலகத்திலே அடியார்களோடிருக்கும்படி அவருக்கு அருள் செய்தனர்.

## பூட்டியரிவாள் ஊட்டியறிந்தவர் அரிவாட்டாய நாயனார்:

சோழ மண்டலத்திலே, கணமங்கலமென்னும் திருப்பதியில் வேளாண் குலத்துதித்த தாயனார் என்பவர், நாடோறும் சிவன் கோவிலில் பூசைக்குரிய செந்நெல்லரிசியும் செங்கீரையும் கொடுபோய்ப் பரமசிவனுக்குத் திருவமுது செய்வித்து வருவார். இவ்வாறு நிகழும் காலத்தில், கடவுளுடைய திருவருளினால் அவருக்கு வறுமையுண்டாயிற்று. உண்டாகியும் தம் வழக்கத்தை விடாமல் அரிசி முதலியவற்றைச் சிவன் கோவிலில் கொடுபோய்க் கொடுத்துவரும் நாளில், ஒருநாள் அரிசி முதலியவற்றை எடுத்துச் செல்லுகையில் பசியிளைப்பால் காலிடறி விழ, அப்பொழுது நிலவெடிப்பில் எல்லாம் சொரிந்து விடவே, தமது நியதி கெடுதலின் மிக வருத்தமுற்றுத் தம் ஊட்டியை அரிவாள்கொண்டு அரிகையில், சிவபெருமான், "அக்கமரில் அதனை உண்டோம்" என மாவடுவைக் கடித்துக்கொண்டு திருக்கரத்தை நீட்டி அரியவொட்டாது தடுத்து முத்தி கொடுக்கப் பெற்றனர்.

## சிலையிடை தலைமோதியவர், திருக்குறிப்புத் தொண்ட நாயனார்:

தொண்டை நாட்டில் காஞ்சி நகரில் ஏகாலியர் குலத்தில் தோன்றி அடியார்களின் குறிப்பறிந்து அவர்கள் ஆடைகளை மாசுநீக்கிக் கொடுத்தலால் திருக்குறிப்புத் தொண்டர் என்னும் பெயருடையவராயினர். இவரது பத்தி வெளியாகும்பொருட்டுச் சிவபெருமான் ஏழையராய் அழுக்குக் கந்தை கட்டிய ஒரு சிவனடியார் போல நாயனாருக்கு முன் வந்து நின்றனர். நாயனார் அவரை வணங்கி, "அடிகளே! உங்கள் உடையைத் தந்தால் அந்திக்கு முன்னே மாசு நீக்கித் தருகின்றேன்," என்ன, அவர், "இக்கந்தையைவிட எனக்கு வேறில்லையாதலால், பொழுது போகுமுன் தருவீராயின், தருவேன்," எனச் சொல்லித்தந்து, பெருமழையுண்டாக்கி அதனால் திசைகள் தெரியாமல் மயங்குமாறு இருளையுமுண்டாக்கினார். நாயனார் குளத்தில் ஆடையை நனைத்தவுடன் மழை வந்தது கண்டு மனம் புழுங்கி, "குறித்த காலம் தவறி விட்டதே! அன்றியும் அடியவர் திருமேனியும் குளிரால் வருந்தும்படி தீங்கு செய்தேனே!" என்று வருந்தி, துவைக்கும் கற்பாறையின்மேலே தம் தலையை மோதிக்கொள்ளத் துணிந்தனர். பெருமான், நாயனாரின் அன்பினை வியந்து அப்பாறைக்கருகில் ஒரு கையை நீட்டித் தடுத்து, "அன்பனே! உவந்தனம்; இனி நமது உலகத்தில் பிரியாதிருக்கக் கடவை," எனக் கட்டளையிட்டருள, நாயனார் சிவலோகமடைந்தனர்.

## மொய்ம்மலர்க் கோதையைக் கைம்மலர் துணித்தவர் கழற்சிங்க நாயனார்:

காடவர் குலத்திலே அவ்தரித்துப் பரமசிவன் திருவடியன்றி வேறொன்றுமறியாத கழற்சிங்க நாயனார் அரசு பூண்டொழுகு நாளில், ஒருநாள் மாதேவியாருடன் திவாரூரையடைந்து இறைவனைக் கண்டு வணங்கினர். மாதேவியார், நாயனாருடனே திருக்கோயில் வலம் வரும் பொழுது, திருமாலை கட்டும் மண்டபத்தின் பக்கத்தில் விழுந்துகிடந்த ஒரு புதுப்பூவை எடுத்துமோந்தார்; செருத்துணை நாயனார் அதுகண்டு, சிவ பூசைக்குரிய மலரை மோந்த குற்றத்தால் அத்தேவியாரது மூக்கினை அரிந்தனர். கழற்சிங்க நாயனார் அது கண்டு, "மலரினை எடுத்த கையையன்றோ முன் துணிக்க வேண்டும்?" என்று சொல்லி, கட்டிய உடைவாளையுருவித் தம் மாதேவியாரின் கையைத் துணித்தனர். இவ்வரிய திருத்தொண்டைச் செய்த கழற்சிங்க நாயனார் சைவ நெறி தழைத்தோங்க நெடுங்காலம் அரசியற்றிப் பரமசிவனுடைய திருவடி நீழலை அடைந்தார்.

## தந்தையைத் தடிந்தவர் சண்டேசுர நாயனார்:

இந்நாயனார், சோழ மண்டலத்திலே திருச்சேய்ஞலூரிலே அந்தண குலத்திலே, காசிபர் மரபிலே எச்சதத்தர் என்பவருக்குப் பவித்திரை வயிற்றில் பிறந்தார். பெற்றோர் இவருக்கு விசார சருமன் எனப் பெயரிட்டனர். ஐந்து வயதிலே இவர் ஓதுவிப்பாரின்றி யாவுமுணர்ந்தவர். இவர் அறிவின் திறத்தை யாவரும் கண்டு வியப்புற்றனர். இவர் இளமையிலேயே 'பதி ஒன்று உண்டு' என்பதையும், அப்பதிக்கு அன்பு செய்தாலன்றித் தமக்கு வேறு கதியில்லை என்பதையும் ஆராய்ச்சியுடன் ஐயந்திரிபறத் தெளிந்தவர். பசு மேய்ப்போன் பசுக்களைத் துன்புறுத்துவதை இவர் கண்டு மனம் பொறாது, தாம் அத்தொழிலை மேற்கொண்டு அவ்வூரினருகே மேய்த்து வந்து, ஆங்குள்ள மண்ணியாற்றங்கரையிலே மணலைச் சிவலிங்கமாகக்குவித்துப் பாலைக் கறந்து திருமுழுக்காட்டி வருவதைக் கேள்வியுற்ற ஊரார், இவர் தந்தையாருக்குணர்த்த, அவர் ஒரு மரத்தில் மறைந்துகொண்டு நின்று அங்ஙனம் நிகழ்வுழி அப்பாற்குடத்தைக் காலாலிடற, நாயனார் அது கண்டு தந்தையரென்றும் வேதியரென்றும் கருதாது அருகிலுள்ள கோலொன்றையெடுத்து மழுவாகக் கண்டு தந்தையார் காலைத் தடிந்தார். சிவபூசைக்குவந்த இடரை நீக்கிய விசாரசருமர் முன் போல அருச்சனை செய்ய, சிவபெருமான் உமாதேவியாருடன் விடையின்மேல் தோன்றி, அவரைத் திருக்கைகளால் எடுத்து, "நீ எம்பொருட்டு உன் தந்தையின் காலை வெட்டினாய்; இனி உனக்கு நாமே தந்தை," என்றருளிச் செய்து, "நாம் நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கினோம்; நாம் ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும்

மலரும் உனக்கே கிடைக்கும்படி செய்தோம்,'' என்று கூறித் தாம் அணிந்திருக்கும் கொன்றை மாலையை எடுத்து அவருக்குச் சூட்டினார். பின்னர், அவ்விசார சருமர் பரமசிவனாலே தரப்பட்ட சண்டேசுர பதத்தையடைந்தார்.

## மைந்தனைக் கொன்றவர், சிறுத்தொண்ட நாயனார்:

இவர் சோழ மண்டலத்தில் திருச்செங்காட்டங்குடியில் மாமாத்திரர் குலத்தில் பரஞ்சோதியார் என்னும் பெயருடையவர். "பரமசிவனே மெய்க்கடவுள்'' என்றும், "அவருடைய திருவடிகளையடைதலே முத்திநெறி'' என்றும் தெளிந்து, இராப்பகலாகப் பரமசிவனையே இடைவிடாது துதித்து, சிவனடியார்களுக்குத் திருத்தொண்டும் செய்து வருவார். இவர் அரசனிடத்தில் அணுக்கராகி, அவன்பொருட்டு யானை ஏறிச் சென்று, அவனோடு மாறுபட்ட பலவரசர்களை வென்று, அவர்கள் நாடுகளைக் கைப்பற்றி அரசனால் நன்கு மதிக்கப்பெற்றவர். இவருடைய கற்புடைய மனைவியார் திருவெண்காட்டு நங்கையார். அந் நங்கையாரோடு கூடி இல்லறத்தில் வாழ்ந்திருந்து, நாடோறும் முன்னே சிவனடியார்களை உண்பித்து, பின் தாம் உண்பார். இவருடைய புதல்வர் பெயர் சீராளதேவர். அப்புதல்வருக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கிய நாளில் அத்திருப்பதிக்கு எழுந்தருளி வந்த திருஞான சம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொண்டழைத்து வணங்கித் துதித்து அவராலே திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடியருளப் பெற்றார். சிவபெருமான் இவருடைய உள்ளன்பை வெளியாக்குதற்பொருட்டு ஒரு வைரவர் கோலங்கொண்டு இல்லின்கட்சென்றனர். நாயனார் அவரை வணங்கித் திருவமுது செய்தற்கு வேண்ட, அதற்கு வைரவர் கோலங்கொண்டு வந்த சிவபெருமான், நாயனாரை நோக்கி, "அன்பரே, யாம் வடநாட்டுள்ளோம்; உம்மைக் காண வந்தோம்; நம்மை அமுது செய்வித்தல் உம்மால் முடியாது; அது மிக அருமை; யாம் ஆறு திங்கட்கொருமுறை பசுவைக் கொன்றுண்போம்; அதற்குரிய நாளும் இந்நாளேயாம்; ஆதலால், அப்படியூட்டுதல் உம்மால் இயலாது,'' என்று கூறினர். நாயனார், "மிக நன்று; அடியேன் பல பசுக்களையுடையேன்; தேவரீர்க்கு விருப்பமான பசு இன்னது என்று அருளிச் செய்வீராகில், அங்ஙனமே செய்வேன்,'' என்றனர். வைரவர், "நாம் உண்பது மனிதப் பசு; அஃது ஐந்து ஆண்டு அகவையுடையதாயும், உறுப்புக் குறைபாடில்லாததாயும், ஒரு குடிக்குத் தான் ஒன்றேயாயும் இருக்க வேண்டும்; அவ்வியல்புடைய சிறுவனை மனமகிழ்ச்சியோடு தாய் பிடிக்கத் தந்தை அரிதல் வேண்டும். இப்படிச் சமைக்கப்பட்ட கறியே நாம் உண்போம்,'' என்றனர். நாயனாரும் நங்கையாரும் அதற்கு இசைந்து அங்ஙனமே செய்து வைரவருக்குத் தெரிவிக்க, அவர், "நம்முடன் உண்ணும்பொருட்டு உமக்குப் புதல்வன் உண்டேல் அழையும்,'' என்றனர்.

நாயனார் தரியாது எழுந்து மனைவியாரோடு விரைந்து வீட்டுக்குப் புறத்திலே சென்று, "புதல்வனே ! வா," என்றழைக்க, மனைவியாரும் "சீராளனே! சிவனடியார் அடியேங்கள் உய்யும்பொருட்டு உன்னை யழைக்கின்றார், வா !" என்றழைக்க, அப்பொழுது அப்புதல்வர் பரம சிவனுடைய திருவருளினாலே பள்ளியினின்றும் ஓடி வருபவர் போல வந்தனர். வந்தவப்புதல்வரை நங்கையார் எடுத்துத் தழுவி நாயனார் கையிற்கொடுக்க அவர், "இனிச் சிவனடியார் திருவமுது செய்யப் பெற்றோம் !" என மகிழ்ந்து அடியவரைத் திருவமுது செய்வித்தற்கு உள்ளே வந்தனர். அதற்கு முன்னே, இறைவர் மறைந்தருள, நாயனார் அவரையும் கலத்திலே இறைச்சியையும் காணாமையால், திகைத்து அச்சமுற்று, "இறைவர் அடியேங்கள் உய்யும்பொருட்டுத் திருவமுது செய்யாமல் எங்குச் சென்றனரோ!" என்று தேடி மயங்கிப் புறத்தே செல்ல, நாயனார் செய்தது செய்யத்தகாத செயல்முறையேயாயினும், அவர் மெய்யன்பு நிலை மேலிட்டு நிற்கையால், அதனைச் செய்யத்தக்க செயல் முறையாகவே கொண்டருளிய சிவபெருமான், உமையோடும் முருகனோடும் விடையூர்ந்து வந்து விண்ணில் தோன்றியருளினார். நாயனார் மனைவியார் புதல்வர் பணிப்பெண் ஆகிய நால்வரும் கண்டு, மகிழ்ந்து ஆனந்த அருவி சொரிந்து நிற்க, பரமசிவனும் பார்வதி யம்மையும் முருகவேளும் அந்நால்வரையும் தங்களை எக்காலமும் பிரியாது வணங்கிப் பேரின்பத்தை நுகர்ந்துகொண்டிருக்கும்பொருட்டு உடன் கொண்டு திருக்கயிலையை அடைந்தார்கள்.

## குற்றம் செய்த சுற்றங்களைந்தவர், கோட்புலி நாயனார்:

இந்த நாயனார் சோழ நாட்டிலே, நாட்டியத்தான்குடி என்னும் ஊரிலே, வேளாண் குலத்திலே தோன்றியவர்; படைத்தலைவரா யமர்ந்து அவ்வூதியத்திற்கு நெற்கொண்டு சிவனடியார்க்கும் சிவன் கோயிலுக்கும் செலவிடக் கட்டிவைத்து, அரசன் ஆணைப்படி போருக்குச் சென்று மீண்டு வந்து பார்க்க, அந்நெல்லைத் தம் உறவினர் செல விட்டதறிந்து, அவரைத் தம் வாளால் வீழ்த்திச் சிவபதமடைந்தனர்.

## பூக்கொளுமாதர் மூக்கினை அரிந்தவர், செருத்துணை நாயனார்:

இவருடைய வரலாற்றைக்கழற்சிங்க நாயனார் வரலாற்றிற்காண்க.

## இளமுலை மாதர் வளமை துறந்தவர், திருநீலகண்ட நாயனார்.

இவர் சிதம்பரத்திலே குயவர் குலத்தில் தோன்றியவர் ; சிவபத்தி அடியார் பத்தியிற்சிறந்தவர் ; தம்முடைய குலத்திற்கேற்ப மட்கலங்களை வனைந்து விற்றும், திருவோடுகளைச் சிவனடியார்

கட்குக் கொடுத்தும் வந்தார். இந்நாயனார் சிவபெருமானது கண்டத்தைத் திருநீலகண்டமென்று எப்பொழுதும் சிறப்பித்துச் சொல்லுவார். அதனால் இவருக்குத் திருநீலகண்ட நாயனார் என்பது பெயர். ஒரு நாள் நாயனார் அவ்வூரிலே ஒருவிலைமகளிடத்துச் சென்று வந்ததை இவர் மனைவியார் அறிந்து தம்மைத் தீண்ட வந்த ஒரு நாளில் "நீவிர் எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்!" என்று ஆணையிட்டார். நாயனார் அச்சமுற்று 'என் மனைவியேயன்றி மற்றப் பெண்களையும் மனத்தினாலும் தீண்டேன்!' என்று உறுதிகொண்டு அயலறியாமல் வாழ்ந்து மூப்படைய, சிவபெருமான் சிவயோகி வடிவாய் ஒரு பாத்திரத்தைத் தாங்கித் திருநீலகண்டரிடம் வந்து, "இப்பாத்திரம் மிகவும் சிறப்பானது; இதனை நீர் வைத்திரும்," என்று கொடுத்துப் போய்ப் பின்னர் வந்து பாத்திரத்தைக் கேட்க, அது வைத்த இடத்திற்காணாமையால், "வேறு பாத்திரம் தருகிறோம்," என்று வேண்ட, சிவயோகியார் சினங்கொண்டு, "காணாமற்போனது உண்மையாயின், நீர் உம் மனைவியைக் கைப்பற்றி நீரிலே மூழ்கிச் சத்தியம் பண்ணித்தாரும்," என்றனர். அந்நாயனார் ஒரு மூங்கிற்றடியெடுத்து மனைவியும் தாமுமாக இரண்டு பக்கமும் பற்றி நீரில் மூழ்கப் போகையில், "நீர் மனைவி கையைப் பற்றி மூழ்கும்" என்ன, நாயனாரும் பலருமறிய முன் நடந்தவற்றையெல்லாம் தெரியச் சொல்லித் தண்டினைப் பற்றிக்கொண்டே நீரில் மூழ்கி, மூப்பு நீங்கி இளமையோடெழுந்து, சின்னாள் வாழ்ந்திருந்து சிவபெருமான் அருளால் கயிலாயத்தை அடைந்தார்.

## சிவபெருமான் குதிரை மாறினது:

அரிமர்த்தன பாண்டியரிடம் மந்திரியாராயிருந்த வாதவூரடிகள் குதிரை வாங்கும்பொருட்டு, அவன் கொடுத்த பொருளைத் திருப்பெருந்துறையில் பரமசிவன் தந்த காட்சியைத் தரிசித்து உண்டான அன்பின் மிகுதியால் அச்சிவத்தொண்டில் செலவிட, பின்பு அப்பொருளின்பொருட்டு வருத்தமுறுவிக்கப்பட்ட அவ்வடியவரது துன்பத்தைத் தீர்க்கும்பொருட்டுச் சோமசுந்தரக் கடவுள் நரிகளைக் குதிரைகளாக்கிக் கொணர்ந்து விற்றனர் என்பதாம்.

## சிவபெருமான் மண் சுமந்தது:

வாதவூரடிகளை வருத்தியதன்பொருட்டு அரிமர்த்தன பாண்டியன் மீது உண்டான கோபத்தால் சிவபெருமான் வைகையாற்றை அவனுடைய நகர்மேலேவ, அவ்வாறு மதுரையை அழிக்குமாறு பெருகி வர, அந்நகரத்தார் யாவரும் அரசனாணைப்படி கூலியாள்களை வைத்துக் கரை கோலுகையில், சோமசுந்தரக் கடவுள், பிட்டு

வீற்றுண்ணும் வந்தியென்பாள்பொருட்டு வேலையாளாக வந்தமர்ந்து முடியின்மேல் கூடையில் மண்ணைச் சுமந்துகொண்டு போய்க் கொட்டினர் என்பதாம்.

## சிவபெருமான் மாற்றடி பட்டது :

சோமசுந்தரக் கடவுளாகிய கூலியாளர், யாற்றங்கரையையடைந்து 'வந்தியின் கூலியாள்' என்று தம்மை எழுதுவித்துக்கொண்டு, கரையைக் கோலாது வினையாடிக்கொண்டு நின்றார். அப்பொழுது, அடைக்கப்பட்ட கரைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு வந்த ஏவலாளர்கள், வந்தியென்பாளுக்கு விட்ட பங்கு மாத்திரம் அடைபடாமை கண்டு, அரசனுக்குத் தெரிவித்தார்கள். அரசன் அவரைக் கண்டு சீற்றங்கொண்டு, பொற்பிரம்பைக் கையினால் வாங்கி உலகமே உருவமாகக் கொண்ட அவருடைய திருமுதுகிலடித்தான். சோமசுந்தரக் கடவுள் கூடையோடு மண்ணை உடைப்பில் கொட்டிவிட்டு உடனே மறைந்தருளினார். பெருமான்மீது பட்ட அவ்வடித்தழும்பு அப் பாண்டியன் முதலாயினோர்மேல் பட்டது என்பதாம்.

## இராவணன் கயிலையை எடுத்தது :

இராவணன், தேவாசுரர்களால் இறவா வரம் பிரமனிடம் பெற்றுத் திக்கெல்லாம் வெற்றி கொண்டு, குபேரனை எதிர்த்துப் புட்பக விமானத்தைக் கவர்ந்துகொண்டு, அதிலிவர்ந்து கயிலைமலைக்கு நேரே வர, திருநந்தி தேவர் கண்டு தடைப்படுத்த, "இக்கயிலைமலையை வேரோடு பறித்தெறிவேன்!" எனக் கல்லுகையில், சிவபெருமான் பெருவிரலால் அழுத்தத் துன்புற்று நெடுங்காலம் கீழே கிடந்து வருந்தி, சிவபிரானைத் துதித்து அதனின்று நீங்கி இலங்கைக்குச் சென்றான் என்பதாம்.

# திருஞானசம்பந்தர்

## நேரிசை வெண்பா

**மகிழ்ச்சி மிகவுண்டு போலுமெதிர் வந்து**
**புகழ்ச்சியொடு நீபாடும் போது—நெகிழ்ச்சிமலர்ச்**
**சந்தையினும் வண்டிரையும் தண்புகலிச் சம்பந்தா !**
**தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு.** 13

பதவுரை

**நெகிழ்ச்சி மலர்** - விரிதலையுடைய மலர்களில்,

**சந்தையினும் வண்டு இரையும்** - சந்தை ஒலியினும் வண்டுகள் மிக ஒலிக்கும் (சோலை சூழ்ந்த)

**தண் புகலி சம்பந்தா** - குளிர்ச்சி வாய்ந்த சீர்காழியில் தோன்றிய திருஞானசம்பந்தப் பெருமானே!
**எதிர் வந்து** - திருமுன்னர் அடைந்து,
**புகழ்ச்சியொடு** - சீர்த்தியொடு,
**நீ பாடும்போது** - நீ (வேத நெறி சைவ நெறிகளைப்) பாடுங்கால்,
**தந்தையினும் பால் கொடுத்த தாய்க்கு** - தந்தையாகிய சிவ பெருமானிலும் ஞானப் பாலைக் கொடுத்த அன்னையாகிய உமா தேவியாருக்கு,
**மகிழ்ச்சி மிக உண்டு போலும்** - உவகை மிகவுமுண்டு போலும்.

**விளக்கவுரை**

பிற நாடுகளில் பெறற்கரிய வளமனைத்தும் ஆண்டு நிரம்பலின் அவை கொள்வான் வேண்டி, செறியும் பதினெண்டேய மாந்தரும் பகரும் சொற்கள் எழுத்து வடிவாய்ப் பொருள் பயக்கும் சுத்த மாயா காரியமாகிய ஒலியேயாகியும், அவை சந்தையிற்றிரண்டுழிப் பொருள் பயவாப் பூதகாரிய ஒலியாய் முழங்காநிற்க, வண்டுகள் மணங்கவர்ந்து மது மாந்திப் பாடும் இசைகள் அவ்வொலியினும் மிக்கு இசையெனு மியல்பின்றிப் பெருமுழக்காய் முழங்குமென்பார், **'சந்தையினும் வண்டி ரையும்'** என்றார். சந்தை - பற்பல பொருளுங் கொள்வான பலருங் கூடுமிடம்.

சூரிய வெப்பத்தை வெறுத்துத் தன்பாலடைபவரை மீட்டும் அவ் வெப்பத்தை விரும்பச் செய்யும் சீதளச் சோலையுடைத்தென்பார் **'தண்புகலி'** என்றார்.

**'புகலிச் சம்பந்தா'** என்றது வேண்டிய வேண்டியாங்களித்தலின் எவரும் விழைந்து புகலடையும் தலத்தினர் என்றல். புகழ்ச்சியைப் பாடுமென்னாது 'புகழ்ச்சியொடு பாடும்' என்றது, சிவம் சத்திகளின் புகழ்ச்சியொடு வேத சிவாகம நெறிகளையும் தெரிந்துணர்த்தலான்.

தந்தையார் கல்வியறிவுடைமையால் தனயர் அறிவுடைமையைத் தாம் மதித்து மகிழ்ந்ததும், தாயார்க்கஃதின்மையான் 'உன் மகன் சால்புடையன்' எனக் கற்றோருரைக்கக் கேட்டு மகிழ்தலும் பெரிதும் உலகியல்பாக, இறைவியார் இயற்கையறிவுடைமையின் எதிர் வந்து பாடுங்கால், அத்திருநெறித் தமிழின் அருமையை மதித்தும், தாமளித்த ஞானப்பால் அதற்கேதுவாதலைத் துணிந்தும், இறைவரி னும் இனிது உவந்திருப்பார் என்பார், **'தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு மகிழ்ச்சி மிகவுண்டு போலும்'** என்று கூறினார்.

உண்டுபோலும் என்புழி, போலும் ஒப்பில் போலி. வேதசிவாகம நெறிகளை என்பது அவாய்நிலை. சந்தையினும், தந்தையினும் என்புழி யுள்ள உம்மைகளிரண்டும் உயர்வு சிறப்புப் பொருளவேனும் ஒ றற் கொன்று குறைபாடுடைத்தன்றென்னும் பொருளவாய் நின்றன. 'புகழ்ச்சியொடு' என்புழி, ஒடு என்பதை ஐயுருபாக்கிப் புகழ்ச்சியை எனினும் அமையும்.

# திருநாவுக்கரசர்

## கட்டளைக்கலித்துறை

**தாயிலி யாகுஞ் சிவபெரு மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னாரறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலி னாணவ மாகுங் கபாடமு மன்றிறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னோக்குதற்கே. 14**

### பதவுரை

**நோயிலியாகிய** - பிறவி நோயில் லாதவராகிய,
**சொல்லிறை** - திருநாவுக்கரசர்,
**தான் எனும்** - ஆன்மா எனப்படு கின்ற,
**ஓர் கோயிலின்**- ஒப்பற்றகோயிலின் கண்,
**ஆர்** - பொருந்திய,
**அறிவு ஆகிய நாமம்** - அறிவு என் னும் பெயரை,
**முன் கொண்டிருந்த** - பண்டு முதலே கொண்டுள்ள,
**வாயிலின்** - வாயிலில் பதிந்து நிற்கும்,
**ஆணவம் ஆகும்** - ஆணவ மலம் என்கின்ற,
**கபாடமும் மன் திறந்து**-கதவையும் மிகத் திறந்து,
**தாய் இலி ஆகும்** - தனக்கொரு தாயும் இல்லாதவராகிய,
**சிவபெருமான்தனை** - சிவபெரு மானை,
**நோக்குதற்கு காட்டுவன்** - காணக் காட்டுவர்.

### விளக்கவுரை

**'தாயிலியாகுஞ் சிவபெருமான்'** என்பதற்கு, உயிருணர்வு முளைக்குமளவும் அவ்வுணர்வேயாகிக் காணபபடுதலில் பொருளாய் விளங்கும் சிவபெருமான் எனினுமாம். இப்பொருட்கு, தாய் - வினை யெச்சம். தனக்கொரு தாயிலி - தனக்கொரு மூலமில்லாதவர் என்பது பொருள். ''பிறந்திறந்த கதை கேட்டிலம்'' என்பார், **'தாயிலி'** என்றார். அன்றி, உயிர் அறிவு முளைத்துத் தோன்றுங்காறும் அவ்வறிவேயாய்த் தானென்றொரு பொருள் காணப்படுமாறின்றி நிற்பர் என்பார், **'தாயிலி'** என்றார் எனினும் அமையும். சிவபெருமான் என்றது, எவர்க்கும் பேரின்பம் பயக்கும் இறைவராதலால்.

**'தானெனுமோர் கோயில்'** என்பது, உயிர்க்குயிராய் உண்ணின் றுணர்த்தலின் அவ்வுயிரனைத்தும் இறைவர்க்கு ஆலயம் என்று உப சரிக்கப்படுதலாம். சிவன்போலத் தானே அறிவதன்றேனும் அறிவிக் கின் அறிவதாதல்பற்றி, பண்டுதொட்டே அறிவென்று உபசரிக்கப்பட்டு வருவதென்பார், **'அறிவாகிய நாம முன்கொண்டிருந்த'** என்றார்.

**'வாயில்'** என்றது உணர்த்திய வழியும் அவ்வறிவு யான் என்றும் அவன் என்றும் காண்போனையும் காணப்படுவனவற்றையும் பகுத் துணர்ந்து உயிரின் முளைத்துத் தோன்றுதலான், உயிர் எங்குமிருப்ப தாகலின் ஆன்மா எனப் பெயர் பெற்றதாக, அவ்வாறு எங்குமிருக்கும்

உயிரை அணுத்தன்மை படுமாறு செய்தலின் மலம் 'ஆணவம்' என்னும் பெயர்த்தாயிற்று. அது ஞானாதிரோதகமாய்[1] 'உயிர் என்ப தொன்றில்லை' என்னும்படி பொதிந்துகொண்டு நிற்பதொன்றென்பார்; 'கபாடம்' என்றார். 'திறந்து' என்றது, அம்மலமும் என்றுமுள்ளதாக லின், அதனையொழிப்பது அதனது மறைத்தற்சத்தி மடங்கக் கீழ்ப் படுத்தலான். மல முத்தராயினாரே பிறரையும் மலமுத்தராக்குதற் குரியார் என்றும், இவர் சொல்லளவானே ஆக்கவல்லுநரென்றும் கூறுவார், 'நோயிலியாகிய சொல்லிறை' என்றும், வழிபாடுடை யார்க்குப் பதியறிவை யுறுவித்துக் காணப்படுமாறில்லாத அக்கடவுளை அகத்தே காணக்காட்டுவார் என்பார், 'நோக்குதற்குக் காட்டுவன்' என்றும் கூறினார்.

உயிர் முற்றும் நுண்கோயிலாகவும்,[2] அவற்றினுடலனைத்தும் 'பருக்கோயிலாகவும்'[3] கூறுவது நூற்றுணிபாகலின், பொதுப்படத் 'தானெனுமோர் கோயில்' என்றார் எனினும் இழுக்கன்று. இப்பொருட் கண் 'ஓர்' அசையென்க. உம்மை - உயர்வு சிறப்பு; அல்லது திருமறைக்காடடுத் திருக்கதவன்றி இதையும் என எச்சவும்மை யாக்குக. பின் வருத்தாது ஒழிப்பரென்பார், 'மன்திழந்து' என்றார். சிவனைக் கண்டாலன்றிப் பாசநீக்கமாகிய ஆன்ம சுத்தி பிறவா தாகலான், 'ஆகிய' என்பதனைச் 'செய்யிய' என்னும் வினையெச்சமாகக் கொண்டு, நோயிலியாகும்படி காட்டுவன் என்னலுமாம். முன்னுரைக்கு ஆகிய என்பது ஆக்கவினை இல்லாததனாலேயே, இலக்கணை வகையாற் செய்தவென்னும் பெயரெச்ச வாய்பாட்டின்பாற்படுவதோர் வினையிடைச்சொல்.

## திருநாவுக்கரசு நாயனார் திருமறைக்காட்டில் திருக்கதவம் திறந்தமை

திருநாவுக்கரசு நாயனாரும், திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் பல தலங்களை வணங்கிக்கொண்டு, திருமறைக்காட்டையடைந்து, ஆலயத் துட்சென்று வலம் வந்து, வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச் செய்த திருக்கதவுக்கு முன்னின்று, பிள்ளையார் நாயனாரை நோக்கி, "அப்பரே! நாம் நேர்முகத் திருவாயில் வழியே சென்று பெருமானை வழிபடுதற்குத் திருக்கதவு திறக்கும்படி பதிகம் பாடுக," என்றார் நாயனார்.

1. ஞானாதிரோதகம்—அறிவைப் பொதிந்து நிற்பது.
2. நுண்கோயில் — சூக்குமவாலயம். 3. பருக்கோயில் — தூலவாலயம்.

"பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ
மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே."

என்னும் திருப்பதிகம் பாட, கதவந்திறக்கப்படாமல் தாழ்த்தது கண்டு, "இரக்கமொன்றிலீர்" என்று திருக்கடைக்காப்பிலே பாடி வணங்கினார். உடனே திருக்கதவம் திறக்கப்பட்டது என்பதாம்.

## சுந்தரர்

### எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

**நோக்குறு நுதலோ னின்னிடை விருப்பால்
நூற்பக வன்னநுண் மருங்குல்
வார்க்குவி முலைமென் மகளிர்தம் புலவி
மாற்றுவான் சென்றன னென்றால்
கோக்கலிக் காமன் வயிற்றிடைக் குத்திக்
கொண்டதே துக்குநீ புகலாய்
காக்கரு மதலை விழுங்கிய முதலை
கான்றிடத் தோன்றுநா வலனே.** 15

#### பதவுரை

**விழுங்கிய முதலை** - விழுங்கிய முதலையே,
**கான்றிட** - கரையிற்கக்கும்படி,
**காக்கரும்** - ஒருவராலும் உதிப்பித்தற்கரிய,
**மதலை** - புதல்வன்,
**தோன்றும்** - தோன்றுதற்கேதுவாகிய,
**நாவலனே** - வாக்கின் வன்மையையுடைய புலவரே,
**நோக்குறும் நுதலோன்** - நெற்றிக் கண்ணராகிய சிவபெருமான்,
**நின்னிடை விருப்பால்** - நும்பால் வைத்த அன்பால்,
**நூல் பகவு அன்ன** - நூலின் நேர் பாதியை ஒத்த,
**நுண் மருங்குல்** - நுண்ணிய இடையையும்,
**வார் குவி முலை** - கச்சணிந்த குவிந்த முலைகளையுமுடைய,
**மெல் மகளிர்தம்**-மெல்லிய பரவை நாச்சியாரது,
**புலவி மாற்றுவான்** - ஊடலைத் தணிக்க,
**சென்றனன் என்றால்** - (மகிழ்ந்து) சென்றனன் என்று பெரியோர் சொல்லுவாராயின்,
**கோ கலிக்காமன்** - ஏயர் குடித் தலைவராகிய கலிக்காம நாயனாரொருவர் (அது காரணமாக),
**வயிற்றிடை** - தம் வயிற்றிலே,
**குத்திக்கொண்டது ஏதுக்கு** - குத்திக்கொண்டது யாதுக்கு,
**நீ புகலாய்** - நீர் சொல்லும்.

#### விளக்கவுரை

**நோக்குறு நுதலோன்** - நுதல் உறு நோக்கினோன் என விகுதி பிரித்துக் கூட்டுக; கேடரியன் என்பது, அருங்கேடன் என்றாயவாறு

போல நுதல் நோக்குறுவோன் எனினுமாம். இனி, நுதல் நோக்குறு வோன் என்பதற்கு, கருத்தின் குறிப்பைக் கண்டறிந்த கடவுள் எனினு மமையும். நுதலல் - கருதுதல். நோக்கு - குறிப்பு, உறுதல். ஈண்டு உற்றுணர்தல். 'நோக்குறும்' ஒரு சொன்னீர்மைத்து எனினும் ஒக்கும். கருத்தின் குறிப்பாவது - பெற்ற சிற்றின்பமே பேரின்பமாக நுகர்தல். இவர் இங்ஙனம் நுகர்ந்தமை முன்னர்ப் பெறப்படும்.

நுதற்கட்பெருமானே சுந்தரமூர்த்தியைத் தோழமை கொண்டார். எனவே, புலவி தீர்க்கச் சென்றாரும் அவரே என்பது போதர, **"நோக்குறு நுதலோன் நின்னிடை விருப்பால்................மகளிர்தம் புலவி மாற்றுவான் சென்றனன்"** என்றார்.

இத்தேவியார் மருங்குல், முலைகளால் வாட்டுந்தன்மை பெற்றமையால் அம்மருங்குலின் நுண்மை நோக்கிக் கழிவிரக்கம் கொள்ளுகின்றார் ஆதலின், 'நூற்பகவன்ன நுண்மருங்குல்' என்றார். இதனைப் "பொய் கூறிலம் சிலர்போல்" என இந்நூலாசிரியர் கூறிய செய்யுளானும் உணர்க. நின்பால் வைத்த நேயத்தால் சிவபெருமான் தூது சென்றிருக்க, அது பெருந்தவறு எனச் சிந்தித்திருந்தமை போலுமென்பார், **'குத்திக்கொண்டது ஏதுக்கு'** என்றார். 'அவர் உள்ளக் குறிப்பை அறிந்துளீராதலின், நீர் அறிவிக்க ஐயப்பாடில்லையாம்' என்பார், 'நீ புகலாய்' என்றும் கூறினார். கூறவே, 'சிவன்பால் பெருந் தவறு இயற்றினாரைத் தக்கவாறு ஒறுக்க; அஃதியலாதேல், தம் முயிர் துறக்க' என்பது தலைமை விதியாதலால்காணப்பெறும் இவ்விரண்டனுள் ஒன்று நிகழுமென்னும் துணிபால்,

> "அரிவைகா ரணத்தி னாலே ஆளுடைப் பரமர் தம்மை
> இரவினிற் றூது போக வேவியங் கிருந்தான் றன்னை
> வரவெதிர் காண்பே னாகில் வருவதென் னாங்கொ லென்று
> விரவிய செற்றம் பற்றி விள்ளுமுள் ளத்த ராகி"

இருந்தாராதலின், வரவு கேட்டுழித் தம்முயிர் துறந்தாரென்பது.

'காக்கரு மதலை' என்புழிக் காத்தற்கருமையாவது, காலங் கடந்தமையின் மீட்டுயிர்ப்பித்தற்கியலாமை. மதலையும் என உயர்வு சிறப்பும்மை கொடாதொழிந்தார். ஆளுடைய நம்பிகளது திருவடிகளே நினைவாரை மீளாப்பிறவியின் மீட்க வல்லனவாயின் மீளாச்சேயை இவர் மீட்பித்த இஃதோர் வியப்பன்றென்பது தோன்றற்கு. இது குறிப்பெச்சம். 'தோன்று நாவலன்' என்பது, காரியத்தைக் காரணமாக உபசரித்தல். உதிப்பித்தற்கரிய புதல்வனும் உதித்தற்கேதுவாகிய வன்மையர் என்றபடி.

**கோக்கலிக்காம நாயனார் வயிற்றிடைக் குத்திக்கொண்டமை:**

ஏயர் கோன் கலிக்காம நாயனார் திருப்பெருமங்கலத்தில் வேளாண்குலத்திலுதித்த சிறந்த சிவபத்தர். இவர் சூலை நோயால் வருந்துகையில் சிவபெருமான் இவரது கனவிலெழுந்தருளி, சுந்தர மூர்த்தி நாயனார் வரில் இந்நோய் தவிருமெனத் திருவாய் மலர்ந்தருளி னர். சுந்தரமூர்த்தி நாயனார் பரமசிவனைப் பரவையார் வீட்டிற்குத் தூதனுப்பியவராதலின், அவர் சிவனை இகழ்ந்தவர் எனக் கருதி அவரால் நோய் தணிவதினும் இறத்தலே நலமென்று தமது உடை வாளால் வயிற்றைப் பீறிக்கொள்ள, சிவபெருமான் அருள் செய்து உயிரீந்து சூலை தவிர்த்தருளினர். பின்னர்ச் சுந்தரமூர்த்தி நாயனார் மிக நண்புற்றிருந்தனர்.

## மாணிக்க வாசகர்

### நேரிசையாசிரியப்பா

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடன்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
5 திருவா சகமெனும் பெருநீ ரொழுகி
யோதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
வுளமெனு நிலம்புக வூன்றிய வன்பாம்
10 வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்தது
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே. 16

**பதவுரை**

**வலம் மழு உயரிய** - வலப்பக்கத்திலே மழுப்படையை உயர்த்திய;
**நலம் மலி** - புனிதம் நிரம்பிய,
**கங்கை நதி தலை சேர்ந்த** - கங்கையாறு தலைக்கூடப் பொலிந்த,
**நல் கருணைக் கடல்** - நல்ல சிவமென்கிற அருட்கடலை,
**முகந்து** - (பெருந்துறைப் புகுந்து) மொண்டு;
**உகந்த** - உயர்ந்த;
**மாணிக்க வாசகனெனும்** - மாணிக்க வாசகன் எனப்படுகின்ற,
**ஒரு மா மழை** - ஒப்பற்ற சிறந்த மேகமானது;
**உலகு உவப்ப** - மக்களுயிர்கள் மகிழ;
**பொழிந்த** - சொரிந்த,
**திருவாசகம் எனும்** - திருவாசகம் என்கின்ற,
**பெருநீர் ஒழுகி** - பெருவெள்ளஞ் சென்று,
**ஓதுவார்** - ஓதுபவர்களுடைய;
**மனம் எனும்** - உள்ளமென்கிற;
**ஒள் குளம் புகுந்து** - ஒள்ளிய ஏரியினுள்ளே புகுந்து நிரம்பி,

**நா எனும்** - வாய் என்கின்ற,
**மதகில் நடந்து** - மதகின் வழி வெளிப்பட்டு,
**கேட்போர்** - அன்புடன் கேட்பவர்களுடைய,
**செவி எனும்** - காதுகள் என்கின்ற,
**மடையில்** - மடைகளில்,
**செவ்விதின் செல்லா** - வழுவுதல் இல்லாமல் சென்று,
**உளம் எனும்** - அவர்களுடைய மனம் என்கின்ற,
**நிலம் புக** - நிலத்திற்பாய,
**ஊன்றிய அன்பு ஆம் வித்தில்** - அங்கே பதிக்கப்பட்டுள்ள அன்பென்னும் வித்திலே,
**சிவம் எனும்** - சிவமென்கின்ற,
**மெல் முளை** - சிறு முளை,
**தோன்றி** - முளைத்து,
**வளர்ந்து** - வளர்ச்சியுற்று,
**கருணை மலர்ந்து** - அருள் விரிந்து,
**விளங்குறும்** - ஒளிர்கின்ற,
**முத்தி மெய் பயன்** - முத்தியென்கின்ற உண்மைப்பயனை,
**தரும்** - உதவாநிற்கும்.

## விளக்கவுரை

'வலம் மழு உயரிய' என்பதற்கு 'வல்லமையாக மழுப்படை உயர்த்திய' எனினுமாம். 'நலம்' ஈண்டுப் புனிதமேற்று. கங்கைக்குப் புனிதமாவது, மூழ்கியோர்க்கு அகத்தும் புறத்தும் தூய்மையைத் தருதலுடைமை. 'மழுவுயரிய' என்றதனாலும், 'கங்கை நதி தலை சேர்ந்த' என்றதனாலும் கருணைக்கடல் என்பது சிவபெருமானை உணர்த்திற்று. இனி, அனைத்தையும் புரக்கும் அளவு படாக்கருணையுருவத்தர் என்பார், 'கருணைக் கடல்' என்றார். எவர்க்கும் இன்பம் நல்கலின் 'நற்கருணை' என்றார் எனினுமாம். உயரிய சேர்ந்த என்னும் எச்சங்கள், கருணைக்கடல் என்னும் பெயரைக் கொண்டன.

உலகு என்றது மக்களுயிர்களை; இம்மைப்பயன் கோடற்குரியன அவையேயாகலின். இனி, ஆண்பாற்கியைய வலத்தில் மழுவும் பெண்பாற்கியைய இடத்தில் மானும் ஏந்தியவர் என்பார், 'வலமழுவுயரிய' என்றார். சிவபெருமானது சபையில் கங்கை நதி சேர்ந்தமையை இறைவியார் ஒரு விளையாட்டால் இறைவர் கண்களை மூடுங்கால், எங்கும் இருளடரக் கண்ட அச்சங்காரணமாக வியர்த்த அத்திருக்கரங்களினுதித்த கங்கை அண்டமுழுதுங்கவர்தல் கண்டு அதனைச் செஞ்சடையின் ஓர் மயிரிற்செறித்தனர் என்பதனால் அறிக. இதனை,

> "உமையாள் விழிமூ டவிருட் படலத்
> துலகங் கவலக் கவல்வாள் விழியா
> லமையா வருணா தனிரித் தொளிமிக்
> கருளக் கிளர்வேர் விரறோ றுமெழ
> விமையா விழிமா துவிதிர்ப் பவவை
> யெங்கும் பெருவெள் ளமெனப் பெருகக்
> குமையா தருளென் றெவரும் பரவக்
> கூவிச் சடிலங் குடியேற் றினனே."

என வரும் தணிகைப் புராணச் செய்யுளானும் உணர்க.

**முகத்தல்** - மொள்ளல். சிவபெருமான் மாணிக்கவாசகப் பெருமானை ஆட்கொண்டது திருப்பெருந்துறையாதலால், அது

வருவிக்கப்பட்டது. ஒரு மாமழை என்பதற்கு, மேன்மை வாய்ந்த ஒரு மேகமானது எனினுமாம். **மா** - கருமையுமாம். **உகத்தல்** - உயர்தல். எவர்க்கும் சிவபோகம் விளைய வாசகமாகிய மழையைச் சொரியும் கருணை மேகமாகிய இவரையொத்த மேகம் பிறிதொன்றில்லை என்பார், "**மாணிக்க வாசக னெனுமொரு மாமழை**" என்றார்.

**திருவாசகம்** - அடையடுத்தவாகுபெயராய் நூலை உணர்த்திற்று. **ஒண்குளம்** - அழகிய குளம் ; குளம் ஈண்டு ஏரியின் மேற்று. **ஒண்மை** - அழகு. **நா** - ஆகுபெயராய் வாயை உணர்த்திற்று. **மடை** - நீர் மடுக்கும் சிறு துறை. நீர், செவ்விதிற்செல்லா, புது முளை தோன்றி, தரும் என இயையும். **செல்லா** - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் ; சென்று என்பது பொருள். **ஊன்றிய அன்பு** - முன்னரே பதிந்துள்ள அன்பு. அன்புள் வழி அவ்வன்பே வடிவமாகச் சிவம் வெளிப்படுமென்பார், '**அன்பாம் வித்திற் சிவமெனு முளை தோன்றி**' என்றார்.

'இந்நூல் கேட்டார்க்கு இறுதியில் தருவது பதமுத்தியன்று, பரமுத்தி' என்பார், '**விளங்குறு முத்தி தரும்**' என்றார். இனி, ஏனைய நூலால் உண்டாகும் முத்தி போலாது அந்தமிலின்பத்து அழிவில் வீட்டு நெறியை இந்நூல் தருமென்பார், '**முத்தி மெய்ப்பயன் தருமே**' என்றார் எனினுமமையும். அம்முத்தியொன்றே உண்மைப் பயனாவ தென்பார், '**மெய்ப்பயன்**' என்றார். '**தருமே**' என்புழி ஏகாரம் தேற்றம். '**மலர்ந்து**' என்புழி மலர்தல் விரிவதன் மேற்று; பரந்து என்பது பொருள்.

நீர் மிகாது வரவள்விக்கும் வடவைத்தீயை ஏந்தலும், கங்கையாற்றைத் தலைக்கூடப் பெறுதலுமுடைய கடலின்கண்ணே மேக முகந்தோங்கி உலகுவப்பச் சொரிந்த பெருநீர், ஏரியிற்செறிந்து மதகின் வெளிக் கொண்டு மடைவழிச் சென்று நிலம் புகாநிற்க, அதிற்பதிந்துள்ள வித்தில் முளைதோன்றி வளர்ந்து மலர்ந்து பயன்றருமாறு போலப் பயன்றருமென முற்றும் ஒக்க உருவகித்தமையின் இது **முற்றுருவகம்**.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

பயனாகு நல்லாண் பனைக்குவிடத் திற்கு
மயலாகு நோய்க்கு மருந்தா — முயிராகுஞ்
சிந்துமெலும் பிற்குச் சிரபுரத்து நாவலன்சம்
பந்த னியப்புதிருப் பாட்டு. 17

பதவுரை

**சிரபுரத்து நாவலன் சம்பந்தன்** - சீர்காழியில் முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தர்,
**இயம்பு திருப்பாட்டு** - திருவாய் மலரந்தருளிய திருப்பாடல்களின் விளைவு,
**நல் ஆண் பனைக்கு** - பண்பு மிக்க ஆண பனைக்கு,
**பயன் ஆகும்** - பயனாகும்,
**விடத்திற்கு மயில் ஆகும்** நஞ்சுக்கு மயிலாகும்,
**நோய்க்கு மருந்து ஆம்** - பிணிக்கு மருந்தாகும்,
**சிந்தும் எலும்பிற்கு உயிர் ஆகும்** - உருச்சிதைந்துதிர்ந்த என்பிற்கு உயிராகும்.

விளக்கவுரை

சம்பந்தன் இயம்பு திருப்பாட்டு, ஆண்பனைக்கு - ஆண்பனை சிறத்தற்குப் - பயனாகுமெனவும், விடத்திற்கு - நஞ்சையொழித்தற்கு மயிலாகுமெனவும், சிந்தும் எலும்பிற்கு - உருச்சிதைந்துதிர்ந்த எலும்பு உருக்கொள்ளற்கு - உயிராகும் எனவும் பொருள் கோடலும் ஒன்று. இங்ஙனம் உருபிற்குமுன் பயனை வருவித்தலைத் 'துமர்த்தம்' என்பர் வடநூலார். இங்ஙனம் கோடலை, பிரயோக விவேகம், உடனிகழ்கின்ற என்னும் செய்யுளுரையிற்காண்க.

பயனாகும் என்புழி, பயன் - பழம்; பிரயோசனம் : முதற்பொருட்கு ஙகரவிறுதிப் போலி. 'நல்லாண்பனை' என்றது முத்தமிழ் விரகராற் பாடப்பெற்று முத்தி பெறற்குரிய முதுதவமுடைமையால். இதனை,

"பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறத்த லாலே தாலமுமுன்
புள்ள பாசம் விட்டகல வொழியாப் பிறவி தனையொழித்துக்
கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவாம்
வள்ள லார்மற் றவரருளின் வாய்மை கூறின் வரம்பென்னாம்."

என்னும் பெரியபுராணச் செய்யுளானும் உணர்க.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், என்பைப் பெண்ணாக்கிய வரலாறு

திருமயிலாப்பூரிலே வைசியர் குலத்திலே சிவபத்தி அடியார் பத்தி முதலியவற்றிற்சிறந்த சிவநேசர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஞானப்பால் உண்டமையையும், பாண்டி நாட்டிற்சென்று செய்தருளிய திருவருட்டிறங்களையும் கேட்டு மனமகிழ்ந்து, பிள்ளையாரைத் திசை நோக்கி வணங்கி, எழுந்து நின்று தம்முடைய சுற்றத்தார் அனைவரும் கேட்க, 'அடியேன் என் புதல்வியாகிய அழகிற்சிறந்த பூம்பாவையையும், செல்வங்களையும், என்னையும் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்குக் கொடுத்துவிட்டேன்' என்று சொல்லிப் பேரானந்தம் அடைந்தார். அப்படியிருக்க, ஒருநாள் பூம்பாவை தோழியரோடு கன்னிமாடத்திற்குப் பக்கத்திலேயிருந்த

பூஞ்சோலையிற்சென்று பூக்கொய்யும்போது, ஒரு பாம்பு மல்லிகைப் பந்தரிலே மறைந்து வந்து விரலிலே தீண்ட, அவள் இறந்தனள். சிவநேசர் அதுகண்டு, 'இவளைப் பிள்ளையாருக்கு' என்று சொல்லியதனால், பிள்ளையார வருமளவும் இவ்வுடலையெரித்துஎலும்பையும் சாம்பலையும் ஒரு குடத்திலிட்டுக் கன்னிமாடத்தில் வைத்துத் தினந்தோறும் மஞ்சனம், மாலை, சந்தனம், உணவு, விளக்கு முதலியவற்றை அமைத்து வந்தார்.

இப்படி நிகழும் நாளிலே, 'பிள்ளையார் திருக்கூட்டத்தோடு திருவொற்றியூரில் எழுந்தருளி வந்து இறைவனை வழிபட்டுக்கொண்டிருக்கின்றார்,' என்று பலர் வந்து சிவநேசருக்குச் சொல்ல, அவர் அவர்களுக்கு ஆடை முதலியன அளித்துப் பெருங்களிப்புடன் திருவொற்றியூர் வரையிலும் நடைப்பந்தரிட்டுத் திருவொற்றியூரை அணுகினார். அப்பொழுது பிள்ளையாரும் திருவொற்றியூரை அகன்று, திருமயிலாப்பூரை நோக்கி அடியார் திருக்கூட்டத்தோடு எழுந்தருள, சிவநேசர் அளவில்லா மகிழ்ச்சி கொண்டு விழுந்து வணங்கினார். பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கித் தொழுதுகொண்டெழுந்தருளி, சிவநேசருடைய செய்கையை அடியார்கள் சொல்லக் கேட்டுத் திருமயிலாப்பூரை அடைந்து, சிவநேசரிடத்து நிகழ்ந்ததைத் திருவுளத்தடைத்து, அவருடைய கருத்தை முற்றுவித்தற்பொருட்டுக் கபாலீச்சுரம் என்னும் ஆலயத்தில் நுழைந்து சிவபெருமானை வணங்கித் துதித்துக்கொண்டு, திருக்கோயிலுக்கு மேற்புறத்திலே வந்து சிவநேசரை நோக்கி, "உம்முடைய மகளது எலும்பு நிறைந்த குடத்தைத் திருக்கோயிற்புறமதிற்றிருவாயிலிலே கொண்டு வாரும்!" என்றருளிச்செய்தார்.

சிவநேசர் அவ்வாறே அக்குடத்தைச் சிவிகையிற்கொண்டுவந்து சிவலிங்கப் பெருமான் திருமுன்னர் வைத்து வணங்கினார். அதைப் பார்க்கும்பொருட்டு மனிதர்கள் பூமியிலும், தேவர்கள் வானிலும் வந்து நெருங்கினார்கள். பிள்ளையார் அடியார் திருக்கூட்டம் சூழ்ந்து வரத் திருக்கோபுர வாயிலின் நேரே வந்து பூம்பாவையின் எலும்பு இருக்கின்ற குடத்தைக் கண்டு, சிவபெருமானுடைய பெருமையைச் சிந்தித்து, திருவருள் நோக்கினாலே 'பூம்பாவாய்' என்று விளித்து, 'மண்ணிலே மனிதப் பிறப்பெடுத்தவர்கள் பெறும் பயன் அன்புடனே சிவபெருமானுடைய அடியார்களைத் திருவமுது செய்வித்தலும்; சைவாகம விதிப்படி செய்யப்படுகின்ற திருவிழாவைத் தரிசித்து ஆனந்தம் அடைதலுமே என்பது உண்மையாயின், இவ்வுலகோர் முன் வருவாய்,' என்று,

'மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்'

என்னும் திருப்பதிகத்தை எடுத்தோதியருளினார். அதில் அருளிச் செய்யப்பட்ட 'போதியோ' என்னும் திருவாக்காகிய அமிழ்தம் அவ்வங்கத்திலே பொருந்த, அது குடத்தினுள்ளே உடலாய் வடி வெடுத்தது. பூம்பாவை முதற்றிருப்பாட்டிலே வடிவு பெற்று, வேறெட்டுப் பாட்டிலே பன்னிரண்டு வயதடைந்து குடத்தினுள் அடங்கி யிருந்தனள். பின்பு பிள்ளையார், சமணர்களும் பௌத்தர்களும் இச் செய்கை ஏற்றதன்று என்று எடுத்துச் சொல்வார்கள் என்னும் கருத்தால் பத்தாம் திருப்பாட்டை அருள்ச்செய்யப் பூம்பாவை தன் கை வெளியே தோன்ற, குடமுடைந்து எழுந்தனள். அது கண்டு பிள்ளையார், திருக்கடைக்காப்புச் சாத்தியருளினார். எல்லோரும் பெருவியப்படைந்தார்கள். சிவனடியார்கள் சிவ சிவ என்று ஆரவாரித் தார்கள். தேவர்களும் முனிவர்களும் பூமழை பொழிந்தார்கள்

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

பாட்டான் மறைபுக ழும்பிறை சூடியைப் பாடிமகி
ழூட்டா மகிழ்சொல் லிறைவனைப் பாடி யுவப்புறுக்க
வேட்டான் மலிபெருங் கல்லவன் போல மிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற் கேவிழப் போதுவனே. 18

#### பதவுரை

**மறை புகழும்** - வேதங்கள் புகழ்கின்ற,
**பிறை சூடியை** - பிறை தரித்த சிவ பெருமானை,
**பாட்டால்** - தமிழ்ப்பாக்களாகிய தேவாரங்களால்,
**பாடி** - துதித்து,
**மகிழ் ஊட்டா** - திருவுளம் மகிழ் வித்து,
**மகிழ்** - (தானும்) மகிழ்ந்த,
**சொல் இறைவனை** - நாவரச வள்ளலை,
**பாடி** - புகழ்ந்து பாடி,
**உவப்பு உறுக்க** - அவருக்கு மகிழ்ச்சியை உறுவிக்க வேண்டுமென,
**வேட்டான்** - அன்பு மிக்க ஒருவன்,
**அவன் போல** - அந்நாவரச வள்ளலைப் போல,
**மிதப்பன் என** - யானும் மிதப்பேன் என்று,
**மலி பெருங்கல்** - மிகப் பெருத்த தொரு கல்லை,
**பூட்டா விழ** - தனது உடலிற் பிணித்துக்கொண்டு வீழ்தற்கு,
**மறிதிரை** - மடங்குகின்ற அலைகளையுடைய,
**வார் கடற்கே** - நெடிய கடலுக்கே,
**போதுவன்** - துணிந்து செல்வேன்.

#### விளக்கவுரை

'மறை பாட்டால்' புகழும் எனினும் அமையும். பிறை சூடி-பெயர். 'பாடி' என்பதற்குத் தேவாரப்பாக்களால் பாடி எனலும் ஒன்று. அவ் வேதங்களும் அறியாச் சிவபெருமான் இயல்பனைத்தையும் சிற்றறி வினரும் தெளியுமாறு தேவாரங்களின் அமைத்துத் துதித்து, அச்

சிவபெருமானைத் திருவுளம் உவப்பித்து அவர் உவந்தமை கண்டு, தாமும் சால உவந்தார் என்பார், **'பிறைசூடியைப் பாட்டால் மகிழூட்டா மகிழ் சொல்லிறைவன்'** என்றார். மகிழ் ஊட்டா - மகிழ் ஊட்டி (மகிழ் வித்து). ஊட்டா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பூட்டா - என்பதும் அது. வேட்டான் - வினைப்பெயர். 'வேட்டால் (யான்) போதுவன்' என நூலாசிரியர் தம்மைச் சுட்டி நுவன்றதாக உரைப்பாரும் உளர்.

அவன் போல மிதத்தலாவது - இப்படி இயற்றியாயினும் அவர் அருள் பெற வேண்டுமென்பது கருதி என்க. கல்லிற்பிணிப்புண்டு கடலைக் கடக்கும் வருத்தம் கண்டறிந்துள்ளாராதலின் உடனே அருள் புரிவார் என்பார், **'மலி பெருங்கற் பூட்டா கடற்கே விழப் போதுவன்'** என்றார் எனினுமாம். 'கடற்கே' என்புழி ஏகாரம் தேற்றம். 'போது வனே' என்பதிலுள்ள ஏகாரம ஈற்றசை. 'வேட்டான் பூட்டாக் கடற்கே போதுவன்' என இயையும். போதுவன் - படர்க்கை வினைமுற்று. இனி, வேட்டால் - விரும்பினால். பெருங்கல் - பெருங்கல்லை. பூட்டா - பூட்டி (பிணித்துக்கொண்டு). அவன் போலவே யானும் மிதப்பேன் என்று கடற்கண் விழப் போதுவன் எனினுமாம். அப்பொருட்குப் போதுவன் - தன்மையொருமை வினைமுற்று.

## சுந்தரர்

### எழுசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்

**போத முண்ட பிள்ளை யென்பு**
**பொருகண் மாது செய்ததோ**
**காதல் கொண்டு சொல்லின் மன்னர்**
**கன்மி தப்ப வுய்த்ததோ**
**வாய்தி றந்து முதலை கக்க**
**மகனை நீய ழைத்ததோ**
**யாது நம்பி யரிது நன்றெ**
**னக்கி யம்ப வேண்டுமே. 19**

### பதவுரை

**நம்பி** - நம்பியாரூர வள்ளலே!
**போதம் உண்ட பிள்ளை** - ஞானப் பாலையுண்ட ஞானசம்பந்த வள்ளல்,
**என்பு** - எலும்பை,
**பொருகண் மாது செய்ததோ** - காதொடு மோதுகின்ற கண்களையுடைய பெண்ணாகச் செய்ததோ?
**சொல்லின் மன்னர்** - திருநாவுக்கரசு வள்ளல்,
**கல் மிதப்ப** - கல் தெப்பமாக மிதப்ப,
**காதல் கொண்டு உய்த்ததோ** - அதை விருப்பத்தோடு செலுத்தியதோ?
**முதலை** - முதலையானது,
**வாய் திறந்து** - தன் வாயைத் திறந்து,

**கக்க** - உமிழ;
**மகனை நீ அழைத்ததோ** - புதல்வனை நீ அழைத்ததோ?
**யாது அரிது** - (இம்முத்தொழில்களுள்) எத்தொழில் அரிதாகும்?
**நன்று எனக்கு இயம்ப வேண்டும்** - தெளிய எனக்குத் தெரிவிக்க வேண்டும்.

**விளக்கவுரை**

'**போதமுண்ட பிள்ளை**' என்றது சீர்காழியில் உமாதேவியின் ஞானப் பாலுண்ட ஞானசம்பந்தரை. பாலுண்டமைக்கேற்ப, 'பிள்ளை' என்றார். திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கியது; திருமயிலையில் இவ்வரலாற்றைப் பெரிய புராணம் திருஞான சம்பந்தர் புராணத்துள் காண்க. '**பொருகண் மாது**' என்புழி, பொருதல் - காதளவு சென்று தாக்கல்; 'மாது' என்பது அழகுடைமைப் பொருளது.

'சொற்றுணைவேதியன்' என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாட, அமணர்கள் பிணித்த கல்லே தெப்பமாக மிதப்ப, அதனை வருணனும் தாங்கலின் மனமகிழ்ச்சியிற் செலுத்தினரென்பார், '**கன் மிதப்பக் காதல் கொண்டு சொல்லின் மன்னர் உய்த்ததோ?**' என்றார். 'காதல் கொண்டு' என்புழி, கொண்டு மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு. சொல்லின் மன்னர்-நாவரசர். உய்த்ததோ என்பதில் ஓகாரம் வினாப் பொருளது.

உண்ட மகனை உருச்சிதைதலின்றி உடனுமிழ்தலும் முதலைக்கு இயலாததாக, அதுவே, சின்னாட்சென்றபின் கழிந்த ஆண்டுகட்குரிய வளர்ச்சி நிரம்பிய மதலையாக உமிழ அழைத்தனர் என்பார், '**முதலை கக்க மகனை நீ யழைத்ததோ?**' என்றார். 'அழைத்ததோ' என்பதில் ஓகாரம் வினாவோடு பிரிநிலையுமாம்; அவ்விரு செயலினின்றும் பிரித்தலான்.

இம்முச்செயலும் செயற்கரிய செய்கைபேயாயினும், கன்னிகை யாக்குதற்கு என்பும், மிதத்தற்குக் கல்லும் ஆதாரமாயிருக்க, மகனை யழைத்தற்கு அங்ஙனம் ஆதாரமின்றாகவும் பாடலொன்றானே அம் மகனையுண்டாக்கி அழைத்தமையின் அவற்றிலும் இஃது அற்புதமுடைமையும், இவை தேவரகசியமாகலின் யானே சிந்தித்துணர வல்லனோ நீயே செவ்விதில் தெளிவித்தருள வேண்டுமென்பது போதர, '**யாது நம்பி யரிது நன்றெனக்கியம்ப வேண்டும்**' என்றார்.

கன்னிகையாக்குதற்கு என்பும், மிதத்தற்குக் கல்லும்போல ஆதாரமின்றாகவும், பாடலொன்றால், மகனை உண்டாக்கி அழைத்தமையால், இவர் செய்கை அருமை என்பதாம். இதனை,

''வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவ
ணுறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதா
லிறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

என வரும் செய்யுளானுணர்க.

இச்செய்யுளை எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தமாகக் கொள்ளுதலேயன்றிச் சந்தக்கலி விருத்தமாகக் கோடலுமொன்று.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

**''வேண்டுநின் னடியார் மெய்யன் பெனக்கு**
**மருள்செய் சிவனே யலந்தே னந்தோ**
**முறையோ! முறையோ! இறையோ னே!''என்**
**றழுது செம்பொ னம்பலக் கூத்த**
**5 னருளாற் பெற்ற வன்பினி லொருசிறி**
**தடிய னேற்கு மருளல் வேண்டும்**
**நீயே கோட னின்னருட் பெருக்கிற்**
**கேற்ற தன்றிள வேறுகந் தேறியைப்**
**பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக**
**10 திருந்திய வேத சிரப்பொருண் முழுதும்**
**பெருந்துறை யிடத்துப் பெருஞ்சீர்க்**
**குருந்துறு நீழலிற் கொள்ளைகொள் வோயே! 20**

#### பதவுரை

**இள ஏறு**- இளமை பொருந்திய விடையினை,
**உகந்து ஏறியை**-விரும்பிச் செலுத்திய சிவபெருமானை,
**பரிமா மிசை** - குதிரை மீது,
**வர பண்ணிய வித்தக**- வரச்செய்த வித்தகரே !
**பெருந்துறையிடத்து** - திருப்பெருந்துறையென்னும் தலத்திலே,
**பெருஞ்சீர்**- மிக்க மேன்மையுடைய,
**குருந்து உறு நீழலில்** - குருந்த மரத்தின் விர்ந்த நிழலில்,
**திருந்திய** - திருத்தமடைந்த,
**வேத சிரம்** - வேத முடிவிற் செறிந்த,
**பொருள் முழுதும்** - சைவ சிந்தாந்தப் பொருள் முழுதும்,
**கொள்ளை கொள்வோய்** - (சிவ பெருமானிடத்துக்) கொள்ளை கொண்ட திருவாதவூரண்ணலே!
**சிவனே** - 'சிவபெருமானே!
**நின் அடியார் மெய் அன்பு** - நினது அடியார்களது உண்மையன்பு,
**எனக்கும் வேண்டும்** - எனக்கும் உரித்தாக வேண்டும்,
**அருள் செய்** - அருள் செய்வாய்!
**அலந்தேன்**-(அதனைப் பெறாமையாலே) துயருற்றேன்,
**அந்தோ** - ஐயோ!

**முறையோ முறையோ** - (திருவருள் புரியாமை) முறைமையோ! முறைமையோ!
**இறையோனே** - முதல்வனே!'
**என்று அழுது** - ,
**செம்பொன் அம்பலம்** - செவ்விய பொன்னம்பலத்திலே,
**கூத்தன் அருளால்** - நடித்தருளும் சிவபெருமானது திருவருளால,
**பெற்ற அன்பினில்** - அடைந்த அன்பிலே,
**அடியனேற்கும்** - அடியேனுக்கும்,
**ஒரு சிறிது** - மிகச்சிறிது,
**அளித்தல் வேண்டும்** - தந்தருளல் வேண்டும்,
**நீயே கோடல்** - முற்றும் நீரே கொள்ளுதல்,
**நின் அருள் பெருக்கிற்கு** - நுமது கருணை மிகுதிக்கு,
**ஏற்றது அன்று** - முறைமையன்று.

விளக்கவுரை

'அடியார் மெய்யன்பு' என்பதற்கு, அடியாரிடத்துக்கொள்ளும் உண்மையன்பு எனினுமாம். 'வேண்டு நின்னடியார் மெய்யன் பெனக்கு மருள் செய் சிவனே' என்பதை,

"ஐய நின்ன தல்ல தில்லை மற்றொர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை பொய்மை யேனென் றெம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த வன்ப ரன்பெ னக்கு மாக வேண்டுமே"

என வரும் திருவாசகச் செய்யுளானுணர்க. எனக்கும் என்றது மணிவாசகப் பெருமானை. உம்மை இழிவு சிறப்போடு இறந்தது தழீஇயது. 'அலந்தேன்' என்பதற்கு 'அன்பைப் பெற ஆர்வமிகுந்தேன்' எனினுமாம். அலந்தேன் என்பதை,

"கலந்து நின்ற னடியாரோ டன்று வாளா களித்திருந்தேன்
புலந்து போன காலங்கள் புகுந்து நின்ற திடர்பின்னாள்
உலந்து போனே னுடையானே யுலவா வின்பச் சுடர்காண்பான்
அலந்து போனே னருள்செய்யா யார்வங் கூர வடியேற்கே."

என வரும் திருவாசகச் செய்யுளானும் உணர்க. 'அலந்தேன்' என்பதற்கு 'இன்பவொளியைக் காணும்பொருட்டுத் துன்பப்பட்டேன்' என்னலும் ஒன்று. அலத்தல் - துயருறல்.

"அந்தோ அலறிடேன் உலறிடேன் ஆவிசோரேன்
முனைவனே முறையோநான் ஆனவாறு முடிவறியேன்'
(திருச்சதகம்)

என்றமையால், 'அந்தோ முறையோ முறையோ இறையோனே என்றழுது' என ஆசிரியருங்கூறலாயினார். அந்தோ - ஐயோ; இது சிங்கள நாட்டுச் சொல். முறையோ முறையோ என்னும் அடுக்கு, அவலத்தின் கண் வந்தது. ஒகாரங்கள் இரண்டும் முறைப்பாட்டில் வந்தன. இங்ஙனம் ஒருகாலன்றி ஆங்காங்கும் மிகப்பல காலமுதமையால் தொழிற்பன்மையுமாம்.

**'செம்பொன் அம்பலக் கூத்தன் அருளாற்பெற்ற அன்பு'** என்றது திருப்பெருந்துறையினின்றும் நீங்கித் தில்லையில் ஐந்தொழில் தோன்ற நடனம் புரிந்தருளிய இறைவனாலருளப்பெற்ற அன்பை. செம்பொன் அம்பலக் கூத்தன் என்பது, கூத்தனாயினும் செம்பொன் அம்பலப் பிரானாயுள்ளான் என்றவாறு.

தான் அளவிலின்பத்துள் அணுவே நல்கினும் அது கொண்டுய் வேன் என்பார், **'பெற்ற வன்பினிலொரு சிறிது'** என்றார். ஒரு-தமிழடை. அடியனேற்கும் என்றது தகுதியில்லாதானும் மணிவாசகப்பெருமானது திருமுன் நின்ற சிறப்பால், தகுதியுடையானாயினமையை; உம்மை - இழிவு சிறப்பு; இறந்தது தழீஇயதுமாம். அடியனேற்கும் என்பது, ஆசிரியரைக் குறித்தது எனினுமமையும். மெய்த்தொண்டர்க்குரிய மெய்யன்பு எனக்கும் வேண்டுமென்றழுது சிவன்பாற்பெற்றிராதலின், அங்ஙனமே வேண்டுமெனக்கும் சிறிதளிப்பதே முறைமை என்பார், **'அருளல் வேண்டும்'** என்றார். அருளல் வேண்டும் - அருள்வீர்; இஃதொரு சொன்னீர்மைத்து.

தக்காரையும் தகவிலாரையும் ஒப்பப் புரக்கும் அருளில் முதிர்ந்து உலகினர்க்கு அஞ்ஞான இருளோட்டி உண்மை விளக்குவான், ஞானா தித்தனாகத் தோன்றிய நீர், நல்காது கோடல் தகுதியன்றென்பார், **'நீயே கோட னின்னருட் பெருக்கிற் கேற்ற தன்று'** என்றார். 'நீயே' என்புழி, ஏகாரம் பிரிநிலை, கோடல் - தொழிற்பெயர். அருட்பெருக்கு - அருண்மிகுதி.

அறவிடையை ஏறிச் செலுத்திய சிவபெருமானை அவ்வறவடிவ மாகிய வேதப் பரியில் இவர் வித்த வித்தகரென்பார், **'இளவேறுகந்தேறியைப் பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக'** என்றார். இளவேறுகந்தேறி- சிவபெருமான்; இது பெயர். பரிமா - குதிரை; இருபெயரொட்டு. வித்தக - அண்மை விளி; இதற்கு முதல் வேற்றுமை, வித்தகன். வித்தகம் என்பது விசித்திரத்தையும் அறிவையும் சுட்டி இரட்டுற மொழிதலாய் நின்றது. மரடேறியைக் குதிரை ஏறச் செய்த சமர்த்தர் என்பது மற்றொரு பொருள். வேத முடிவிற்செறிந்த சித்தாந்தப் பொருள்களே திருத்தமுடையன; ஏனையவை பிணக்குடையன வாதலால், **'திருந்திய வேதச் சிரப்பொருள்'** எனப்பட்டது. பெருந் துறை ஒரு திருப்பதி. வெட்டுந்தோறும் புனல் பெருகி எங்கும் பரவ லால் அப்பெயர் பெற்றது. இதனை,

"ஒழிதரான் வெட்டுந் தோறு முறுபுனல் பெருகி யெங்கும்
வழிதரப் பரவ லாலே பெருந்துறை யெனும்பேர் வாய்ந்த
தழிவிலந் நாரங் கண்டோ ரியாவரு மதிச யித்தார்
பிழிமலர் வேப்பந் தாரான் பேருவப் புடைய னானான்."

என வரும் திருப்பெருந்துறைப் புராணச் செய்யுளானறிக. பிறவிக் கடலைக் கடக்குந் துறையாதலால், 'பெருந்துறை' எனக் கோடலும் ஒன்று.

அறத்தளிர் தளிர்த்து மெய்ம்மலர் மலர்ந்து விளங்குதலின் அதனைப் **'பெருஞ்சீர்க் குருந்து'** எனச் சிறப்பித்தார். குருந்து - ஒருவகை மரம். **'உறுநிழல்'** என்றது, தன்னைப்பற்றி வருவன, பிறவுயிர்களைப்பற்றி வருவன, தெய்வத்தைப்பற்றி வருவன என்னும் மூவகைப் பிறவித் துன்பங்களையொழித்தலான்.

**'முழுதும் கொள்ளை கொள்வோய்'** என்றதனால், வேதச் சிரப் பொருள் முழுதும் ஒருவர்க்கும் சுதந்தரமின்றித் தானே ஒருங்கு பெற்றனர் என்பது போதரும். கொள்வோய் முன்னிலைக்கண் வந்தது; அதற்குப் படர்க்கை, கொள்வோன் என்க. 'திருந்திய கொள்வோய்' என வினையெச்ச முடிபாக்கலும் ஒன்று; அதற்குத் திருந்திய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அது கொள்வோய் என் பதன் பகுதியில் முடிந்தது. 'கொள்வோயே' என்புழி, ஏகாரம் ஈற்றசை.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

**கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்**
**தள்ளும் திருஞான சம்பந்தா!—வெள்ளமிடு**
**மேடேறப் பால்குறைந்த தென்றழுவ ரேகழுவின்**
**காடேறப் புக்கவரு கர். 21**

**பதவுரை**

**கொள்ளை கொள்ள** - யாவரும் கொள்ளை கொள்ளும்படி,
**வீடு உதவி** - முத்தியுலகத்தை உதவி,
**கூற்றை** - இயமனை,
**பிடர்பிடித்துத் தள்ளும்** - அணுகாது அகற்றிய,
**திருஞானசம்பந்தா** - திருஞான சமபந்த வள்ளலே!
**கழுவின் காடு** - கழுக்கூட்டத்திலே,
**ஏறப்புக்க** - ஏறும்படி துணிந்த,
**அருகர்** - அமணர்கள்,
**வெள்ளம் இடும்** - வைகையாற்றுப் பெருக்கிலிட்ட,
**ஏடு ஏற** - ('வாழ்க அந்தணர்' என்னும் திருப்பாடல் வரைந்த) ஏடு எதிரேறிச் செல்லப் பார்த்து,
**பால் குறைந்தது என்று** - தம்பக்கம் குறைந்ததென்று,
**அழுவரே** - அழத்தக்கவரே.

**விளக்கவுரை**

**கொள்ளை கொள்ளல்** - ஒரு பொருளைச் சுதந்தரமில்லாதாரும் சுதந்தரமாகக் கொள்ளுதல். யாவரும் கொள்ளை கொள்ள வீடுத

வினது தமக்குத் திருமணம் நடந்த காலத்து. இக்கருத்துப் பற்றியே,

> 'வாட்டுபவங் கொள்புகலி வண்புலவன் பேரின்ப
> வீட்டுபவங் கொள்ளைகொள விட்டநாள்''

என்றார் இவ்வாசிரியரே திருவெங்கைக் கலம்பகத்தும், 'வீடுதவி' என்றது, பற்றகன்ற பரமுத்தியுதவினமையை. அம்முத்தி பெற்றார், இரும்புண்ட நீரிற்றிரும்பாமையின், இயமனை அவர்மாட்டு என்றும் எய்தாதவனாக்கினர் என்பார். 'கூற்றைப் பிடர் பிடித்துத் தள்ளும்' என்றார். கூற்று - இயமன்; உடலையும் உயிரையும் வறுபடுத்துபவன் என்பது காரணக்குறி. பிடர் பிடித்துத் தள்ளுதல் - அணுகாதகற்றல் என்னும் பொருட்டாய் உலக வழக்குப்பற்றி வந்தது. தம்மை வழி பட்டாரெவரையும் ஞானசம்பந்தராகச் செய்கின்றமையால், 'திருஞான சம்பந்தர்' என விளிக்கப்பட்டார். வெள்ளம் - வைகையாற்றுப் பெருக்கு. ஏடு - 'வாழ்க அந்தணர்' என்னும் திருப்பாடல் திருப்பதிகம் எழுதிய திரு ஏடு.

ஏடேறப் பால் குறைந்ததென்பதும், அருகர் என்பதும் இரு பொருட்பதமாய் நின்றது. பால் ஈண்டுத் தம் கொள்கை மேற்று; பால் - பக்கம், பால். கழுவின் காடேறப்புக்க அருகர் நாட்டின் விலை வாசி அறியாராதலின் ஏடேறப் பால் குறைந்தமைக்கு உவத்தலன்றி அழுதனர் எனச் சாதுரியப் பொருள்படக் கூறினார். கழு - கழுமரம்; கழுகு என்க. காடு என்பதற்கேற்ற அடையென்க.

அருகர் - ஆருகதன் என்பவனால் அமைக்கப்பட்ட மதத்தை யுடையவர்; அறிவு குறைந்தவர். 'அழுவரே' என்புழி, ஏகாரம் தேற்றம். எண்பெருங்குன்றத்து எண்ணாயிரவரும் அவர் மாணாக்கரும் ஏறுதற்குத் தொகுத்த எண்ணிலாக் கழுமரங்களாதலின், 'கழுவின் காடு' எனப்பட்டது. காடு ஈண்டு மிகுதி மேற்று. பிள்ளையார், அறத் தாறு கருதி, ''சிவபெருமானுக்கு ஆட்பட்டுய்யுங்கள்! ஏன் வாளா இருக்கின்றீர்கள்?'' என்று அருளவும் அதனை இழித்து வலிந்தேறிய வன்மையர் என்பார், 'ஏறப் புக்க அருகர்' என்றார். இதனை,

> '' இன்ன மறத்தா றிசைக்கின்றே னீரேன் வாளா விறக்கின்றீ
> ரன்னை யனையான் எம்மிறைவ னவனுக் காளா யுய்மின்கள்!
> என்ன வேட சிறியாய்நீ எவ்வா றெங்கட் கடாதமொழி
> சொன்ன தென்று மானமுளார் கழுவி லேறத் தொடங்கினார்.''

என வரும் திருவிளையாடற்புராணத்தான் அறிக.

திருத்தொண்டர் திருமடத்தில் தீயிட்ட இவர்க்கிது தகும் எனப் பின் விலக்காமையின் அத்தண்டனைக்குரியவரே என்பார், 'அருகர்' என்றுங் கூறினார். எண்பெருங்குன்றங்களாவன: — அஞ்சனம், கௌஞ்சம்

கோவர்த்தனம், திரிகூடம், காஞ்சி, குஞ்சரசையம், ஏமகூடம், விந்த மென்பன. இவை சமண குரவருறையும் இடங்கள்.

திருஞானசம்பந்தரே! கழுமரங்களிலேறத் துணிந்த அமணர்கள் அனல் வாதத்தில் தோற்றதேயன்றிப் புனல் வாதத்திலும் தோற்றமை யால் தம் பக்கம் குறைந்ததென்று அழுவரென்பதாம். இச்செய்யுளைத் திராவிட மாபாடிய முனிவராகிய சிவஞான சுவாமிகள் மிகப் பாராட்டுவர் என்பர்.

## திருஞானசம்பந்தர் வீடு உதவிய வரலாறு

திருஞானசம்பந்தருக்குத் திருமணம் செய்தருளுதற்குரிய பருவம் வந்த பொழுது சிவபாதவிருதயரும் அவர் சுற்றத்தாரும் ஒருங்கு கூடி, பிள்ளையாரை நோக்கி, "தேவரீர் வைதிகச் சடங்கைப் பிறருக்குக் காட்டும்பொருட்டு, ஓர் கன்னிகையை மணம் செய்தருள வேண்டும்," என்று விண்ணப்பம் செய்ய, பிள்ளையார் வேத நெறி நிலைப்படும் பொருட்டு அதற்கு உடன்பட்டருளினார். உடனே தந்தையாரும் சுற்றத்தாரும் மனமகிழ்ந்து, திருநல்லூர் நம்பாண்டார் நம்பி என்பவ ருடைய புதல்வியே திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு மனைவி யாதற்குத் தகுதியுடையவள் என்று எண்ணி மணம் பேசினர். நம்பாண்டார் நம்பியும் அதற்கு உடன்பட்டனர். பின்பு திருநல்லூரிலே நம்பாண்டார் நம்பி இல்லத்தில் திருமணம் நடக்கும்போது திருத் தாலியைச் சாத்தி, பொரியைத் தீயிலிட்டு, தீயாவார் சிவபெருமானே எனக் கருதி, வேத விதிப்படி வளர்க்கப்பட்ட தீயை வலம் செய்து, தமது திருமணத்திற்கு வந்திருந்த யாவரும் சூழும்படி மனைவியாரோடு திருப்பெருமணம் என்னும் சிவன் கோவிலில் நுழைந்து, தம்முடைய திருமணத்தைக் கண்டவர்களுடைய பாசத்தை நீக்கத் திருவுளங் கொண்டு, "பரம்பொருளே! தேவரீருடைய திருவடிகளை அடையும் வேளை இது," என்று,

"கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்திரி
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பரனே."

என்னும் திருப்பதிகத்தைப் பாடியருளலும், அப்பொழுது அருள் வள்ளலாகிய சிவபெருமான் தூய ஒளி வடிவாய்த் தோன்றுதலும், அவ்வொளிப்பிழம்பில் யாவரையும் முன்னர்ச் செலுத்திவிட்டுப் பின்னர்த் தாம் மனைவியாரோடு புகுந்து இரண்டறக் கலந்தார் என்பதாம்.

## திருஞானசம்பந்தர் கூற்றைப் பிடர்பிடித்துத் தள்ளின வரலாறு:

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருச்செங்காட்டங்குடியி னின்று புறப்பட்டுத் திருமருகலுக்குப் போய், சிவபெருமானை வணங்கிக்கொண்டு சில நாள் அங்கிருந்தார். அந்நாளிலே ஒரு வணிகன் வழிச் செல்வோனாக ஒரு கன்னிகையையும் உடன் கொண்டு கோயிலுக்குப் புறத்திலே ஒரு திருமடத்தில் இரவில் நித்திரை செய்யும்போது பாம்பினாலே தீண்டப்பட்டு மாண்டான். அது கண்டு அக்கன்னியானவள் தளர்ந்து அவனைப் பாம்பு தீண்டியும் தான் தீண்டாமல், அவனருகில் வீழ்ந்து புரண்டு அழுதாள். அப்பொழுது நஞ்சு தீரக்கும் மருத்துவர் வந்து தீர்க்கவும் தீராததாயிற்று. விடியற் காலத்திலே அக்கன்னி மிகவும் அயர்ந்து புலம்பி, திருக்கோயிலின் வாயில் திசையை நோக்கிக் கைதொழுது, "தேவர்கள் உய்யும் பொருட்டு நஞ்சை அமுதாக்கிய கடவுளே! வெந்து பொடியாகிய மன்மதனுடைய உயிரை அவன் மனைவியாகிய இரதி வேண்ட அருளிச் செய்த அருள் வள்ளலே! மார்க்கண்டேயர்பொருட்டு இயமனை உதைத்த திருவடித் தாமரையையுடையவரே! திருமருகலில் எழுந் தருளியிருக்கும் சிவபெருமானே! தேவரீர் இக்கொடிய நஞ்சு நீங்கும் பொருட்டும், அடியேன் துன்பக் கடலினின்று கரையேறும்பொருட்டும் அருள் செய்யும்,'' என்று வேண்டினாள். அவ்வோசையைக் கடவுளை வணங்க எழுந்தருளி வருகின்ற திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கேட்டு, திருவுளம் இரங்கி, அவர்களுக்கு அருள் செய்யும்பொருட்டு அடியார்களோடு எழுந்தருளி வந்து நின்று, அவளை நோக்கி, "அஞ்சாதே! நிகழ்ந்ததைக் கூறு'' என்று அருளிச் செய்தனர். அக்கன்னியானவள் கண்ணீர் சொரிய, பிள்ளையாருடைய திருவடியிலே விழுந்து வணங்கி எழுந்து நின்று, "வைப்பூரில் இருக்கின்ற தாமன் என்னும் பெயரையுடைய என் தந்தைக்குப் புதல்வியர் எழுவர். அவர்களுள் என்னை ஒழிய மூத்தோர் அறுவரையும் தன் மருமகனாகிய இவனுக்கே மணம் செய்து கொடுப்பேன் என்று சொல்லிச் சொல்லிப் பிறரிடத்திலே பொருள் பெற்றுக்கொண்டு அவர்களுக்கு மணம் செய்து கொடுத்துவிட்டான். அது கண்டு, 'மனவருத்தமுற்ற இவ னுக்கே நான் மனைவியாதல் வேண்டும்' என நினைத்து, பின் தாய் தந்தையர்களை மறைத்து இவனையே சார்ந்து வந்தேன். இவனும் பாம்பினாலே தீண்டப்பட்டு இறந்தான்; அடியேன் கடல் நடுவே கலம் கவிழப் பெற்றாற்போல நிற்கின்றேன். தேவரீர் எழுந்தருளி வந்து அடியேனுடைய துன்பமெல்லாம் நீங்க அருள் செய்தீர்!'' என்றாள். பிள்ளையார் நஞ்சு நீங்கும்பொருட்டுத் திருமருகல் கடவுளமேல்,

"சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே!"

என்னும் திருப்பதிகம் பாடியருளினார். உடனே வணிகன் நஞ்சு நீக்கி எழுந்து பிள்ளையாரை வணங்கினான். அது கண்ட திருத்தொண்டர்கள் எல்லோரும் ஆரவாரித்தார்கள். அக்கன்னியும் மனமகிழ்ந்து பிள்ளையாருடைய திருவடியிலே விழுந்து வணங்கினாள். கன்னியையும் வணிகனையும் மணம் செய்வித்து அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பி விட்டுப் பிள்ளையார் அங்கே சில நாள் எழுந்தருளியிருந்தார்.

## திருஞானசம்பந்தர் வைகையிலிட்ட ஏடு எதிரேறிச் செல்ல அருகர் கழுவேறின வரலாறு:

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாருமாகிய இவ்விருவர் வேண்டுகோளால் பாண்டி நாட்டையடைந்து, பாண்டியனுடைய அரண்மனைக்கு எழுந்தருளினர். பிள்ளையார் அரண்மனை வாயிலுள் அணைந்து முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, கோயிலுட்புகப் பாண்டியன் அவரை நோக்கித் தன் முடியின் பக்கத்திலிருக்கும் மணிகள் பதித்த இருக்கையைக் காட்ட, அப்பிள்ளையார் அதிலே வீற்றிருந்தருளினார். அப்பொழுது சமணர்களெல்லோரும் அச்சங்கொண்டார்கள். பாண்டியன் பிள்ளையாரை நோக்கி, அவரது ஊர் முதலியவற்றை வினவ, அதற்கு அவர் திருப்பதிகத்தினாலேயே விடை கொடுத்தருளினார். பிள்ளையார் அருகிலிருந்த சமணர்கள் அவர்மீது பொறாமை கொண்டு, அவரோடு பல வாதிட்டு, வெப்பு நோய் தீர்த்தல் முதலியவற்றில் தோல்வியுற்று முடிவில் "முன்னே இரண்டு தரம் வாது செய்தோம்; இன்னும் ஒருதரம் செய்ய வேண்டும்; மூன்று தரத்தில் ஒரு தரமாயினும் வெற்றி பெறுவோம்," என்றார்கள். பாண்டியன், 'இது என்ன செயல்?' என்று மறுத்த பின்னும் பிள்ளையார் சமணர்களை நோக்கி, 'இனி என்ன வாது செய்வோம்?' என்று வினாவியருள, சமணர்கள், 'நாம் இரு பக்கத்தோரும் நம் சமய உண்மையை எழுதிய அவ்வேட்டை ஓடுகின்ற வைகையாற்றிலே இடுவோம்; எதிர்ந்து செல்லும் ஏடே மெய்ப்பொருளுடையது' என்று கூற, பிள்ளையார் 'அப்படியே செய்வோம்' என்று அருளிச்செய்தார். சமணர்கள் 'அத்தி நாத்தி' என்று எழுதிய ஏட்டை வைகையாற்றிலிட, அது விரைந்து கடலை நோக்கி ஓடிற்று. பிள்ளையார்,

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே!'

என்னும் திருப்பாடலைப் பாடி ஏட்டில் எழுதி, அதை வைகையில் இட்டருளலும், அத்திருவேடு ஆற்றிலே எதிர்ந்து நீரைக் கிழித்துக் கொண்டு எதிர் ஏறிச் சென்றது. 'நாங்கள் வாதிலே தோற்றோமாயின் எங்களை இவ்வரசர் கழுவில் ஏற்றக்கடவர்' என்று சமணர்கள் முன் சொல்லிய வண்ணம், குலச்சிறை நாயனார் கழுத்தறிகளை நிரையாக நடுவித்து அவைகளில் ஏற்ற, கொடும்பாவிகளாகிய சமணர்கள் எண்ணாயிரவரும் ஏறினார்கள்.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

**அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியெனப்**
**பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு**
**கருகக் கடல்விட முண்டோ னடியிற் கசிந்துமனம்**
**உருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த வுனக்கரிதே. 22**

**பதவுரை**

**கடல் விடம்** - பாற்கடலிற்றோன்றிய நஞ்சினை,
**பெருமிடறு கருக** - பருத்த கண்டம் கறுக்க,
**உண்டோன் அடியில்** - உண்டருளிய சிவபெருமான் திருவடியில்,
**மனம் கசிந்து உருக** - மனம் உருகிக் கசிய,
**கடல் அன்பு** - கடல் போலும் அன்பை,
**பெற்ற** - அடைந்த,
**சொல் வேந்த** - வாகீசப் பெருமானே!
**அருகக் கடல்** - சமணக் கடலை,
**கடந்து ஏறியதோ** - நீந்திச் சைவமென்னும் கரையில் ஏறியதோ?
**பெருகு அக்கடல்** - பெருகிய அக்கடலை,
**சிலை அம்பி என** - கல் தெப்பமாக மிதப்பக்கொண்டு,
**கடந்து ஏறியதோ** - நீந்திக்கரையேறியதோ?
**உனக்கு அரிது சொல்** (இவற்றுள் யாது) நுமக்கு அரியது சொல்வீராக!

**விளக்கவுரை**

ஆழமுடைமையானும், கருநிறமுடைமையானும், முடை நாற்றமுடைமையானும், பிறவும் செறிந்திருத்தலானும் கடலை நிகர்ப்பவர் ஆதலான் 'அருகக்கடல்' என உருவகித்தனர். அருகர் + கடல் = அருகக் கடல் என்றாயது; 'சில விகாரமா முயர்திணை' என்பதனால். நீற்றறையில் இடுவித்தல், நஞ்சூட்டுதல் முதலிய கடுந்தொழிலுடைய அவ்வருகக் கடலைக் கடத்தல் அரிதென்பார் 'அருகக்கடல் கடந்தேறியதோ' என்றார். 'ஏறியது' என்பதற்குச் சைவமென்னும் கரையில் ஏறியது என உரை கூறப்பட்டது; சமண சமயச் சார்பு நீங்கிய பின்னர்ச் சைவ சமயச் சார்பு பெற்றமையான்.

சிலை - கல். அம்பி - தெப்பம். பெருகு அக்கடல் - வினைத்தொகை, அகரச்சுட்டு இழித்தற்பொருட்டு. சமணர் கல்லிற்பிணித்துத் தன்

கண்விடுக்கும் கொடுந்தொழிற்கு இடமாயினமையான். ஏறியதோ என்னும்சொற்கள் இரண்டினுமுள்ள ஓகாரங்கள் ஐயத்தின்கண் வந்த வினாப்பொருள; அவற்றுள் முந்தியது உயர்வுப் பொருளினும், பிந்தியது இழிவுப் பொருளினும் வந்தன.

உம்பரெல்லாம் தன்கட்சென்று பிழைக்கப் பாற்கடலிற்றோன்றிய நஞ்சினையுண்டு கழுத்துமட்டும் கடவாது நிறீஇ அத்தேவர்களைக் காத்த கருணையாளர் என்பார், 'பெருமிடறு கருகக் கடல்விட மூண்டோன்' என்றார். இதனை,

'உளமாம் வகைநம்மை யுய்யவந் தாண்டுசென் றும்பருய்யக்
களமாம் விடமமிர் தாக்கிய தில்லைத்தொல் லோன்கயிலை
வளமாம் பொதும்பரின் வஞ்சித்து நின்றார்வஞ் சிம்மருங்குல்
இளமான் விழித்ததென் றோவின்றெம் மண்ண லிரங்கியதே.'

என வரும் திருக்கோவையாரானும் உணர்க. கடல் - ஈண்டுத் திருப்பாற்கடல்; அதற்கு நிகரது ஒன்றின்மையால் அடைகொடாது கூறினார்.

கடுத்தலையுடையது கடல் எனக் காரணக்குறி, அவ்வருகக்கடலை, அருட்பெருக்கமும் வாக்கின் முதிர்வுமின்றிக் கடந்தமை அரிதல்லாமல், யானையாலிடறுவித்தல். கல்லிற்பிணித்துக் கடலில் இடுவித்தல் முதலிய இடுக்கண் புரிதலில்லாத இக்கடலை, அவ்வருட்பெருக்கமும் வாக்கின் முதிர்வுங்கொண்டு கடந்தமை அரிதன்றென்பார், 'உனக்கரிது சொல்' என்றார்.

அடியிற் கசிந்து மனமுருக என்னும் தொடரிலுள்ள செய்து செய என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் காரண காரியத்தின்பொருட்டு எச்சத் திரிபுகளாகப் பொருள் கூறப்பட்டன. கசிந்து உருக என்பன முன் பின்னாகப் புணர்ந்த எச்சத்திரிபுகள்.

'விடமுண்டோன் அடியில் கடல் அன்பு பெற்ற சொல் வேந்த' என்றது, சிவபெருமான் திருவடிகளில் ஒப்பிகந்த உழுவலன்புடையார் என்றமையை. அற்றேல், உழுவலன்புடையராயின், சமண சமயம் சாராராகலின் கடலன்பு பின்னர்ப் பெற்றதாதல் வேண்டும். அங்ஙனமாக, இவர்பாலது உழுவலன்பென்பது எங்ஙனம் பிறவெனின், நன்று வினாயினாய்! சமணர முதலியோரைக் களைந்து சைவத்தை நாட்டுவான் தோன்றிய இவ்வாசிரியர், உலக நிலையாமை கண்டு அறங்கள் செய்வாராய் ஒழுகுங்கால், சாதனங்களுள் நீறு சிறந்தாங்குத் தவங்களுட் கொல்லாமை சிறந்ததாகலின், அஃதே சிவகதிக்குரிய நெறியெனத் தேர்ந்து ஆய்ந்த வழியும், இவர் முற்பிறப்பில் வாகீச முனிவராய்க் கயிலையின்கண் உறையும் நாளில் இராவணனுக்கு அருள் செய்த தீவினை வயத்தால் சமண சமயத்தினர் நடிப்பிற்கு மயங்கி, அச்சமயத்துட்புகுந்து, அத்தீவினைப்பயன் நுகருங்காறும் அதிற்சிக்குண்டு கிடந்தனர். அஃகொழியவே, அதனிற்புகுந்து தாம் கற்ற விஞ்சைக

ளெல்லாம் கானல் நீர் போலத் தமக்குச் சிவபெருமானருளால் தோன்றவே, 'சைவத்தின்மேற் சமயம் வேறிலை' எனவும், 'அதில் சார் சிவமாம் தெய்வத்தின்மேல் தெய்வமில்லை!' எனவும் கருதிச் சைவ சமயத்தில் ஈடுபட்டவராதலின், அச்சமண சமயத்து நிலைமை இன்னதென்றுணர்தற்கன்றி உள்ளபடி புகுந்தவரல்லர். ஆதலின், அச்சமயத்திலிருந்த ஞான்றும் உள்ளுணர்வில் சிவபெருமானை வழிபட்டு வந்தாரென்பது,

"ஏற்றா யடிக்கே யிரவும் பகலும்,
பிரியா துவணங் குவனெப் பொழுதும்'—எனவும்,
'நெஞ்சம்முமக் கேயிட மாகவைத்தே
நினையாதொரு போது மிருந்தறியேன்' — எனவும்.
'சலம்பூவொடு தூப மறந்தறியேன்
தமிழோடிசை பாட மறந்தறியேன்
நலந்தீங்கினு முன்னை மறந்தறியே
னுன்னாமமென் னாவின் மறந்தறியேன்'

எனவும், இவரருளிய திருவாக்குகளால் வெளிப்படுதலின் உழுவலன்புடையவரென்க.

அற்றேல், கொடிய குடர் நோயணுகிய வழி இத்தகைய சிவனை மறவாச் சிந்தையிருந்தும் அச்சமண சமய வித்தைகளான் அகற்ற முயன்றதென்னையெனின், அவற்றிற் பழகித் தேர்ச்சியுற்றுச் சித்தி பெற்றமையின் இவ்வித்தையின் இதுவும் அகலுங்கொலென எண்ணி முயன்றாரென்பது, இன்னோரன்ன ஐயப்பாடுகள் எழாமைப்பொருட்டுப் பெரிய புராணத்தில், ஆங்காங்குக் குறிப்பிட்டிருத்தலின் ஆய்ந்துணர்க. விரிக்கிற்பெருகும்.

'கடலன்பு என்புழி, ஒப்பிகந்த அன்புக்கு ஒருபுடை ஒப்புக்கூறினமையின் கடல் ஒப்பலொப்பாய் நின்றது; விலங்கொடு மக்களனையர் என்பது போல, 'கடல் நஞ்சுண்டோனாகிய சிவபெருமானது திருவடிகளில் மனம் உருகிக் கசியக் கடல்போலும் அன்பினைப் பெற்ற நாவரசப்பெருந்தகையே ! சமணக் கடலை நீந்திச் சைவமென்னும் கரையில் இவர்ந்ததோ ? அஃதன்றிக் கல்லைத் தெப்பமாக மிதப்பக்கொண்டு அக்கடலைக் கடந்து கரையேறியதோ? இவற்றுள் யாது உமக்கு அரியது? செப்புவீராக,' என்பதாம்.

## சிவபெருமான் கடல் விடமுண்ட வரலாறு :

தேவர்களும் அசுரர்களும் இடைவிடாது போர் புரிந்து வருகையில் அவ்விரு திறத்தாரும் தமக்கு இறப்பு நேரிடாமலிருக்க அமுதம் உண்ண எண்ணிப் பிரம்மனையடைந்து தமதெண்ணத்தைத் தெரிவிக்க, அவர் தேவர்களுடனும் அசுரர்களுடனும் சென்று திருமாலை வணங்கிப் பாற்கடல் கடைந்து அமுதம் தந்தருளும்படி வேண்ட, திருமால்

கருடனால் மந்தரமலையைக் கொணர்வித்துப் பாற்கடலில் மத்தாக நாட்டி அதற்கு வாசுகியைத் தாம்பாகப் பூட்டி, ஒருபுறம் தேவர்களும் மற்றொரு புறம் அசுரர்களும் நின்று கடையச் செய்தனர். அவ்வாறு கடைகையில் அவ்வாசுகி என்னும் பாம்பு வருத்தம் பொறாமல் நஞ்சைக் கக்கியது. அங்குள்ள எவரையும் கொல்ல எழுந்த அக்கொடிய நஞ்சினை அஞ்சிப் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் சிவபெருமானைச் சரண் புகுந்தனர். சிவபிரானும், அடைக்கலம் புகுந்த அத்தேவரைக் காக்கும்பொருட்டு அந்நஞ்சினையுண்டு தமது கழுத்தினில் நிறுத்தினர் என்பதாம். இதனை,

"ஏற்றுக் கோடியி னெழுமுகிற் கோடியி னிருண்டு
கூற்றுக் கோடியின் மறங்கொடு திசைதொறுங் குலவுங்
காற்றுக் கோடியின் விரைவினால் வடவையங் கடுந்தீ
நூற்றுக் கோடியிற் பரந்ததவ் விடமெலா நொய்தின்.

"முடிவிலா வுனக்கே யன்றோ முன்னுறு பாக மெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டுவ மிதனை வல்லே
யடியரே முய்யு மாற்றா லருந்தினை யருண்மோ வென்னக்
கடிகம ழிதழி வேய்ந்தோன் கலங்கலீ ரினிநீ ரென்றான்.

"என்றனன் விரைவிற் றன்கை யேந்தியவ் விடமுட்கொள்ளச்
சென்றது மிடற்றி லன்ன திறத்தினை யாரு நோக்கி
யின்றெம துயிர்நீ காத்தற் கிங்கிது சான்றா யங்க
ணின்றிட வருடி யென்றே நிமலனைப் போற்ற லுற்றார்."

எனவரும் கந்தபுராணம் ததீசியுத்தரப் படலச் செய்யுள்களான் உணர்க.

## திருநாவுக்கரசு நாயனார் கடல் கடந்தேறிய வரலாறு:

பாடலிபுரத்திலே பல்லவ மன்னன் சமணர்கள் வேண்டுகோளின் படி திருநாவுக்கரசு நாயனாரை ஒரு கல்லோடு சேர்த்துக் கட்டுவித்துக் கடலிலே தள்ளிவிடச் செய்தான். அப்போது நாயனார், 'அடியேனுக்கு யாது நிகழினும் நிகழ்க! அடியேன் சிவபெருமானைத் துதிப்பேன்;' என்று நினைத்து,

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே"

என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாடியருளினார். கட்டிய கயிறோ, அறுந்து போயிற்று. உடனே கடலில் கல்லானது மேற்பக்கத்திலிருக்கத் தெப்பமாய் மிதந்து திருப்பாதிரிப்புலியூரில் வந்து கரை சேர்ந்தது என்பதாம்.

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

உனற்க ரும்புகழ் மேவிய சுந்தர னும்பன் மீதிவரா
நினைப்ப ருங்கயி லாயம டைந்தமை நின்று காண்குறவே
எனக்கு வந்துறு மோமக வென்றழு கின்ற நாளலைபா
றனித்த ருந்துபு மாலையு மிழ்ந்திடு தம்பி ரானலனே. **23**

பதவுரை

**உனற்கு அரும்** - சிந்தித்தற்கரிய,
**புகழ் மேவிய** - புகழ் படைத்த,
**சுந்தரன்** - சுந்தரமூர்த்தி நாயனார்,
**உம்பல் மீது இவரா** - வெள்ளை யானை மேல் எழுந்தருளி,
**நினைப்பு அரும்** - நினைத்தற்கரிய
**கயிலாயம் அடைந்தமை**-திருக்கயிலாயத்தை அடைந்தமையை,
**நின்று காண்குற** - எதிர் நின்று காண்பதற்கு.
**மகவு என்று அழுகின்ற நாள் ஏ** - குழந்தையெனக் கூறுமாறு விளங்கி அழுத அப்பருவத்திலேயே,
**பால் அலை** - பாற்கடலை,
**தனித்து அருந்துபு**-தனித்துப்பருகி,
**மாலை உமிழ்ந்திடு**-அதில் மிதந்து அணுகிய திருமாலை ஆங்கு உமிழ்ந்த,
**தம்பிரான்நலன்**- உபமன்னியரிடத் துண்டான உயர்ந்த சிவனருள்,
**எனக்கு வந்துறுமோ**-அடியேனுக்கு வந்தடையுமோ?

விளக்கவுரை

சுந்தரன் என்பதை அண்மை விளியாக்கி, 'சுந்தரனே! நீ உம்பல்மீது இவர்ந்து கயிலாயமடைந்தமையைக் காணுதற்குத் தம்பிரான் நலன் எனக்கு வந்துறுமோ?' எனப் பொருள் கூறலும் ஒன்று.

பாற்கடலினுதித்த நஞ்சத்தைக் கொணர்ந்து பரமர் கரத்தீந்து தேவர்க்குண்டான இடுக்கண் தீர்த்தமையானும், அப்பரமரைப் பரவைபால் ஒருகாலன்றி இருகால் தூது செலுத்தல், முதலையுண்ட பாலனை வெளிப்படுத்தல் முதலிய செய்கையானும், அத்தகைய பிறப்பிலும், இப்பிறப்பிலும் அளவிறந்த் அற்புதப் புகழுடைமையால், 'உனற்கரும் புகழ்மேவிய சுந்தரன்' என்றார். உன்னற்கு-உனற்கு எனத் தொகுத்தல் பெற்றது; உன்னல்-நினைத்தல். உம்பல் - யானை; ஈண்டு வெள்ளை யானையை உணர்த்திற்று; அதன்மீது இவர்ந்து திருக் கயிலையை அடைந்தமையால். இவரா - இவர்ந்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'நினைப்பருங்கயிலாயம்' என்றது, சிவ நேசர்க்கன்றி ஏனையோர்க்கு மனத்தினாலும் சிந்தித்தற்கு அரிது என்பதை.

### உபமன்னியு முனிவர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலையை அடைந்தமையைத் தரிசித்த வரலாறு :

திருக்கயிலாயமலையின் அடிவாரத்தின்கண்ணே, புலிக்கால் முனிவருடைய புதல்வரும், சிதம்பரத்திலே சிவபெருமானால் வருவித்தருளப்

பட்ட திருப்பாற்கடலை உண்ட மெய்யடியாரும், கிருட்டினரைச் சிவ தீக்கை செய்து தடுத்தாட்கொண்டருளிய சைவ சமயாசாரியருமாகிய உபமன்னியு முனிவர் எண்ணிலாத முனிவர்கள் கூட்டம் சூழ எழுந் தருளியிருந்தார். அப்பொழுது அவ்விடத்தில் அவரெதிரே ஒரு பேரொளி, ஆயிரம் சூரியருடைய ஒளி போலத் தோன்றிற்று. அது கண்ட முனிவர் எல்லோரும் 'இஃது என்ன வியப்பு!' என்றனர். உடனே உபமன்னியு முனிவர் சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து, அவரது திருவருளினாலே, திருக்கயிலாயத்தினின்று நீங்கித் தென்னாட்டிலே தோன்றியருளிய சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளி யிருக்கின்றார் என்பதனை உணர்ந்து, விரைந்தெழுந்து, இரண்டு கைகளும் தலைமீதேறிக் குவிய, ஆனந்த அருவி திருமேனியெங்கும் பெருக, அத்திசையை நோக்கி நடந்தார். அப்பொழுது அங்கிருந்த முனிவர்கள், "முனிவர் பெருமானே! சிவபெருமானையன்றிப் பிறரொரு வரையும் வணங்காவியல்பினராகிய நீர், இங்கே வணங்கிய காரணம் யாது?" என்று வினவ, "முனிவர்களே! கேளுங்கள்; முன்பொரு காலத்தில், சிவபெருமானுக்குப் பூமாலை தொடுத்துச் சாத்துதலும், திருநீற்றுச் செப்புத்தாங்குதலும் ஆகிய திருத்தொண்டு பூண்ட ஆலால சுந்தரர் என்பவர், சிவபெருமானது ஆணையினாலே திருக்கயிலாய மலையினின்றும் நீங்கித் தென்னாட்டிலே தோன்றியருளினர். அவர், உயிர்கள் எல்லாம் உய்யும்பொருட்டுத் தமிழ் மறையாகிய தேவா ரத்தை அருளிச்செய்து, இப்பொழுது தேவர்கள் சூழ வெள்ளை யானை மேற்கொண்டு திருக்கயிலாயத்துக்கு எழுந்தருளி வருகின்றார். அவர் எம்மாலும் வணங்கப்படும் பெருந்தகைமையுடையவர்," என்று சொல்லியருளினார் என்பதாம்.

காண்குற நலன் உறுமோ என இயையும். உறின், எக்காலத்தேனும் அரிது காணப்பெறலாம் என்பது இசையெச்சம். 'காண்குறவே' என்பதிலுள்ள ஏகாரம் பிரித்து நாள் என்பதில் கூட்டப்பட்டது; அசை எனினுமாம்.

வந்துறுமோ என்புழி ஓகாரம் எதிர்மறை. பால் அலை-பாற்கடல். அலை - சினையாகுபெயராயக் கடலையுணர்த்திற்று. 'அலைபாறனித் தருந்துபுமாலையுமிழ்ந்திடு தம்பிரான்' என்ற குறிப்பால் உபமன்னியு முனிவரையுணர்த்திற்று. 'மாலையுமிழ்ந்திடு தம்பிரான்' என்பதற்கு மயக்கத்தை நீக்கிய தம்பிரான்' எனினுமாம். தம்பிரான் - உபகார சீலன். அருந்துபு - அருந்தி; 'செய்பு' என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். 'தனித்து அருந்துபு' என்பது அருந்துதற்கருமை தோன்ற நின்றது. தம்பிரான் அலன் எனப் பதப்பொருள் செய்து உரைப்பாருமுளர்; அது 'நலமலி வாதவூர' என்று கீழ்த் தொடங்கும் அந்தாதித்தொடர்க்கு இயைபின்மையும் மேலும் போதப் பொருட் பொலிவின்மையும் கண்டு தெளிக.

'மகவென் றழுகின்ற நாள்' என்றது உபமன்னியு முனிவர் மகவாயிருந்த காலத்துத் தம் தாயுடனுதித்த வசிட்ட முனிவர் வாழிடத்தே காமதேனுவின் பாலை நுகர்ந்து சுவை கண்டவராய்ப் பின்னர் அன்னை பாலனுகிப் பால் வேண்டியழுத நாளை.

## உபமன்னியு முனிவர் பாற்கடல் உண்ட வரலாறு :

புலிக்கால் முனிவர் தம் தந்தையாரின் கட்டளையின்படி வசிட்ட முனிவரின் உடன் பிறந்தவளை மணம் செய்து உபமன்னியு என்னும் குமாரரைப் பெற, அக்குழந்தையை அம்மானாகிய வசிட்டரும் அவர் மனைவியான அருந்ததியும் எடுத்துக்கொண்டு போய்த் தமது ஆசிரமத்தில் காமதேனுவின் பாலையூட்டி வளர்த்து வருகையில், ஒரு நாள் தந்தை தாயரான புலிக்கால் முனிவரும் அவர் மனைவியாரும் அன்பினாற்சென்று அக்குழந்தையைத் தம்மிருப்பிடத்திற்கு எடுத்துக் கொண்டு வர, தமக்குப் பால் கிடைக்காமையால், மாவை நீரிலே கரைத்து ஊட்ட, அதனைக் குழந்தை உட்கொள்ளாது உமிழ்ந்துவிட்டுக் காமதேனுவின் பாலைக் கருதி விரும்பி அழ, பசுப்பாலூட்டித் தேற்ற வழியில்லாமல், தந்தையாரானவர் அக்குழந்தையைச் சிவபெருமான் திருமுன் கொண்டுபோய் விட, அங்கு அக்குழந்தை பசியாற்றாது அழுது சிவபெருமான் அருளால் பாற்கடலை உண்டு வளர்ந்தது என்பர். இதனை,

> 'பாலனுக் காயன்று பாற்கட லீந்து பணைத்தெழுந்த
> ஆலினிற் கீழிருந் தாரண மோதி யருமுனிக்காய்ச்
> சூலமும் பாசமும் கொண்டு தொடரந்தடர்ந் தோடிவந்த
> காலனைக் காய்ந்த பிரான்கட லூருறை யுத்தமனே.'

என வரும் தேவாரத் திருவிருத்தத்தானும் அறிக.

## *மாணிக்கவாசகர்*

### நேரிசையாசிரியப்பா

**நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ!**
**மனநின் றுருக்கு மதுர வாசக!**
**கலங்குறு புலனெறி விலங்கு வீர!**
**திங்கள் வார்சடைத் தெய்வ நாயக**
**5 னொருகலை யேனு முணரா னஃதான்று**
**கைகளோ முறிபடுங் கைகள் காணிற்**
**கண்களோ வொன்று காலையிற் கானு**
**மாலையி லொன்று வயங்கித் தோன்றும்**
**பழிப்பி னொன்று விழிப்பி னெரியு**

10 மாயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனாற்
புகழ்ச்சி விருப்பன் போலு
மிகழ்ச்சி யறியா வென்பணி வானே. 24

பதவுரை

**நலம் மலி** - வளம் நிரம்பிய,
**வாதவூர் நல் இசை புலவ**-திருவாதவூரில் தோன்றிய நல்ல புகழ் மிக்க புலவரே!
**மனம் நின்று** - நினைக்கும்தோறும் உள்ளத்தில் நின்று,
**உருக்கும்** - அதனை உருக்குகின்ற,
**மதுர வாசக** - இனிய திருவாசகத்தை இசைத்தருளியவரே!
**கலங்குறு** - நிலை தவறுதற்குக் காரணமாகின்ற,
**புலன் நெறி** - ஐம்புல நெறிகளினின்றும்,
**விலங்குறு வீர** - நீங்கிய ஆண்மையையுடையவரே!
**திங்கள் வார்சடை**-ஒற்றைக் கலையாகிய சிறுமதி மிலைந்த நெடுஞ்சடையையுடைய,
**தெய்வ நாயகன்** - தேவர்களுக்குத் தலைவர்,
**ஒரு கலையேனும்** - வேதம் முதலிய கலைகளுள் ஒன்றாயினும்,
**உணரான்**- உணராதவர் (துணியப் படாதவர்),
**அஃதான்று** - அதுவன்றி,
**கைகளோ** - அவர் திருக்கைகளோ எனில்,
**முறிபடும் கைகள்** - முறிபடும் கைகளாம்,
**கண்களோ** - திருக்கண்களோ எனில்,
**காணின்** - தேர்ந்து உணரின்,
**ஒன்று காலையில் காணும்**-ஒருகண் காலையில் தோன்றும்,
**ஒன்று மாலையில் வயங்கித் தோன்றும்** - மற்றொரு கண் மாலையில் விளங்கித் தோன்றும்,
**பழிப்பின் ஒன்று** - பழிப்பினையுடைய பிறிதொரு நெற்றிக் கண்,
**விழிப்பின்** - விழித்த போது,
**எரியும்**-(அப்பார்வையிற்பட்டவை) நீறாகும்;
**ஆயினும்** - இங்ஙனம் இருப்பினும்,
**தன்னை நீ புகழ்ந்து உரைத்த** - தம்மை நீர் புகழ்ந்து சொல்லிய,
**பழுது இல் செய்யுள்** குற்றமில்லாத திருப்பாடல்களை,
**இகழ்ச்சி அறியா** - இகழ்வு சிறிதும் பெறாத,
**என்பு அணிவானே** - எலும்பை ஆபரணமாக அணிபவராகிய அவ்விறைவரே,
**எழுதினன்** - எழுதினார்;
**அதனால்** - அங்ஙனம் எழுதினமையாலே,
**புகழ்ச்சி விருப்பன் போலும்** - அவர் புகழ்ச்சியில் மிகவும் விருப்பமுடையவர் போல்வர்.

விளக்கவுரை

வேத முதலிய எண்ணெண்கலைகளையும் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் நல்லாசிரியர் மாட்டு ஈரெட்டாண்டெல்லையிற்பயின்று; தக்கார்மாட்டுத் தகுபொருளுணர்வான் தருக்கித்தொழுகிய சால்புடையனென்பார், 'நல்லிசைப் புலவ' என்றார். இனி, 'கற்க கசடறக் கற்பவை' என்றபடி, உண்மை நூலாராய்ச்சியின் உவப்புடையராய் முதனூலிரண்டனுள் வேதமானது, விண்ணவர் வாழுலக முதலானவற்றைப் பெறுதற்குத் துணையாவதன்றிச் சிவாகமம் போலச்

சிவானுபூதிச் செல்வராய் முத்தி நெறியடைதற்குத் துணையாகாமை யின், அவ்வேதத்தினும் சிவாகம நூலாராய்ச்சி மிக்குடையார் என்பார், 'நல்லிசைப்புலவ' என்றாரெனினும் அமையும். நன்மை, ஈண்டுக் குற்றமின்மை மேற்று.

**கலங்குறுபுலன்** - உட்பகையாய் நின்று உறுகண் விளைக்கும் ஐம்புலன்கள். கலக்குறு, கலங்குறு என மெலித்தல் பெற்றது; கலங்குறு புலனெறி எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார் எனினுமாம். கலங்குறு, விலங்குறு என்பன ஒரு சொன்னீர்மைய. **'புலன் நெறி விலங்குறு வீர'** என்பது ஐம்புலன்களையும் வென்ற பேராண்மையை விளக்கிற்று. புலனெறி விலங்குதலாவது - அவற்றின் கட் சென்ற மனத்தை மீட்டு அருட்குரவன் பணியினிறுவல்.

**'திங்கள் வார்சடை'** என்புழித் திங்கள், ஒற்றைக் கலைச் சிறு மதியையுணர்த்துற்று. திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன், ஒரு கலையேனும் உணரான் என்னும் தொடர் - திங்களின் ஒரு கலையால் திருமுடி காணப்பட்டாரேனும் சுருதியாகிய கலைகளுள் ஒன்றானும் துணியப்படாதவர் எனவும், தாம் ஒரு கலையேனும் ஆசிரியர் மாட்டு உணர்ந்தறியாதவர் எனவும் பொருள் பயக்கும். கலை - சாத்திரம். உணரான் என்பது தனக்குரிய செய்வினைப் பொருளையே அன்றிச் செயப்பாட்டுப் பொருளை உணர்த்திற்று.

அஃதன்றி எனற்பாலது அஃதான்று எனத் திரிந்தது; செய்யு ளாதலின். இதனை,

> 'அன்றி இன்றியென் வினையெஞ் சிகரம்
> தொடர்பினுள் உகர மாய்வரி னியல்பே'

என்பதனாலும்,

> 'அதுமுன் வருமன் றான்றாந் தூக்கின்.'

என்பதனானுமறிக.

திருக்கரங்கள் மூன்று தொழிற்கிணங்கத் துடியும், அபயமும், அனலமும், கோடலானும், மற்றொன்று ஒருகாற்கும்பிடிற் கதிகூடு மெனக் குஞ்சிதபாதத்தைக் குறித்தலானும் வளைவுற்றமர்வன என்பார், **'கைகளோ முறிபடுங்கைகள்'** என்றார். 'கைகளோ' என்பதில் ஓகாரம் இழிவு சிறப்பின்கண் வந்தது; 'முறிபடுங்கைகள்' என்றதனால். கண்களோ என்புழியும் அஃதே. இழிவின்கண் மிகுதியை விளக்குவதை யறியாதார் ஓகாரங்கள் வினாப்பொருள என்பார்; அப்பொருள் பயவாமையறிக.

முறிபடுங்கைகள் என்பதற்கு 'முறிந்த கைகள்' என மற்றொரு பொருள் தோன்ற நின்றவாறுங்காண்க; முறி - தளிருமாம், எழுது முறி, அஃதோலை எடு.

சூரிய சந்திரராகிய கண்கள் உலகின் தோற்ற நிலைகட்கு ஏதுவாகிய பகலிரவுகளைத் தோற்றுவித்தலான், 'ஒன்று காலையிற் காணும்', 'ஒன்று மாலையிற்றோன்றும்' எனவும், பிறிதொன்று அவ்வுலகிறுதிக்கு ஏதுவாதலான், 'ஒன்று விழிப்பின் எரியும்,' எனவும் கூறினார். இனி, பழிப்பின் - ஒருவன் அவமதிப்பின். ஒன்று - பிறிதொரு நெற்றிக்கண், விழிப்பின், விழித்த வழி. எரியும் - அப்பார்வையிற்பட்டவன் நீறாகத் தீப்பொறி சிந்தி, எரியும்; அதற்குச் சான்று மன்மதன் எரிந்தமை. இதனை,

"எறிதரு கணிச்சிச் செங்கை ஈசன்மே லிலக்க நாடுங்
குறியினர் போல நின்ற கொடுந்தொழில் மாரன் றுஞ்ச
நெறியினர்க் கச்ச முண்டோ நினைத்தது முடிப்ப னென்னா
நறுமலர் வாளி யைந்து நாதன் மேற் செல்ல விட்டான்.

"விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மீது
பட்டலும் சிறிதே வேளைப் பார்த்தனன் பார்த்த லோடும்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கயிலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே."

என வரும் கந்தபுராணம் காமதகனப் படலச் செய்யுள்களாலுணர்க.

பழித்தல், ஈண்டு இகழ்தல் மேற்று. இனி, பழித்தால் விழிப்பின் எரியும் எனக் கூறலும் ஒன்று. இதனை, திருவாலவாயுடையார் புராணம் கிழியறுத்த படலத்து நக்கீர சரிதத்தாலுணர்க. 'பழிப்பினொன்று' என்பதற்கு, பழிப்பினையுடைய பிறிதொருகண் எனப் பொருள் உரைக்கலாயிற்று; அது நெற்றிக்கண்; தீக்கண்ணாதலால் அங்ஙனம் உரைக்கப்பட்டது.

'கண்களோவொன்று காலையிற்காணும்; மாலையிலொன்று வயங்கித்தோன்றும்' என்பதற்குக் 'கண்கள் ஒரு காலைக்கொரு காலைக் குருடாவன' என மற்றுமொரு பொருள் தோன்ற நின்றது.

தன்னை நீ புகழ்ந்துரைத்த செய்யுள் - கோவை திருவாசகம். அவற்றைச் சிவபெருமான் எழுதினமையை நான்காவது செய்யுளுரையிற்கூறிய வரலாற்றால் உணர்க. தன்னைப் புகழ்ந்துரைத்த செய்யுளை எழுதுதற்குரிய கருவிகள் தன்மாட்டுப் பொருந்தாவிடினும் புகழ்ச்சி விரும்பி எழுதினான் என்பார். 'புகழ்ச்சி விருப்பன் போலும்' என்றார். போலும் - செய்யுமென்னும் வாய்பாட்டு வினைமுற்று. போல்வன் என்பது பொருள். இனி, "ஒப்பில் போலியும் அப்பொருட்டாகும்" என்பதனால் கட்டுரைக்கண் வந்த இடைச்சொல் எனினுமாம்.

உயிர்களெல்லாம் இவரே முதற்கடவுளென்று அறிந்து உய்வான். ஊழிக் காலத்து அச்சுதனாதியரைமழித்து, அவரென்பை அணிந்து அணுத்துணையும் இகழ்வெய்திலராய் விளங்கினாரென்பார், 'இகழ்ச்சி

யறியா வென்பணிவானே' என்றார். 'இகழ்ச்சியறியா என்பு' என்றது எவரும் புகழப்படுதலினால். என்பணிவானே என்புழி ஏகாரம் பிரிநிலை; மற்றைத் தேவர்களினின்றும் பிரித்தலான், என்பணிவான் என்பது அவன் எனச் சுட்டாய் நின்றது.

இங்ஙனமிருந்தும் தலைமை நாடாதெய்திப் பழுதில் செய்யுளை உலகினர் ஓதியுணர்ந்துய்வான் வரைந்தனர்; இவ்வுட்கிடை உணராரர்க்கு இச்செயலாற் புகழ்ச்சி விருப்பர் போல்வர்; அவர் இகழ்ச்சியறியா என்பணிவாரே என்பதனோடு வஞ்சப் புகழ்ச்சியுமாய் இச்செய்யுள் நிற்பதுணர்க. என்பணிவான் என்றது, சிவபெருமானை.

### சிவபெருமான் என்பணிந்த வரலாறு:

யாவும் அழிவுறும் ஊழிதோறும் ஒடுங்குகின்ற பிரமரின் தலைகளையும் திருமால்களின் எலும்புகளையும் சிவபெருமான் மாலையாகத் தொடுத்து எப்பொழுதும் அழியாமல் எஞ்சி நின்ற பொருள் தாம் ஒருவரே என்று, அப்பிரமனாதியோர் அறிந்து வழிபட்டு நற்கதியடைதற்பொருட்டு ஆபரணமாக அணிகின்றனர் என்பதாம். இதனை,

"பரம னிவ்வகை யடுந்தொறு மடுந்தொறும் பலவாம்
பிரம னாதியோ ரென்பினைத் தரிக்குமப் பெரியோர்
சிரமெ லாந்தொடுத் தணியலா லணிந்திடுஞ் சிகைதன்
னுரமு லாவுமுந் நூலென வேயணிந் துறையும்.

"ஆத லாற்றனை வியப்பதற் கன்றவை யணித
லீத லாதொரு திறமுள தியாவரு மெவர்க்கு
நாத னேயிவ னென்றுதன் பாங்கரே நண்ணித்
தீதெ லாமொரீஇ முத்திபெற் றுய்ந்திடுஞ் செயலே."

என வரும் கந்தபுராணம், ததீசியுத்தரப்படலச் செய்யுள்களானுணர்க.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

வானும் புகழ்புகலி மன்னன் றொடர்பொன்று
தேனுந் திதழியோன் சீரேடு—தானுங்
கரியாய் மொழியும் கரியாய் விடாம
லெரியா ரழல்வீழ்ந் தெழுந்து. 25

### பதவுரை

**வானும் புகழ்** - தேவரும் துதிக்கின்ற,
**புகலி மன்னன்** - சீர்காழியில் தோன்றிய திருஞானசம்பந்தர் அருளிய,
**தொடர்பு** - திருப்பதிகம்,
**ஒன்று ஏடு தானும்** - எழுதிய திருவேடுதானும்,
**எரி ஆர்** - எரிதல் வாய்ந்த,
**அழல் வீழ்ந்து** - தீயில் விழுந்து,
**கரி ஆய் விடாமல்** - கரியாகி நீறு படாமல்,
**எழுந்து** - முன்னையினும் விளக்கமடைந்தெழுந்து,
**தேன் உந்து இதழியோன் சீர்** - தேனைச்சொரிகின்ற கொன்றை மாலையணிந்த பரமருடைய பரத்துவ நிலையை,
**கரி ஆய் மொழியும்** - தானே சான்றாக நின்று சாற்றும்.

### விளக்கவுரை

'தொடர்பு ஒன்று ஏடுதானும் அழல் வீழ்ந்த கரியாய்விடாமல் எழுந்து கரியாய் இதழியோன் சீர்மொழியும்' எனக் கூட்டுக திருமால் முதலிய பெருந்தேவர்களும் சிவபெருமான் உணர்த்தியவாறு இத் திருஞானசம்பந்தப் பெருமானை வழிபட்டு உய்ந்தார் என்பார், 'வானும் புகழ் புகலி மன்னன்' என்றார். இதனை,

"இன்ன வாறு நிகழ்ந்ததன்மே லெழிற்சீர் காழிப் பதிநாதன்
அன்ன வூர்தி புள்ளூர்தி யானை யூர்தி யாதியரைத்
துன்ன லோடு மவரெய்தி யுலகே மீன்ற சிற்றுதரக்
கன்னி பாகத் திருந்தானைக் கசிந்து பணிந்து முன்னின்றார்.

"செம்மைக் கருணைக் கடலனையான்
திருமுன் னின்றோர் தமைநோக்கி
எம்மைத் தலங்க டொறும்பதிகத்
தேத்து ஞானக் கவுணியனை
அம்மைப் பொலஞ்செய் விம்பத்தி
லாவா கனஞ்செய் தெந்நாளும்
மும்மைப் பயன்பெற் றுலகுய்ய
முதுபூ சனைநித் தியமியற்றி

"நிகழ்சித் திரைபங் குனிமாத நிறையா திரையும் வைகாசிப்
பகர்மூ லத்து மாவணியைப் பசியா மாதச் சதயத்தும்
மகர மதியிற் கதிர்மதிய மருவு நாளு மிதுனமதி
திகழ வருரோ கணியுமென்றேழ் தினத்து நைமித் தியமியற்றி

"புரையில் கேள்வி யிமையோர்கள்
புகல்பங் குனியிற் சதயத்தின்
நிரைசெய் மணிப்பூங் கொடியேற்றி
நெடுமான் றலைநா டே நடத்தித்

திரைசெய் தீர்த்த மாதிரைநா
டிளைத்தா டுதிரென் றருள்செய்ய
விரைவி லமர ராண்டுதொறு
மகிழ்ந்திவ் வாறு புரிந்தனரால்''

என வரும் சீர்காழித் தலபுராணம், திருஞானசம்பந்தப் பிள்ளை யார் திருவவதாரச் செய்யுள்களான் உணர்க. இனி, 'வானும் புகழ்' என்பதனைப் புகலிக்கு அடையாக்கினும் அமையும்; சூரபன்மனால் தோல்வியுற்ற இந்திரன் முதலிய தேவர்கள் 'பிரமபுரமன்றி நமக்கு வேறு புகலில்லை' என்று கருதிப் புகல் அடைந்தமையால், 'வானும்' என்புழி உம்மை உயர்வு சிறப்பு.

தொடர்பு - செய்யுள். அதற்கு எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பவற்றின் தொடர்புடைமையாற் போந்த பெயர். இது, ஈண்டு "போக மார்ந்த பூண் முலையாள்'' என்னும் திருநள்ளாற்றுப் பதிகத்தின்மேற்று.

ஒன்று ஏடு - வினைத்தொகை; அன்றி, தொடர்பு ஒன்றையுடைய ஏடு எனப் பொருள் கூறலும் ஒன்று; அதற்கு இரண்டனுருபும் பயனும் உடன்றொக்க தொகை என்க.

'தேனுந்திதழியோன்' என்பது பிரணவப் பொருளாகிய தான், அப்பிரணவ வடிவாகிய கொன்றையை உரிமையாகப் புனைந்தமையை விளக்குகின்றது. தேனுந்திதழியோன் - சிவன். இதழி' ஆகுபெய ராய்க் கொன்றை மாலையை உணர்த்திற்று. சீர் - பரத்துவம். 'ஏடுதானும்' என்பதில் தான் கட்டுரைக்கண் வந்த அசை; உம்மை இழிவு சிறப்பு.

இழிந்த ஏடுதானும் திருப்பதிகம் எழுதப்பெற்றமையின் தெய்விக முடைமையான், அமணர்கள் எண்ணாயிரவரும் தம்பனம் செய்து கொண்டு தீயில் இட்ட ஏடுகளெல்லாம் கருகிச் சாம்பராகவும் தான் கருகிச் சாம்பராகாது சிவபெருமானது பரத்துவ நிலையைச் சான்றா காமலே சான்றாயுரைத்ததென்பார், 'ஏடுதானும் கரியாய் விடாமல் எழுந்து கரியாய் மொழியும்' என்றார். கரி - சாட்சி. கரியாய் விடாமல் என்பது இரட்டுற மொழிதலாக நின்றது; சான்றாகுதல் நீங்காமல், கரிந்து போகாமல் என இருபொருள் பயத்தலான். ஆய்விடல் - ஒரு சொன்னீர்மைத்து.

'எரியாரழல்' என்றது, அமணர்கள் எண்ணாயிரவரும் தாம் ஏடிடுங்கால், தம்பனம் செய்துகொள்ளும் சிந்தனையாற் சால மூட்டின தீயை. எரி - முதனிலைத் தொழிற்பெயர். அச்சமணர்கள் தம்பனம் செய்துகொண்டு அதிற்றனித்தனியிட்ட ஏடுகளெல்லாம் கருகிச் சாம்பராகவும், தான் சிவபெருமானையே பொருளாகவுடைமையின்,

முன்னையினும் விளக்கமடைந்து விளங்கிற்று என்பார், 'வீழ்ந்தெழுந்து' என்றார். 'எழுந்து' என்பதற்குப் பசுமையுற்று இனிது விளங்கி எனினும் அமையும். இதனை,

"இட்ட வேட்டினி லெய்திய செந்தமிழ்ப் பதிக
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்
தட்ட மூர்த்தியும் பொருளென வுடைமையா லமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே."

என்பதனாலறிக.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருப்பதிகம் எழுதிய திருவேடு தீயில் விழுந்து கரியாகிவிடாமல் முன்னையினும் பசுமை யுற்று விளங்கிச் சிவபெருமானது பரத்துவ நிலையைத் தானே சாட்சி யாய் நின்று சாற்றும் என்பதாம். இச்செய்யுள் கொண்டு கூட்டுப் பொருள் கோள்.

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் எரியில் ஏடிட்ட வரலாறு :

திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் மதுரைத் திருப்பதியில் எழுந் தருளி, பாண்டியன் கோயிலுட்சென்று, அவன் முடியின் பக்கத்தி லிருக்கும் மணியணியிருக்கையிலிருந்து, அப்பாண்டியனுக்குண்டான வெப்பு நோயைத் தவிரத்து ஆங்கிருந்த போது, சமணர்கள் பிள்ளை யாரை வாதுக்கழைக்க, அப்பொழுது பாண்டியன், "என்னுடைய வெப்பு நோயை நீங்கள் ஒழித்திலீர்கள் ; உங்களுக்கு என்ன வாது ?" என்று சொல்ல, சமணர்கள் அரசர் உங்களுக்கு என்னவாது என்ற தையே வினாவாகக் கொண்டு, "நாங்கள் இரு பக்கத்தேமும் எங்கள் எங்கள் சமயக் கருத்தை ஏட்டிலே தீட்டி நெருப்பிலிடக் கடவோம். வேவப் பெறாமையே வெற்றி," என்றார்கள். அப்போது அரசர் பேசத் தொடங்குமுன், பிள்ளையார், "நீங்கள் சொல்லியது நன்று ; அரச ரெதிரே அப்படியே செய்வோம் ; வாருங்கள்," என்று சொல்லி யருளினார். பிள்ளையாருடைய ஆணையினாலே பாண்டியன், அவை முன் தீ அமைக்கும்படி ஏவலாளர்களை ஏவ, அவர்களும் அவ்வாறே அமைத்தார்கள். பிள்ளையார் அண்மையில் எழுந்தருளி வந்து, 'பரமசிவனே மெய்ப்பொருள்' என்று தாம் பாடியருளிய தமிழ்மறைத் திருமுறையைத் துதித்து, 'நம்முடைய சிவபெருமானே பரம்பொருள்' என்று சொல்லி வணங்கி, திருக்கரத்தினால் எடுத்து, தலையின்மேற் கொண்டு, திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து, அத்திருமுறையைத் தம்து திருக்கரத்தினால் மறிக்க, திருநள்ளாற்றின் மேலதாகிய,

"போகமார்த்த பூண்முலையா டன்னொடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே."

என்னும் திருப்பதிகம் வந்து நேர்ந்தது. பிள்ளையார் அத்திருப்பதிகத்தையே விரும்பி, திருநள்ளாறரை வணங்கி, அது எழுதப்பட்ட திருவேட்டைக் கழற்றித் திருக்கரத்திலே கொண்டு, பரமசிவனே மெய்ப்பொருள் என்பதை யாவருக்கும் உணர்த்தும்பொருட்டு, "இவை தீயிலிடப்படுமாயிற்பழுதில்லை; இது உறுதி," என்னும் கருத்தையுடைய,

"தளிரிள வளரொளி தனதெழி றருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வன முலை யிணையவை குலவலின்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தந் நாமமே
மிளிரிள வளரெரி யிடினிவை பழுதிலை மெய்ம்மையே."

என்னும் திருப்பதிகத்தைப் பாடி, அங்குள்ளவர்கள் எல்லாருங்காண, சமணர்களுடைய சிந்தை வேவ, தீயினில் அவ்வேட்டையிட்டருளினர். இட்டவேட்டில் எழுதப்பட்ட திருப்பதிகம், பரஞானம் அபரஞானம் என்கின்ற இரு தனங்களையுடைய உமாதேவிபாகரும், அட்டமூர்த்தியுமாகிய பரமசிவனையே பொருளென உடைமையால், சுடர்விட்டெரிகின்ற நெருப்பிலே பச்சையாய் விளங்கிற்று என்பதாம்.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

**துடைவாழை மேன்மட வாரல்குற் பாம்பு தொடமயங்கி
நடைவாய் பிணமெனப் பட்டார் பெறுகிலர் நச்சுக்குலை
யுடைவாழை மேலுர கந்தீண்ட மாய்ந்த வொருவனுயிர்
அடைவா னருள்புரி யுந்திரு நாவுக் கரசினையே.** 26

பதவுரை

**மடவார்** - பெண்களது,
**துடை வாழை மேல்** - தொடையாகிய வாழைமீதுள்ள,
**அல்குல் பாம்பு** - அல்குலாகிய பாம்பு,
**தொட** - தீண்ட,
**மயங்கி** - நிறையழிந்து,
**நடை வாய்** - நடை வாய்ந்த,
**பிணம் எனப்பட்டார்** - பிணமென்று சொல்லப்பட்டவரெல்லாம்,
**குலை உடை** - குலையையுடைய,
**வாழைமேல்** - வாழையில் தங்கிய,
**நச்சு உரகம்** - நஞ்சு பொருந்திய பாம்பு,
**தீண்ட மாய்ந்த** - தீண்ட இறந்த,
**ஒருவன்** - மூத்த திருநாவுக்கரசு,
**உயிர் அடைவான்** - முன் போல உயிர் அடையும்படி,
**அருள் புரியும்** - திருவருள் புரிந்த,
**திருநாவுக்கரசினை** - திருநாவுக்கரசு நாயனாரை,
**பெறுகிலர்** - முன் வழிபடுதல் பெறாதாரே.

### விளக்கவுரை

குலைவாழையிலுள்ள உரகம் தீண்டினால் மயங்குவது இயல்பு; அங்ஙனமன்றி இவ்வல்குற்பாம்பு தொடவே மயங்கும் என்பார், 'துடைவாழை மேல் மடவாரல்குற்பாம்பு தொட மயங்கி' என்றார். தொடை என்பது துடை என மருவிற்று. துடை வாழை - உருவகம். 'அல்குற்பாம்பு' என்பதும் அது. மங்கையர் மையலின் மூழ்கி மயங்குபவர், உயிர் எய்துதற்குரிய பயன் எய்தாமையின் பிணத்தோடொப்பரேனும், பிறர்க்குப் பயன்பாடின்றி, உண்டு உடுத்து உழலாநிற்றலின், அதனின் வேற்றுமையுடையரென்பார், 'நடைவாய் பிணமெனப்பட்டார்' என்றார். நடைவாய் பிணம் - இல்பொருள் உவமம். வாய் பிணம் - வினைத்தொகை. நடைவாய் பிணம் என்றது மக்கட்குரிய நல்லறிவின்மையைக் குறித்தபடி. இது இழித்தற்கண் வந்தது.

> 'உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
> மரமக்க ளாதலே வேறு.'

என்பதில் 'மக்களாதலே வேறு' என்றாற்போல.

பெறுகிலர் - எதிர்மறை வினைமுற்று. இதில் தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. வழிபடுதல் பெறுகிலர் என்புழி வழிபடுதல் சொல்லெச்சம்; 'பெற்றாற் பெறிற்பெறுவர்' என்னுந் திருக்குறளிற் போல. நஞ்சு - நச்சு என வலித்தல் பெற்றது. நச்சு உரகமென்க. நச்சு என்பதை வினைத்தொகையாக்கி நச்சுகின்ற குலை என அடையாக்கினும் அமையும்; வாழைக்குமாம். நச்சுதல் - விரும்புதல் நச்சுகுலை - மிக இளங்காய்களையுடைய குலை எனலும் ஒன்று; அப்பொருட்கு விதி, விகாரத் தியல்பு.

'மாய்ந்த ஒருவன்' என்றது அப்பூதி நாயனாரின் மூத்த குமாரனாகிய மூத்த திருநாவுக்கரசை. பிறிதினியைபு நீக்குதலாகிய விசேடணந் தந்து நச்சுரகம் என்றார்; ஈண்டு உருவகிக்கப்படும் உரகம் நச்சிலது என்பதற்கு; அஃது - அல்குற்பாம்பு. எனவே, அவ்வரவம் நச்சுடையதேனும், அது தீண்ட மடிந்த மகன், திருநாவுக்கரசினை வழிபடுதல் பெற்றான். இவ்வல்குற்பாம்பு நச்சிலதேனும் இது தீண்டிய வழி மடியாது மயங்கியுழல்வோர் பெறுகிலர். ஆகலின், பயனை இழப்பித்தலில் அதனினும் கொடியதாகிய இத்தகைய மயலைக் கடத்தற்கும் திருநாவுக்கரசர் பெருமானின் தியானமே மருந்து என்பதும் கொள்ளக் கிடந்தது.

பட்டார், பெறார் என்னலும் ஒன்று. அதற்குப் பொருள் 'பிணமெனப்பட்டவர் திருநாவுக்கரசினைப் பெறாதவரே ஆவர்' என்பது. உரகந்தீண்டி ஒருவன் மாய்ந்த வரலாற்றை 6 ஆம் செய்யுளிற்காண்க.

திருநாவுக்கரசு நாயனாரை வழிபடுவோர் மாநிலத்து உதித்து உழலார் என்பதனை, 'திருநாவுக்கரசரடியவர் நாடற்கதிநிதி' என்பதனாலும், அம்மயலைக் கடத்தற்கு மருந்தாதலை 'குழிந்து சுழிபெறு நாபியின் கொண்மயிர்' என்பதனாலும் அறிக. (திருநாவுக்கரசுதேவர் - திரு ஏகாதச மாலை-2, க.)

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

அரசன் பரிமேல் வரநெடுநல்
யானை யெருத்தத் தமர்ந்துபோய்
வரதன் கயிலை மலையடைந்த
மணியே! மணிநீ ரிடுப்சுமபொன்
திரைசங் கெறியும் குளத்துவரச்
செங்கற் செம்பொ னாப்பாடும்
பரிசின் றெனக்குன் செம்பவளத்
திருவாய் மலர்ந்து பகர்வாயே. 27

பதவுரை

**அரசன்** - (உயிர்த்துணைவராகிய) சேரமான் பெருமாள் நாயனார்,
**பரிமேல் வர** - குதிரைமேலேறி உடன் வர,
**நெடுநல் யானை எருத்தத்து** - நெடிய நல்ல வெள்ளை யானையின் பிடரியில்,
**அமர்ந்து போய்** - தங்கிச் சென்று,
**வரதன்** - சிவபெருமானது,
**கயிலை மலையடைந்த** - திருக்கயிலாய மலையையடைந்த,
**மணியே** - மாணிக்கம் போல்பவரே!
**மணி நீர்** - (முதுகுன்றத்திலே) மணிமுத்த நதியில்,
**இடு பசு பொன்** - இடப்பட்ட பன்னீராயிரம் பசும் பொன்னும்,
**செம்பொன் ஆ** - செம்பொன்னாகவும்,
**திரை** - அலைகள்,
**சங்கெறியும்** - சங்குகளையொதுக்குகின்ற,
**குளத்துவர** - (திருவாரூர்க்) குளத்தில் அணுகவும்,
**செங்கல்** - (திருப்புகலூரில் திருமுடி வைத்துத் துயிலப்பெற்ற) செங்கற்கள் பலவும்,
**பாடும் பரிசு** - பாடுந்திறத்தை,
**உன் செம்பவளம் திருவாய் மலர்ந்து** - உமது செவ்விய பவளம் போலும் திருவாயைத் திறந்து,
**இன்று எனக்குப் பகர்வாய்** - இன்று சிறியேனுக்குச் செப்புவீராக.

விளக்கவுரை

ஆளுடைய நம்பிகள் தம் தோழராய சேரமான் பெருமாள் நாயனாரை நினைத்துக்கொண்டு கயிலைக்குச் செல்லுகையில், அதனையுணர்ந்த நாயனார், பரிமேலேறித் தாமும் உடன் சென்றார் என்பார், **'அரசன் பரிமேலேறி வர'** என்றார். அரசன் என்றது சேரமான் பெரு

மான் நாயனாரை. பரி - குதிரை; பரித்தலையுடையது எனக் காரணக் குறி.

வர - 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் உடனிகழ்ச்சிப் பொருளது; காரண காரியமின்றி வந்தமையால்.

'நெடுநல்யானை' என்றது வெள்ளையானையை; அதற்கு நெடுமை யாவது - ஏழு முழமுயர்ந்தும், ஒன்பது முழம் நீண்டும், பத்து முழச் சுற்றுடையதாயும், முற்பாகமுயர்ந்தும், பிற்பாகம் தாழ்ந்துமிருத்த லாம். 'நல்' என்றது உத்தம இலக்கணத்தை உத்தம இலக்கண மாவது - நான்கு கால்களும் கோசமும் துதிக்கையும் வாலுமாகிய ஏழுறுப்பும் நிலத்திலே தோய்தலும், காலில் வெண்மையான நகமும்; வால், கால், துதிக்கை, உடம்பு, கொம்பு என்னுமிவற்றால் கொல்ல வல்லதும், தறுகண்மையும், செம்புள்ளி வாய்ந்த மத்தகமும், சுளகு போன்ற செவியும், மும்மதமும் உடைத்தாயிருத்தலாம். 'எருத்தத்து' என்புழி அத்துச் சாரியை. எருத்தம் - பிடரி.

வரதன் - வரத்தைக் கொடுப்பவன்; சிவன். முறை வேண்டுவாரும் குறை வேண்டுவாருமாகிய திருமால் முதலியோர்க்கும், சனகன் முதலிய முனிவர்க்கும் வேண்டும் வரங்களும் ஞானோபதேசமும் அருளி, விநாயகக் கடவுள் முதலியோர் புடைசூழ, அம்பிகை பாகராய்ச் சிவ பெருமான் திருக்கயிலையில் திருவோலக்கங்கொண்டு காட்சிக்கெளிய ராய் வீற்றிருக்கின்றனர் என்பது தோன்ற 'வரதன்' என்றார். வரத னாதலை,

> "எழுதரும் பனுவ லாகம மேனைக்
> கலைகளு மிருடிக்ண் முதலா
> முழுவலன் புடையார்க் கருளவும் திருமா
> லூற்றுதேன் தாமரைக் கிழவன்
> முழுதுடல் விழிக்கும் கடவுளா தியர்க்கும்
> முன்னிய வரங்கொடுத் திடவும்
> செழுமணிக் களத்துத் தெய்வதக் குருசி
> றேவியோ டாங்கிருந் ததுவே."

என வரும் தணிகைப்புராணம் அகத்தியனருள் பெறுபடலச் செய்யுளா லுணர்க.

மலவாதனையற்றாரும் பூமியில் மானிடவுருக்கொண்டு சில பகல் வாழ்வாரேல், அவ்வரதனை வந்து சேருதலின், அவ்வுருவை ஞானத் தீயாற்றீய்த்து தூயவுருப் பெற்றுச் சேறல் மரபாக. இவ்வாளுடைய நம்பிகள், தம்முருவம் இயற்கையிலேயே தூய உருவாதல் பற்றி, அவ் வுருவோடு திருக்கயிலையடைந்தாராதலின் மாசிலாமணியே என்பார்,

மாசறுதல் முதலிய அடை கொடாது 'மணியே' என்றார். மணியே என்றது சுந்தரமூர்த்தி நாயனாரை; அஃது உவமையாகுபெயர்; விளிப்பெயருமாம். இவர் மானுட உருவோடு திருக்கயிலையையடைந் தமையை, "ஞான வவ்வாரூ ரரசரை யல்லது நாமறியோம்" என வரும் திருத்தொண்டர் திருவந்தாதியாலுணர்க.

சேய்மையிலுள்ளதை அண்மையிலழைத்தலாகிய ஈர்ப்புத் தன்மையும், இவர்பால் அருள் விளையாட்டாக நிகழ்ந்ததென்பார், 'மணிநீரிற் பசும்பொன் குளத்து வர' என்றார். மணிநீர் - மணி முத்த நதி. பசும்பொன் என்பதற்குப் பன்னீராயிரம் பசும்பொன் எனப் பொருள் கூறப்பட்டது; புராணக் கூற்று நோக்கி. இதனை,

"பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயி ரம்பொன்
னனியருள் கொடுக்கு மாற்றா னல்கிட வுடைய நம்பி
தனிவரு மகிழ்ச்சி பொங்கத் தாழ்ந்தெழுந் தருகு சென்று
கனிவிட மிடற்றி னார்முன் பின்னொன் றுகழற லுற்றார்.

"அருளுமிக் கனக மெல்லா மடியனேற் காரூ ருள்ளோர்
மருளுற வியப்ப வங்கே வரப்பெற வேண்டு மென்னத்
தெருளுற வெழுந்த வாக்காற் செழுமணி முத்தாற் றிட்டிப்
பொருளினை முழுது மாரூர்க் குளத்திற்போய்க் கொள்க
[வென்றார்."

என வரும் பெரிய புராணச் செய்யுள்களாலுணர்க.

இரும்பு முதலிய உலோகங்களையேயன்றிச் செங்கல்லைப் பொன்னாக்கல், எத்தகைய வசதிகளுக்கும் இயலாததும் இவர்மாட்டு நிகழ்ந்த தென்பார், 'செங்கற்செம்பொனா' என்றார். செங்கல் செம்பொன்னா கியது திருப்புகலூரில், 'செம்பொன்னா' என்புழி ஆக என்பது ஈறு தொகுத்தல்.

ஆற்றிலிட்டுக் குளத்திலெடுத்தலும், செங்கற்செம்பொன்னாதலு மாகிய இவை முயலுதற்றொழிலின்றிப் பாடுமளவானே முடிந்தன என்பார், 'பாடும்' என்றார். பாடும் பரிசு - பாடும் திறம். பரிசு - அருட்டன்மையுமாம்.

'செம்மொழி பயிலும் நும் திருவாக்கினன்றிப் பிறர்பாற் கேட்டறி தலில் அன்பிலேன்' என்பார், 'உன் செம்பவளத் திருவாய்' என்றார். செம்மையாகிய பவளம் போன்ற திருவாய்; முன்னது பண்புத் தொகையும், பின்னது உவமைத்தொகையுமாம்.

ஆற்றி[illegible] பசும்பொன் குளத்து வரவும் செங்கற்செம்பொனாகவும் பரிசை அறிந்து வைத்தலின்றி இயற்றுதலில் ஆவலுடையேனல்லே னென்பார், 'பரிசு பகர்வாய்' என்றார். எனவே, இவர் எல்லாம் வல்ல சித்தரியல்பும் உடையரெனக் குறிப்பித்தவாறு,

ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்திலெடுத்ததை,

'பொன்செய்த மேனியினீர் புலித்தோலை யரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலும் மெரித்தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவ டன்முகப்பே
என்செய்த வாறடிகே ளடியேனிட்ட ளங்கெடவே.'

என்னும் சுந்தரர் தேவாரத்தாலறியலாம்.

## சுந்தரமூர்த்தி நாயனார் கயிலையடைந்த வரலாறு:

சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் திரு மாளிகையில் எழுந்தருளியிருக்கும் போது, ஒரு நாள் திருவஞ்சைக் களத்திற்குச் சென்று அங்குள்ள சிவன் கோயிலை வலம் வந்து உள்ளே புகுந்து இறைவன் திருமுன் விழுந்து வணங்கி எழுந்து நின்று, அனலிற் பட்ட மெழுகு போல மனங்கசிந்துருக, இரண்டு கண்களினின்றும் ஆனந்த அருவி சொரிய, உடம்பு மயிர் சிலிர்க்க இருகைகளும் தலைமேற் குவிய, 'அடியேனை இவ்வுலக வாழ்க்கையினின்றும் நீக்கித் தேவரீ ருடைய திருவடியிலே சேர்த்தருளல் வேண்டும்' என்னும் குறிப்போடு, 'தலைக்குத் தலைமாலை' என்னும் திருப்பதிகம் பாடினார். உடனே கயிலை மலையில் சிவபெருமான், திருமால் பிரமன் இந்திரன் முதலிய தேவர்களை நோக்கி, 'நீங்கள் போய் நம்முடைய தோழனாகிய சுந்தரனை வெள்ளை யானையின்மீது ஏற்றிக்கொண்டு வாருங்கள்' என்று கட்டளை யிட்டனர். அவ்வாறே தேவர்கள் சென்று அவரை வலஞ்செய்து வெள்ளை யானையின்மீதேற்ற, அவர் அவ்வியானையின்மேலேறித் தம்முடைய தோழராகிய சேரமான் பெருமாள் நாயனாரை நினைத்துக் கொண்டு ஐவகை இசைக்கருவிகள் முழங்கவும் தேவர்கள் எல்லோரும் துதித்துப் பூமழை பொழியவும் திருக்கயிலைக்குச் சென்றார். அது பொழுது சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரமூர்த்தி நாயனாருடைய செயலை அறிந்து, அந்தக் கணமே அருகில் நின்ற ஒரு குதிரையில் ஏறிக் கொண்டு திருவஞ்சைக்களத்துக்குப்போய், வெள்ளை யானையில் மேற் கொண்டு விண்ணிற்செல்லும் சுந்தரமூர்த்தி நாயனாரைக் கண்டு, தாம் ஏறிய குதிரையின் செவியிலே திருவைந்தெழுத்தை ஓதினார். உடனே அந்தக் குதிரையானது விண்ணிலே பாய்ந்து சுந்தரமூர்த்தி நாயனா ருடைய வெள்ளை யானையையடைந்து, அதனை வலஞ்செய்து, அதற்கு முன்னாகச் சென்றது என்பதாம்.

## ஆற்றிலிட்ட பொன்னைக் குளத்தில் எடுத்த வரலாறு:

சுந்தரமூர்த்தி நாயனார், திருவாரூரில் பரவையாரோடு கூடியிருக் கும் நாளில், ஒரு நாள் பரவையாரை நோக்கி, 'எனக்குத் திருமுது குன்றர் தந்தருளிய பொன்னை மணிமுத்த நதியிலே புகவிட்டு வந்தேன்; இப்போது இத்தலத்திலே இருக்கின்ற திருக்கோயிலுக்கு மேற்றிசையி

லுள்ள குளத்திலே அதை எடுத்துக்கொண்டு வருவோம் வா!'' என்று சொல்லி, பரவையாருடன் திருக்கோயிலை வலம் வந்து மேற்றிசையி லிருக்கின்ற திருக்குளத்தையடைந்து, அதன் வடகீழ்க்கரையிலே போய், பரவையாரை நிறுத்தி, இறைவரை வணங்கி, குளத்திலிறங்கித் தடவினார்.

அப்பொழுது சிவபிரான், சுந்தரமூர்த்தி நாயனாரைக் கொண்டு திருப்பதிகம் பாடுவிக்க வேண்டுமென்னும் திருவிளையாட்டினாலே, பொன்னை அக்குளத்திலே வருவியாதொழித்தருள, பரவையார், "ஆற்றிலே இட்டுக் குளத்திலே தேடுகிறீரா?'' என்றார். அது கேட்ட நாயனார், "பரவையார் நகையாதபடி பொன்னைத் தாரும்' என்று திரு முதுகுன்றர்மேல், 'பொன் செய்த மேனியினீர்' என்னும் திருப்பதிகம் பாடி, சிவபெருமானுடைய திருவருளினாலே வந்தெழுந்த பொற்றிரளை எடுத்துக் கரையிலேற்றி, அந்தப் பொன்னையும் முன் கொண்டு வந்த மச்சத்தையும் உரைப்பித்து, அது மச்சத்திலும் பார்க்க உரை தாழ்ந்தது கண்டு, பின்னும் கடவுளைப் பாடக் கடவுளானவர் உரை தாழாது அருள் செய்தனர் என்பதாம்.

## செங்கல் பசும்பொன்னான வரலாறு:

சுந்தரமூர்த்தி நாயனார், திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் பொழுது, பங்குனி உத்திரத் திருநாள் நெருங்கியதும், பரவையாரது திருவிழாச் செலவிற்குக் கொடுப்பதற்குப் பொன் கொண்டுவரும் பொருட்டுத் திருப்புகலூரையடைந்து கோயிலிற்சென்று கடவுளை வணங்கித் திருப்பதிகம் பாடி, அருகிலிருக்கின்ற மடத்திற்குப் போகத் திருவுளங்கொண்டு புறப்பட்டு வந்து கோயிற்றிருமுன்றிலின் ஒரு பக்கத்திலே அடியார்களோடு இருந்தருளினார். அப்போது இறைவரது திருவருளினாலே நித்திரை வந்தது. உடனே திருப்பணிக்காகச் சுடப் பட்ட செங்கற்கள் பலவற்றை வருவித்து உயரம் பண்ணி, அதனையே தலையணையாகக் கொண்டு மேலாடையை விரித்து நித்திரை செய்தார். பின் விழித்தெழுந்தபோது, அந்தச் செங்கற்களெல்லாம் பொற்கல்லாய் இருக்கக் கண்டு, திருவருளைத் துதித்து, திருக்கோயிலினுள்ளே போய்,

"தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வி னும்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேஎந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்!
இம்மை யேதரும் சோறும் கூறையு
மேத்த லாமிடர் கெடலுமாம்

அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே''
என்னும் திருப்பதிகம் பாடியருளினார் என்பதாம்.

## மாணிக்க வாசகர்

### நேரிசையாசிரியப்பா

பகிர்மதி தவழும் பவளவார சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறாது பெற்றார் போலக்
5. களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே
அன்ன மாடு மகன்றுறைப் பொய்கை
வாதவூ ரன்ப வாத லாலே
தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்
'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
10. நெஞ்சத் தவல மில'ரெனும்
செஞ்சொற் பொருளின் தேற்றறிந் தேனே. 28

பதவுரை

**அன்னம் ஆடும்** - அன்னங்கள் விளையாடுகின்ற,
**அகல் துறை பொய்கை** - அகன்ற திருத்துறைகள் வாய்ந்த திருக்குளங்கள் செறிந்த,
**வாதவூர் அன்ப** - திருவாதவூரில் அவதரித்த அன்பரே !
**புகிர்மதி** - இளம்பிறை,
**தவழும்** - ஊருகின்ற,
**பவளம் வார்சடையோன்** - பவளம் நிகர்த்த நெடுஞ்சடைகளை யுடைய இறைவரது,
**பேர் அருள் பெற்றும்** - தெய்வத் திருவருளைப் பெற்றிருந்தும்,
**பெறாரின்** - அதனைப் பெறாதார் போன்று,
**அழுங்கி** - வருந்தி,
**நெஞ்சம் நெக்கு உருகி** - மன நெகிழ்ச்சியுற்று உருகி,
**நீயே** - நீரே,
**நிற்பை** - வாடி நிற்கின்றீர் ;
**பேயேன்** - பேய்த்தன்மையுடைய யானோ,
**பெறாது** - அவ்வருளைப் பெறா திருந்தும்,
**பெற்றார் போல** - பெற்றவர் போன்று,
**களி கூர்ந்து** - பெரிதும் மகிழ்ச்சியில் திளைத்து,
**உள்ளம்** - உள்ளத்தில்,
**கவலை தீர்ந்தேன்** - துயரொழிந்தேன் ;
**ஆ லால்** - ஆகையால்,
**தெய்வப் புலமை** - தெய்வப்புலமை யுடைய,
**திருவள்ளுவனார்** -,
**''நன்று** - தமக்கு உறுதியாயின வற்றை,
**அறிவாரின்** - அறிபவர்களினும்,
**கயவர்** - அவையறியாத கீழ் மக்கள்,
**திருவுடையர்** - நன்மையுடையவராவார் (அவர் போல)
**நெஞ்சத்து**- தமது நெஞ்சினிடத்து,
**அவலம் இலர்** - அவை காரணமாகக் கவலையிலர்,''
**எனும்** - என்றருளிய,
**செஞ்சொல்** - திருக்குறளின்,
**பொருளின் தேற்று** - பொருள் தெளிவை,
**அறிந்தேன்** - தேர்ந்துணர்ந்தேன்.

## விளக்கவுரை

சந்திரன் தன் கலைக்குறைவால் நாணி மெல்லப் புடை பெயர்த லுடையன் என்பார், 'பகிர்மதி தவழும்' என்றார். பகிர்மதி என்றது, ஒற்றைக் கலையாகிய மதியை. பவளக்கொடி போல நீட்சியும் நிறமும் பொருந்தின என்பார், 'பவளவார்சடை' என்றார். செம்பவளம் என்னாது பவளம் என்பது, தன்னோடு இயைபின்மை நீக்கிய விசேடமாதலால் அடை கொடாது கூறப்பட்டது. பவளவார் சடையோன்-சிவபெருமான். பேரருள் என்றது, பசுத்துவம் நீக்கிப் பதித்துவம் பயக்கும் தெய்வத் திருவருளை. பேரருள் பெற்றமையை,

"சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே இரண்டுமிலித் தமிய னேற்கே."

எனவும்,

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்?
அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பால் ?
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
றிருப்பெருந் துறையுறை சிவனே !
எந்தையே யீசா வுடலிடங் கொண்டா
யானிதற் கிலனொர்கைம் மாறே."

எனவும் வரும் திருவாசகச் செய்யுள்களான் உணர்க.

---

சிவபெருமான் ஆட்கொள்பவர்க்கு அருளும் திறம் அளவின்மை நோக்கி, அத்தகை அருளை மென்மேற்பெற ஆவல் கொள்ளல் அருட் பேறுடையார்க்கு இயல்பாகலான், இவர் தாமும் அங்ஙனம் ஆவலுற நின்றனர் என்பார், 'பெற்றும் பெறாரி னழுங்கி நிற்பை' என்றார். பெற்றும் என்புழி உம்மை உயர்வு சிறப்பு; பெறுதலினும் உயர்வு மிகுதியால். பெறாரின் என்பதில், இன் ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது. நிற்பை - முன்னிலை முற்று. பெறாரின் அழுங்கினமையை,

"யானே பொய்யென் னெஞ்சும் பொய்யென் னன்பும்பொய்
யானால் வினையேன் அழுதா லுன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின் தெளிவே தித்திக்கு
மானே யருளா யடியே னுனைவந் துறமாறே"

எனவும்,

"வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை
மரக்க ணென்செவி யிரும்பினும் வலிது"

எனவும், மணிவாசகப்பெருமான் ஆங்காங்கு விளக்கிய அருட்டிரு வாக்குகளான் அறிக. 'அமைதியின்றிச் சலிக்கும் சித்தத்தனாதலின் அவ்வருளின்றிறம் இத்தகையதென அறியாது, உண்டு உடுத்து மகிழ்ந்து உழலாநின்றேன்' என்பார், 'பேயேன் பெறாது பெற்றார் போலக் கவலை தீர்ந்தேன்' என்றார்.

தீர்ந்தேனே என்பதன் ஏகாரம், பேயன் என்புழிக் கூட்டப்பட்டது; 'நீயே, பேயேனே' என்பவற்றிலுள்ள ஏகாரங்களுள் முந்தியது உயர் வினும், பிந்தியது இழிவினும் வந்த தேற்றம், ஏனைய ஏகாரங்கள் அசைகள்.

'அன்னம் ஆடும் அகன்றுறைப் பொய்கை' என்பதற்கு, ஆண் அன்னங்கள் தாமரையிற்றங்கித் தம் பெட்டைகளோடு விளையாடுகின்ற அகன்ற துறைகளையுடைய பொய்கைகள் எனினும் அமையும்; அமை யவே, நீர் வளமுடைய வாதவூர் என்பது போதரும். 'அன்னவயல் சூழருணை' எனவும், அன்னம் கண் படுக்குந் தண்பணை எனவும் கூறுத லானும் அறிக. அன்னங்கள் தாமரையிற்றங்கி வசித்தலை,

"தாமரை மலர்தலை யெடுத்துத் தான்கமழ்
தூமலர்க் குவளைகா லணைத்துத் தோலடிக்
காமரு பெடைதழீஇ யன்னங் கண்கொளுந்
தேமலர்த் தடந்தழீஇத் திசைகண் மல்கிற்றே."

என வரும் சிந்தாமணிச் செய்யுளான் உணர்க.

அன்ப - விளி. அதற்கு முதல் வேற்றுமை அன்பன் ;

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்."

என்றது, அரும்பொருள் அடங்கினும் ஆசிரிய வசனமில்வழிச் சிறவா தாகலின், இத்தெய்வத் திருக்குறளைப் பொன்போற் பொதிந்து வைத் தாரென்க. திருவள்ளுவ நாயனார் தெய்வப்புலமையராகலின் அவர் அருளிய திருக்குறள்களின் சொற்பொருளன்றி அப்பொருட்டெளிவறிதல் தெய்வப்புலமையர்க்கே உரியதாக, ஈண்டு எடுத்துக்காட்டப்பட்ட திருக்குறளின் பொருட்டெளிவைத் தேவரீருக்கும் சிறியேனுக்கும் உள்ள பட்டறிவையொட்டி ஒருவாறறிந்தேன் என்பார், 'பொருளின் றேற்றறிந்தேனே' என்றுங்கூறினார்.

செஞ்சொல் - அடையடுத்த கருவியாகு பெயர்; அது நூலை யுணர்த்தினமையால்.

தேற்றம் என்பது ஈறு குறைந்தது. தேற்றமாவன - இம்மை மறுமை வீடுகட்குரிய உறுதிப் பொருள்களாகிய புகழற ஞானங்களின் இயல் பறிவார், அவற்றை ஈட்டாநின்றே மிக ஈட்டப் பெறுகின்றிலேமென் றும், ஈட்டுகின்ற இவை தமக்கு இடையூறு வருங்கொல் என்றும், இவற்றின் மறுதலையாய பழிபாவம் அறியாமை என்பனவற்றுள் யாது விளையுமோ என்றும் இவற்றாற்கவலை எய்துவர்; கயவர் அப்புகழ் முதலியவொழித்துப் பழி முதலிய ஈட்டாநின்றும் யாதும் கவலை யெய்திலராகலான், இவர் திருவுடையரென்று குறிப்பால் இகழ்ந்தன ரெனக் கோடல் முதலியவை.

'பேயேன்' என்பதற்கு, 'தேவரீரது தரிசன உத்தேச மாத்திரத் தானே 'செல்வேன்; செல்வேன்' என்று சொல்லும் ஆசைப்பேயும், தரிசித்த வழி செல்வேன் என்று செல்லுதலின்றிச் செல்லும் ஆணவப் பேயும், தரிசித்தும் நீங்கிழைத்தலின்றிச் சின்னாள் இருந்து செல்வேன் என்னும் பிராரத்த வினைப்பேயும் இதனோடு யானும் செல்வேன் என்று இரங்து நிற்கும் மாயைப் பேயுமாகிய இவற்றால் பீடிக்கப்பட்டுள்ளேன்' எனப் பொருள் கோடலும் ஒன்று. இதனை இவ்வாசிரியர் பிறாண்டும்,

"பகலாவெழுத் தைந்தேவடி வாகுஞ்சிவ ஞானி
பாற்போகுவ னென்றேநினை வுற்றேனது பொழுதே
புகலாசையி ரும்பேயினிப் போவேமெனப் போய்த்தாற்
புணர்மூலம லப்பேயவற் கண்டேகுவ னென்றே
அகலாமைய கன்றேயக லாநின்றது மெல்ல
வாகத்தின்வி னைப்பேயவற் கண்டுஞ்சில நாணா
னிகலாமையி ருந்தேகுவ னெனநின்றது மாயை
யெனும்பேயத னோடேகுவ னெனநைந்ததி ரந்தே."

எனக் கூறுதலையும் அறிக; பகிர்மதி என்றது பிறையை.

## சிவபெருமானது சடையில் பகிர்மதி தவழும் வரலாறு:

தக்கனுடைய புதல்விகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு பெண்களையும் மணம் புரிந்துகொண்ட சந்திரன் அவர்களுள் உரோகணி யிடத்துமட்டும் மிக்க காதல்கொண்டு அவளுடனே எப்போதும் கூடிக் களித்திருக்க, இச்செய்தியைத் தன் புதல்வியரால் உணர்ந்த தக்கன் சந்திரனை நோக்கி 'உன் கலைகள் குறைக!' எனச் சபிக்க, அச்சாபத் தால் சந்திரன் பதினைந்து கலைகளும் குறைந்தபோது 'மற்றொரு கலையையும் இழக்க வரும்' என அஞ்சி, சிவபெருமானை அடைக்கல மடைந்தான். அப்பெருமான் இரங்கி ஒற்றைக் கலையோடுங்கூடிய

சந்திரனைத் தமது சடையிலணிந்து மீட்டும் கலைகள் வளரும்படி அருள் புரிந்தனர் என்பதாம்.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

**தேனே றலர்சூடிச் சில்பலிக்கென் றூர்திரியு**
**மானேறி யாண்டுப்பெற் றான்கொனீ—தானேறும்**
**வெள்ளைமணி யென்று வினவுவோம் வாங்கியவப்**
**பிள்ளையையாங் காணப் பெறின். 29**

பதவுரை

**தேன் ஏறு** - வண்டுகள் தங்கிய,
**அலர் சூடி** - மலர்களை அணிந்து,
**சில் பலிக்கு என்று** - சிறு பலியின் பொருட்டெடன,
**ஊர் திரியும்**-(முனிவர் மனைவிகள்) இருக்கைகள்தோறும் திரிந்த,
**ஆன் ஏறி**-காளையிலிவர்ந்த பெருமான்,
**நீ ஏறும்** - நீர் ஊறுகின்ற,
**வெள்ளை மணி** - வெண்முத்துச் சிவிகையை,
**யாண்டு பெற்றான்**-எங்குப்பெற்று உமக்கு ஈந்தார் என்று,
**வினவுவோம்** - கேட்போம்,
**வாங்கிய** - அச்சிவிகையைப் பெற்று,
**அப்பிள்ளையை** - அத்திருஞானசம்பந்தப் பிள்ளையாரை,
**யாம் காணப் பெறின்** -யாம் கண்டு வணங்கப் பெறுவோமாயின்,

விளக்கவுரை

வண்டுகள் விரும்பும் மலர் முதலியவற்றிலன்றித் தேவர் மனிதர் முதலியோர் விரும்பும் அணி முதலியவற்றில் அன்பிலர் என்பார், 'தேனேறலர் சூடி' என்றார். தேன் - வண்டின் ஓர் சாதியுமாம். 'தேன் ஏறு அலர்' என்பதற்கு, தேன் பொருந்திய கொன்றை முதலிய மலர்கள் எனினுமாம். சூடி - வினையெச்சம்.

வேண்டிய உணவை ஒரு மனையிற்பெறும் பலியின்றித் தாருகா வனத்து முனிவர் மனைவியரது பல மனையின் வாயில்தோறும் பெறும் சிறு பலியே விழைந்து விடையூர்ந்து சிவபெருமான் சென்றனர் என்பார். 'சில்பலிக்கென்றூர்திரியு மானேறி' என்றார். சில்பலி என்றது சிறு பலியை; அஃது அளவைக் குறித்து நின்றது. சில் - சிறுமை. 'பலிக்கென்று' என்பது உள்ளபடி பலிக்குச் சென்றதன்று. 'ஊர்' என்பது முனிவர் மனைவியரின் இருக்கையையுணர்த்திற்று; ஆகுபெயரான்.

ஆனேறி - சிவபெருமான்; பெயர். பிக்ஷாடன மூர்த்தியாய் ஏறூர்ந்து பலிக்கு எழுந்தருளினர் என்பது புராணக்கூற்று. இதனை, "பெற்றமேறிப் பலிக்கு வரும் பெருமான்'' என வரும் பெரிய புராணத்தில் மூர்க்க நாயனார் புராணச் செய்யுளானுணர்க. ஆன் - ஈண்டுக் காளையை உணர்த்திற்று.

## சிவபெருமான் பலிக்கென்று ஊர் திரிந்த வரலாறு:

தேவதாருகா வனத்திலுள்ள நாற்பத்தெண்ணாயிரம் முனிவரும், "பிரபஞ்சம் அநாதி நித்யம்; சிவ முதலாயினார் எல்லாம் அநித்தியர்; வேதம் ஒருவராற்செய்யப்பட்டதன்றி நித்தியமாயுள்ளது; அதில் வகுத்த யாகம் முதலியவற்றை இயற்றின் அவையே துறக்கமுதலிய பயன்களைப் பயக்கும்; அப்பயனை நுகர்விப்பான் ஆன்மாக்களுக்கு வேறாய், இறைவனொருவனில்லை'' என்று கூறும் மீமாம்சை நூலே உண்மை நூலெனக் கொண்டு, தலைவனாகிய சிவபெருமானை வணங்குதலொழிந்து, அடியவராகிய தங்களைத் தலைவராகத் துணிந்து, யாக முதலிடவற்றைச் செய்தொழுகாநிற்க, அவர் மனைவியரும் அவர் கற்பித்த கொள்கை வழிநின்று, கற்பிற்சிறந்து தேவ மங்கையரை அவமதித்தொழுகலின், அவ்வழிப்பட்டு உலகம் அவலமுறாதபடி அவரியற்றும் யாக முதலியவை பயன்பாடின்மையை விளக்கி அவர் மயக்க உணர்வையொழித்து ஆட்கொண்டருளுதற்பொருட்டே, திருமாலை அவர் மயங்க மோகினியுருக் கொண்டு செல்ல ஏவி, தாம் மங்கையர் மயங்கப் பிக்ஷாடன மூர்த்தியாய் இடபத்திலிவர்ந்து, அம்மங்கையரிருக்குமிடந்தோறும் திரிந்து பலியேற்றனர் என்னும் வரலாற்றால் உணர்க.

தாம் கொண்ட கோலத்தால் முத்துச்சிவிகையீந்தவரெனக் குறிக்கப்பட்டாராயினும், எல்லாமுடையராகலின் அவரே அருள் விளையாட்டான் ஈந்தனர் போலும் என்பார், 'யாண்டுப் பெற்றான்?; என்றார். (யாண்டு - எவ்விடத்து) கொல், தான் - அசைகள்.

மேக முதலியவையீனுமுத்தம் செம்மையாதிய நிறத்தவாகலின் அவற்றானன்று; சங்கீனும் வெண்முத்தாற் சமைத்ததென்பார், 'நீ யேறும் வெள்ளை மணி' என்றார். வெள்ளை மணி - முத்துச் சிவிகை. வெள்ளை மணி - அடையடுத்த ஆகுபெயராய்ச் சிவிகையையுணர்த்திற்று; அடை நீக்கிக் கருவியாகுபெயராகக் கோடலும் ஒன்று. வெள்ளை - சங்கும், வெண்மையுமாம்.

'வெள்ளை மணி-வெண்மையாகிய மணியையுடையது; அது சிவிகையென அன்மொழிப்பெயராகக் கோடலாகாதோ?' எனின் அற்றன்று. சேனாவரையர் பொற்றொடியையும், பரிமேலழகர் கனங்குழையையும், வாணன் கோவையுரையாசிரியர் தாழ்குழலையும், சிவஞான சுவாமிகள் அறுபதத்தையும் ஆகுபெயராகக் கொண்டிருத்தல் நியதிப் பெயர் கருதியன்றோ? ஆதலால், ஆகுபெயராகக் கோடலே சால்புடைத்து; நித்திலப் பந்து, முந்நீர் என்புழிப் போல ஆகுபெயரன்மொழியாகக் கருதுதலும் ஒன்று.

'பிறராற் காணுதற்கரிய பெருந்தகையைக் காணப்பெற்றால், சிவிகை வந்தமை கேட்டுத் தெளிதலுமாம்' என்பார், 'காணப்பெறின்

'வினவுவோம்' என்றார். எனவே, அப்பிள்ளையைக் காணப்பெறுவது எளிதன்றென்பது தோன்றப் 'பெறின்' என அருமை குறித்து நின்றது. 'அப்பிள்ளை' என்புழி அகரம் தலைமைச்சுட்டு. 'பலரறி பழிச் சொலுடையராய்ச் சிறுபலிப்பொருட்டு ஊர் திரிதலைக் கொண்டு உயர்ந்த வாகனமின்றி எருதேறியுழலுமவர்க்குச் சங்கு மணிதானும் ஏது? ஆயினும், அவர்க்குக் குபேரனாதியர் உரிமையரெனக் கூறப் படுதலான், அவர்மாட்டுப் பெற்றும் அளித்திருக்கலாமாகலின், யாண்டுப் பெற்றாரென்று கடாவுவோம்; வாங்கிய அவ்வறியாப் பிள்ளையை யாம் காணின்' எனவும் பொருள்பட்டு இதுவும் வஞ்சப் புகழ்ச்சியாய் நிற்பதுணர்க.

## ஆளுடைய பிள்ளையார் முத்துச்சிவிகை பெற்ற வரலாறு:

திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருநெல்வாயிலரத்துறைக்குப் போகும்போது தந்தையாருடைய தோண்மேலிருத்தலை ஒழிந்து திருவடித்தாமரை நோவ, பையப் பைய நடந்து, மாறன்பாடி என்னும் பதியிற்சென்று, அன்றிரவு அப்பதியிலேயே தங்கினார். திருவரத் துறையில் எழுந்தருளியிருக்கின்ற கடவுள் தம்முடைய திருக்குமார ராகிய பிள்ளையாருடைய வழி வருத்தத்தைத் திருவுள்ளத்தடைத்து அத்தலத்திலிருக்கின்ற பார்ப்பனர் அனைவருக்கும் தனித்தனியே கனவில் தோன்றி, பிள்ளையாருக்கு முத்துச் சிவிகையும், முத்துக் குடையும், முத்துச் சின்னங்களும் தம்மிடத்தில் எடுத்துக்கொண்டு போய் கொடுக்கும்படி கட்டளையிட்டு மறைந்தருளினார். உடனே பார்ப்பனர்கள் விழித்தெழுந்து மகிழ்ந்து, அற்புதமெய்திய சிந்தை யோடும் ஆலயத்தில் வந்துகூடி, திருப்பள்ளியெழுச்சிக் காலம் வரத் திருக்காப்பை நீக்கி, முத்துச் சிவிகையையும், முத்துக் குடையையும், முத்துச் சின்னங்களையும் கண்டு ஆனந்தங்கொண்டு, துந்துபி முதலிய இசைக்கருவிகள் ஒலிப்ப, சிவனடியார்களோடு அந்தச் சிவிகை முதலியவற்றைத் தாங்கிக்கொண்டு, ஆளுடையபிள்ளையாரிடத்துக்குப் போனார்கள். அதற்கு முன் பரமசிவனார் ஆளுடைய பிள்ளையாருக் கும் கனவிலே தோன்றி, "நாம் உனக்கு முத்துச்சிவிகையும், முத்துக் குடையும், முத்துச் சின்னங்களும் அனுப்புகின்றோம்; நீ அவைகளை ஏற்றுக்கொள்" என்று திருவாய்மலர்ந்தருளினார். பிள்ளையார் விழித் தெழுந்து தாம் கண்ட கனவைத் தந்தையாருக்கும் அடியாருக்கும் அருளிச்செய்து, வைகறையிலே திருநீறணிந்து திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு எழுந்தருளினார். விடியற்காலையில் பார்ப்பனர்கள் சிவனடியார்களோடு முத்துச்சிவிகை முதலியவற்றைக்கொண்டு எதிரே வந்து, பிள்ளையாரை வணங்கி நின்று, "இவை திருவரத் துறையில் வீற்றிருக்கின்ற கடவுள் தந்த பொருள்கள்; ஏற்றருளும்,"

என்றார்கள். பிள்ளையார் அதைக் கேட்டு, அக்கடவுளுடைய திருவருளை "எந்தை யீச னெம்பெருமான்' என்னும் திருப்பதிகத்தினாலே பாடி, திருவருள் வடிவாகிய முத்துச்சிவிகையை வலஞ்செய்து, பூமியிலே விழுந்து வணங்கி எழுந்து, திருவைந்தெழுத்தைச் சொல்லிக்கொண்டு உலகமெல்லாம் உய்யும்படி, அதில் ஏறியருளினார் என்பதாம். இதனை,

"எந்தை யீச னெம்பெருமான் ஏறமர் கட வுளென்றேத்திச்
சிந்தை செய்த வர்க்கல்லால் சென்று கைகூ டுவதன்றால்
சந்த மாம லருந்திக் கடும்புன னனிவா மல்குகரைமேல்
அந்தண்சோலை நெல்வாயி லரத்துறை யடிக டம்கருளே."

என்னும் தேவாரத்தாலறியலாம்.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

**பெற்றா னினைப்பெற் றவர்போற் பெறலும் பிறப்பதுண்டே**
**னற்றா ரணியி னினைப்போற் பிறப்பது நல்லகண்டாய்**
**செற்றார் புரமெரி செய்தவில் வீரன் திருப்பெயரே**
**பற்றா மறிவெண் டிரைக்கட னீந்திய பாவலனே! 30**

#### பதவுரை

**செற்றார் புரம்** - பகைவரது திரி புரங்களை,
**எரி செய்த** - எரித்து நீறாக்கிய,
**வில் வீரன்** - மேரு மலையாகிய வில்லையுடையசிவபெருமானது,
**திருபெயரே** - திருப்பெயராகிய திருவைந்தெழுத்தே,
**பற்றா** - செவ்விய துணையாகக் கொண்டு,
**மறி வெள் திரை கடல்** - மடங்கி வீசும் வெள்ளிய அலைகள் வாய்ந்த கடலை,
**நீந்திய பாவலனே** - கடந்த வாகீச மூர்த்தியே!
**நல்தாரணியில்** - உயர்ந்த இங்கில வுலகத்திலே,
**பெற்றால்** - ஒரு புதல்வனைப் பெற்றால்,
**நினை பெற்றவர் போல்** - உம்மைப் பெற்ற தாய் தந்தையர்களைப் போல,
**பெறலும்** - (உம்மையொத்த ஓர் புதல்வனைப்) பெறுதலும்,
**பிறப்பது உண்டேல்** - பிறத்தல் உளதாயின்,
**நினைபோல்** - உம்மைப்போல,
**பிறபபதும் நல்ல** - (ஒரு புதல்வனாகிப்) பிறத்தலுமே சிறந்தன.

#### விளக்கவுரை

'பெற்றால் உம்மைப் பெற்றவர்போல உம்மையொத்த புதல்வனைப் பெறதலும், உதிப்பின் உம்மைப் போல ஒரு புதல்வனாகியுதித்தலுமே சிறந்தன' என்பதாம். இதனை,

"உகுபிறப் பினுமதே பிறப்புமை யுயிர்த்துளார்
மகவுயிர்த் துளார்"

என வரும் தணிகைப் புராணச் செய்யுளாலுணர்க. இங்கில வுலகத்திலே புதல்வர்ப்பெற்றாருள் எவராலும். புகழப்பெற்றவர் புகழனாரும் மாதினியாருமேயென்பார், 'பெற்றா னினைப்பெற்றவர் போற் பெறலும்' என்றார். பெற்றவர் - தாய் தந்தையர். புதல்வரா யினாருள் எவரானும் புகழப்பெற்றவர் நீவிரே என்பார், 'நினைப்போற் பிறப்பது நல்லது' என்றார். ஏனைப்பேறும் பிறப்பும் நல்ல அல்ல என்பது குறிப்பெச்சம். எனவே,

> "நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
> யிம்மையிலும் பிழைப்பதென வெம்போல்வா ருக்தெளிய"

மற்றை ஆசிரியரினும் பட்டறிவில் விளக்கிய அருட்டிற நோக்கி, எவரும் பேணப்படும் இவர் பெருமையும் ஈன்றார் பெருமையும் இனிது நிகழ்த்தியபடி.

இம்மையிலும் பிழைத்தலை விளக்கினமை:

சமணரால் இடப்பட்ட நீற்றறையினும், நஞ்சு கலந்த உணவினும், ஏவப்பட்ட யானையினும், கல்லிற்பிணித்து விடப்பட்ட கடலினும், தப்பியுய்ந்தமையும் பிறவுமாம்.

முத்தி பெறற்குரியது இத்தாரணியேயாதலின், 'நற்றாரணி' என்றார். 'பிறப்பது நல்ல கண்டாய்' என்பதில் பிறப்பதுமே எனப் பிரிநிலையேகாரம் தொக்கது. நல்ல - குறிப்பு வினைமுற்று.

கண்டாய் - முன்னிலையசை. 'நல்லவாகச் செய்தாய்' எனினு மமையும்.

தாரகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி என்னும் அசுரர் மூவரும் திருநீறு உருத்திராக்கமணிந்து திருவைந்தெழுத்து ஓதியவராய்ச் சிவ பெருமானை வழிபட்டாரேனும் தேவர் முதலியோருக்கு இடுக்கண் புரித லுடைமை பற்றி, திருமால் புத்தகுருவாய்ச் சென்று மயக்க, அக் கொள்கையின் மயங்கிச் சிவபத்தியில் வெறுப்புற்றனர் என்பார், 'செற்றார்' என்றார். செற்றார் என்றது தாரகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி முதலிய அசுரர்களை. புரம் - திரிபுரம்; முன்மொழி கெட்ட பின்மொழி நிலையல். இனி, செற்றார்·புரத்துளொருங்கிருந்தும், செறாதார்புரத்தை எரிசெய்திலரென்பார், இதனை உள்ளுறையாக்கிச் 'செற்றார் புரமெரி செய்த வில்வீரன்' என்றார். இக்குறிப்பு அமணர்க ளென்னும் செற்றார் புரத்துளொருங்கிருந்தும், செறாராகிய இவர் புரத்தைப் புரந்தமைமேற்று. ஈண்டுச் 'செறாதார்' என்றது, சிவபத்தி யில் வழாதுய்ந்து சிவபெருமானது வாயில் காவல் செய்த சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் மூவரையும். செற்றல் - வெறுத்தல். புரம்- ஊரும் உடலுமாதலின், ஏற்ற பெற்றி கொள்க. செற்ற வழி, மேருச் சிலையாதியவுடையராய்ச் சென்று, அவர் நிலைமை கண்டு முறுவலிக்க,

அதிற்றோன்றிய அனலான் முப்புரங்களும் தீப்பட்டு, அத்திருமாலாதியர்க்குத் தோல்வியுறாதபடி அவருருவாகிய கணையையும் விடுத்த அருளாளரென்பார், புரமெரி செய்த வீரனென்னாது 'வில்வீரன்' என்றார்.

திருவைந்தெழுத்து பரசிவ வடிவாய் விளங்கிச் சிந்திப்பாரைத் தன் வடிவமாக்கலின், அது அப்பரமர்க்குரிமையுடைத்தென்பார் 'திருப்பெயர்' என்றும், 'சிறுமையுடையாரையும் பிறவிக்கடல் கடப்பிக்கும் அத்திருமந்திரம் திருநாவுக்கரசரை இத்திரைக்கடல் கடப்பியாது விடுமோ?' என்பார், 'பற்றா' என்றும் கூறினார்.

'திருப்பெயரே' என்புழியும், பாவலனே என்புழியுமுள்ள ஏகாரங்களுள் முன்னையது தேற்றம்; பின்னையது விளியுருபு.

திருவைந்தெழுத்து சிவாகமாதிகட்கும் மூலமாதலைத் தேர்ந்து, அதனியல்பைச் "சொற்றுணை வேதியன்" என்னும் திருப்பதிகத்தமைத்துத் துதித்துக் கடலைக் கடந்த அத்தகையர் என்பார், 'கடனீந்திய பாவலனே' என்றார்.

## திரிபுரமெரித்த வரலாறு:

சூரபதுமன் தம்பியாகிய தாரகன் புதல்வர்கள் தாரகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி என்னும் அசுரர் மூவரும் கோடியாண்டு தவமியற்றி, பிரமதேவராற் பொன் வெள்ளி இரும்புகளானாகிய மூவரண்கள் முறையே சுவர்க்கம், அந்தரம், பூமி என்புழி நிலைபெற்றிருந்து வேண்டுமிடங்கட்கு உடன் வரவும், அவை ஆயிரம் யாண்டுகட்கோர்கால் ஒரு முகூர்த்த நேரம் ஒருங்கு தொகவும், அக்காலத்தில் ஒரு கணைவிடுத்து அழிப்பினன்றி வேறெவ்வகையானும் அழியாதிருக்கவும், திருமாலாதியர் எதிர்ப்பினும் தோற்றோடவும் வரமேற்று, மயன் வகுத்த மாளிகைகளோடு கூடிய அவ்வரண்களினுற்று, திருநீறு உருத்திராக்கமணிந்து திருவைந்தெழுத்துகளையே சிந்தித்துச் சிவபெருமானை வழிபட்டாராயினும், தேவராதியர்க்கு இடுக்கண் புரிதலுடைமைபற்றி, அச்சுதமூர்த்தி (திருமால்) புத்தகுருவாய்ச் சென்று மயக்க, அக்கொள்கையின் மயங்கிச் சிவபத்தியில் வெறுப்புற்றஞான்று, சிவபெருமான் தேவர்கள் வேண்டுகோட்கிரங்கி, பூமி தேராகவும், சூரிய சந்திரர் இரு சக்கரங்களாகவும், நான்கு வேதங்கள் நான்கு புரவிகளாகவும், பிரமன் சாரதியாகவும், மந்திரம் கடிவாளமாகவும், பிரணவம் சாட்டையாகவும், ஆதிசேடன் நாணாகவும், திருமால் அம்பாகவும், காற்று அம்பிற்கட்டிய சிறகாகவும் கொண்டு திரிபுரத்தையடைகையில், தேவர் ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுர அழிப்பு நிறைவேறுவதாகத் தருக்குற்றனர். அதனையுணர்ந்த சிவபெருமான்

நகைக்க, அதனால் அற்றை ஞான்று திரிபுரம் எரிந்தன என்பதாம். திரிபுரத்தை நகைத்தெரித்தமையேயன்றிக் கணையையும் விடுத்தமையை,

"இவைகள்டு கணையாகு முகுந்தனும்வா யுவுமதியு
மனலு மெம்மை
நவைகொண்டார் புரத்தேவு கெனவிரந்து சொலவீசன்
விடுப்ப நண்ணி
யவையுண்ட வழலைமிக வெழமூட்டி மீண்டுமல
ரடியிற் றாழத்
துவர்வென்ற செங்கனிவாய் பங்கனுநல் லருள்கூர்ந்து
துலங்கி நின்றான்"

என வரும் இலிங்கபுராணச் செய்யுளாலுணர்க.

திருவைந்தெழுத்துப் பரசிவரூபமாய் விளங்குதலை,

"சிவனரு ளாய சிவன்றிரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோதமல மாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே."

என வரும் திருமந்திரச் செய்யுளாலுணர்க.

திருவைந்தெழுத்துப் பிறவிக்கடல் கடப்பித்தலை,

"இருவினைப் பாசமு மலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்க ளேறிட
வருளுமெய் யஞ்செழுத் தரசை யிக்கட
லொருகன்மே லேற்றிட லுரைக்க வேண்டுமோ?"

என வரும் பெரிய புராணத்தில் திருநாவுக்கரசு நாயனார் புராணச் செய்யுளாலுணர்க.

திருவைந்தெழுத்துச் சிவாகமாதிகட்கு மூலமாதலை,

"அஞ்செழுத்தே யாகமமு மண்ண லருமறையு
மஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்து—மஞ்செழுத்தே
யானந்தத் தாண்டவமு மாறாறுக் கப்பாலா
மோனந்த வாமுத்தி யும்."

என வரும் உண்மை விளக்கச் செய்யுளாலுணர்க.

திரிபுர எரிப்புக் காலத்து மூவருய்ந்தமையை,

"முப்புரங்களின் மூவர்புத்தன் மொழிதிறத்து மயங்கிடா
தப்பணிந்தவர் தாள்பணிந்தரு ளாற்றினின்றன ராதலாற்
பொய்ப்புரந்தபு காலைமீற்றறை நாவின்மன்னவர் போலெரி
தப்பி வாழ்ந்தன ரீசனாணையி னிற்பவர்க்கிடர் சாருமோ."

என வரும் **காஞ்சிப்புராணம்** முப்புராரி கோட்டப்படலச் செய்யுளா லுணர்க.

திருநாவுக்கரசு நாயனார் கடல் நீந்திய வரலாற்றை 22 ஆம் செய்யுளில் காண்க.

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

**பாவாய்ப் பொழிந்த வானமுதப்**
**பவளத் திருவாய் நம்பிநீ**
**சேவாய்ப் பொருதுந் தருமமுடைத்**
**தேவன் மலைக்குப் போம்பொழுது**
**காவாய்ப் பயந்த தடக்கைமலர்க்**
**கழறிற் றறிவார் கடாவிவரு**
**மாவாய்ப் பிறக்கக் கிடையாதே**
**மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே. 31**

பதவுரை

**வான் அமுதம் பா ஆய்** - சிறந்த முத்தி சாதனங்களைத் திருப் பாடல்களாக,
**பொழிந்த** - சொரிந்த,
**பவளம் திருவாய் நம்பி** - செம்பவளம் போலும் திருவாயையுடைய நம்பியாரூர வள்ளலே !
**தருமம்** - தருமதேவதையை,
**பொருதும்** - சண்டையிடுகின்ற,
**சே ஆய்** - இடபமாய்,
**உடை** - உடையதேவன்,
**மலைக்கு** - சிவபெருமானமரும் திருக்கயிலை மலைக்கு,
**நீ போம் பொழுது** - நீர் எழுந்தருளுங் கால்,
**கா ஆய்** - கற்பகத் தருவை நிகர்த்து,
**பயந்த** - (கருதுவார் கருதுவன வெறுப்ப) நல்கிய,
**மலர் தடகை** - செந்தாமரை போலும் திருக்கரங்களை யுடைய,
**கழறிற்றறிவார்** - சேரமான் பெருமாள் நாயனார்,
**கடாவி வரும்** - செலுத்தி வரும்,
**மா ஆய் பிறக்கும்** - இனி யுகமுடிவிற் குதிரையாயுதிக்கும்,
**திருமாற்கு கிடையாது** - திருமாலுக்குக் கிட்டாது.

விளக்கவுரை

இவ்வுலகேயன்றி எவ்வுலகமும் உய்யும்பொருட்டு முத்தி சாதனங்களை யாண்டும் முற்றுவித்தவரென்பார், 'வானமுதப் பாவாய்ப் பொழிந்த நம்பி' என்றார். வானமுதம் என்றது பரமுத்தியை; அஃதீண்டு அதன் சாதனங்களின் மேற்று : ஆகுபெயர் முகத்தான்; சிறந்த முத்தி எனினுமமையும். (வான் - சிறப்பு; அமுதம் - முத்தி).

இவ்வுலகன்றி எவ்வுலகுமுய்வித்தமையை,

"பித்தாபிறை சூடியெனப் பெரிதாந்திருப் பதிக
மித்தாரணிமுதலாவுல கெல்லாமுய விடுத்தார்"

என வரும் பெரிய புராணத்தில் தடுத்தாட்கொண்ட புராணச் செய்யுளா லுணர்க.

'வானமுதம் பாவாய்ப் பொழிந்த பவளத்திருவாய் நம்பி' என மாற்றுக. பாவாய் - பாடல்களாக. ஆய் - செயவெனெச்சத் திரிபு.

சென்றவோர் தீப்பிரளயத்தில், அச்சுதனாதியர் உலகம் அனலான் முடிவுற்றதாக, அதுகண்ட தருமதேவதை, "யானும் இறப்பன்கொல்" என்று இனைந்து, இடபவுருவினெய்தித் துதிக்க, அதனை ஊர்தியாகக் கொண்டு, "இவ்வடிவோடு எங்கும் எம்முன் வதிக" என்று உரிய வரமு நல்கி அழித்தற்கருத்தாவாகிய அத்தலைமைக் கடவுள் அமர்தலின், நொடித்தான் மலையென நுவலப்பெற்றதென்பார், 'சேவாய்த் தரும முடைத் தேவன்மலை' என்றார்.

தேயுப்பிரளயத்தில் அச்சுதனாதியர் அனைத்தும் ஒடுங்குதலை,

"ஆய தன்மையி லச்சுதற் காயுவு
மாயு மெல்லையின் மன்னுயிர் யாவையுந்
தேயு மண்டஞ் சிதைந்திடு மெங்கணும்
பாயி ருங்கன லேபரந் துண்ணுமால்."

என்பதனாலும்,

தருமதேவதையை ஊர்தியாகக்கொண்டு உரிய வரமீந்தமையை,

"இறத்தலை யின்மையும் யான மாய்த்தனைப்
பொறுத்திடுந் தன்மையும் பொருவில் வண்மையு
முறைத்திடு மன்பும்வா லுணர்வு நல்கியே
யறத்தனிக் கடவுளுக் கண்ணல் கூறுவான்.

"மைதவி ரடியர்செய் பவமு மற்றுளார்
செய்திடு தருமமுந் திரிப தாகியே
யெய்திடு கின்றதி யாமுன் றன்னிடை
மெய்திக ழுயிரென மேவும் பான்மையால்."

என்பதனாலும் கந்தபுராணம் ததீசியுத்தரப்படலத்தில் அறிக.

பொருதலில் வல்லதாகலின், 'பொருதுஞ்சே' எனப்பட்டது. 'பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி' எனப் பிறாண்டும் வருதல் காண்க. 'தருமமுடைத்தேவன்' என்புழி 'உடைய' என்பது ஈறு தொக்கது. மன்னுயிர் வெஃகியவற்றை வரையாது கொடுத்த வள்ளன்மையர் என்பார் 'காவாய்ப்பயந்த தடக்கை' என்றார்.

'காவாய்' என்புழி ஆக்கச் சொல் உவமைப்பொருட்டு; (கற்பகத் தருவை நிகர்த்து). அனைத்துயிரும் உளத்தோடு உசாவலையறிந்து அவற்றின் உள்நிலவிய துயரத்தினை ஒழிப்பவர் என்பார், 'கழறிற்றறி வார்' என்றார். தடக்கை - பெருமை வாய்ந்த கை. தட - பெருமை;

அது கொடையாற்பெற்ற மேன்மை மேற்று; "தடவுங் கயவு நளியும் பெருமை" என்பதனாலுணர்க.

சேரமான் பெருமாள் நாயனாருக்குக் கழறிற்றறிவார் என்பது ஒரு பெயர். இதனை,

"அளவில் பெருமை யகிலயோ னிகளும் கழறிற் றறிந்தவற்றி
னுளமன் னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றிக்
களவு கொலைகள் முதலான கடந்து கழறிற் றறிவார்தாம்
வளவர் பெருமா னுடன்செழியர் மகிழுங் கலப்பில் வைகுநாள்."

என வரும் பெரியபுராணத்தில் சேரமான் பெருமாள் நாயனார் புராணச் செய்யுளான் உணர்க. கழறல் பேசலேயாயினும், ஈண்டு மனத்தொடு உசாவலின் மேற்று. திருமால் மாவாகச் சிந்தித்திருப்பரேல் அங்ஙனமே கொண்டு செலுத்துவரென்பது தோன்றக் கழறிற்றறிவாரென்றார். கடாவல் - விரைவில் செலுத்துதல்.

திருமால், போரில் தம்மால் துரத்தப்பட்ட தானவரைப் புரந்தமை காரணமாகப் பிருகு முனிவர் மனைவியாகிய கியாதியைக் கொன்றமையின், அம்முனிவரிட்ட சாபத்தானேர்ந்து சிவபிரானால் அருளல் வெகுளல்கள புரியப்பெற்ற பத்தவதாரத்துள், 'உகமுடிவி லுறுதற்கு எஞ்சி நிற்கும் கற்கியவதாரத்தும், அப்பிரானை வழிபட்டே அருள்பெற வேண்டுமன்றே? இச்சேரமான் பெருமாணாயனார் ஊரும் கற்கியாய்ப் பிறப்பின், அவ்வழிபாடின்றி அப்பொழுதே அருளப்பெற்று, அப் பிறப்பும் அகன்றிருக்கலாம்; அதற்குத் தவப்பேறின்றாயிற்று' என்பார், "மாவாய்ப் பிறக்கக் கிடையாதே, மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே" என்றார். கிடையாதே, திருமாற்கே என்பவற்றி லுள்ள ஏகாரங்கள் அசைகள். பொருதுஞ்சேவாகத் தருமதேவதையை யுடைய தேவன் எனவுங்கொள்க. நொடிததல் - அழித்தல்.

## திருமாலின் கற்கிப் பிறப்பின் வரலாறு:

கற்கி, திருமாலின் பத்துப் பிறப்புகளுள் ஒன்றாகிய கடைசிப் பிறப்பு. அவர் கலியுக இறுதியில் சிம்மளத் தீவில் சம்பளமென்னும் கிராமத்தில் விட்டுணு எச்சன் இல்லத்தில் குதிரை முகமாகப் பிறந்து தீய அறங்களைப் போக்கி நல்லறத்தை நிலை நிறுத்துவர். இவர் ஏறுங் குதிரை தேவதத்தம். இவர் விட்டுணு எச்சன் மனைவியான சுமதியின் கருவில் உடன்பிறந்தார் நால்வருடன் பிறப்பர். இலக்குமியும் அத் தீவில் பிரகத்திரன் மனைவியான கௌதமியின் வயிற்றில் வைகாசி சுக்கில பக்கத் துவாதசியில் பிறப்பள்.

இவர் சென்ற யுகங்களுள் ஓர் யுகத்தில் பரசுராமரிடத்தில் வேதங் களையும் வில்வித்தையையும் கற்றுணர்ந்து, பதுமாவதியைச் சிம்மளத்

தில் மணம் புரிந்து, சயன், விசயன், மேகலன், வலாகன் என்னும் புதல்வர்களைப் பெற்றனர். கல்கி, கிருதயுகம் ஆரம்பித்துவிட்ட தென்று திசை எட்டும் வலம் வரத் தொடங்கி, சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்து அவரிடத்துக் குதிரையையும், எல்லாமறிந்த கிளியையும் வாளையும் பெற்று, எண்டிசையும் வலஞ்செய்து, சுத்தோதனன் முதலியவர்களை எதிர்த்து, மிலேச்சர்களைக் கொன்று, அறத்தை நிலை நாட்டி, மீண்டும் பரசுராமரைச் சேவித்துத் திக்கெட்டும் சென்று வந்த நிகழ்ச்சிகளை அவரிடம் கூறினர். பிறகு தேவர்கள் வேண்டக் கல்கி தம் புதல்வருக்கு முடி சூட்டிச் சிவபெருமானைப் பூசித்து வைகுண்டமடைந்தனர் என்பதாம்.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தி
னிழல்வா யுண்ட நிகரிலா னந்தத்
தேன்றேக் கெறியுஞ் செய்ய மாணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
5 யாவரு மோது மியற்கைத் தாதலிற்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கு மதுர வாசக
மோதின் முத்தி யுறுபயன்
வேத மோதின் மெய்ப்பய னறமே. 32

#### பதவுரை

**திரு ஆர் பெருந்துறை**-திருப்பெருந் துறையிலே,
**செழு மலர் குருந்தின் நிழல்வாய்** - செழித்த மலர்கள் செறிந்த குருந்த மர நிழலில்,
**உண்ட** - பருகிய,
**நிகர் இல் ஆனந்தம் தேன்** - ஒப்பி கந்த சிவானந்தத் தேன்,
**தேக்கு எறியும்** - உவட்டெடுக்கும்,
**செய்ய மாணிக்க வாசகன்** - ஞான வொழுக்கச் சிறப்பையுடைய மாணிக்கவாசக வள்ளலார்,
**புகன்ற** - அருளிச்செய்த,
**மதுர வாசகம்**-இனிய திருவாசகம்,
**யாவரும்** - எவரும்,
**ஓதும் இயற்கைத்து** - ஓதுகின்ற இயல்புடையது,
**ஆதலின்** - ஆகலான்,
**பொன் கலம் நிகர்க்கும்** - அது பொன் பாத்திரத்தையொக்கும்; (அஃதன்றி)
**மதுரம் வாசகம் ஓதின்** - இனிய திருவாசகத்தையோதினால்,
**உறுபயன் முத்தியே** - அதனால் அடையும் பயன் முத்தியே;
**வேதம் ஓதின்** - அவ்வேதங்களை யோதினால்,
**மெய்ப்பயன் அறமே** - (அவற்றா லடையும்) உண்மைப் பயன் விண்ணுலகாதி பதங்களே,

விளக்கவுரை

மாணிக்கவாசகப் பெருமான் திருப்பெருந்துறையிலே குருந்த மர நிழலில் உண்ட சிவானந்தத் தேன் உவட்டெடுப்ப, அதனை இடையற வின்றி அருந்தாநிற்றலின், திருமேனியன்றித் திருவாசகமும், அத் தேன் மயமாகி, எவர்க்கும் சிவானந்தம் பயப்பதென்பார், 'திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின் நிழல்வாயுண்ட நிகரிலானந்தத் தேன்றேக் கெறியும் செய்ய மாணிக்கவாசகன் புகன்ற மதுர வாசகம்' என்றார். திரு ஆர் பெருந்துறை - திரு ஆர்ந்த பெருந்துறை; திருப் பெருந்துறை. 'நிழல்வாய்' என்புழி வாய் - ஏழனுருபு.

நிகரில் ஆனந்தம் - சிவானந்தம். தேக்கெறிதல் - உவட்டெடுத்தல். 'செய்ய மாணிக்கவாசகன்' என்பதிலுள்ள குறிப்புப் பெயரெச்சத்தின் பகுதியாகிய செம்மை ஞானவொழுக்கச் சிறப்புடைமையை உணர்த்திற்று.

இம்மதுர வாசகமும் இன்ன வருணத்தார்க்கு உரித்தென்பதன்றி, அந்தணர் முதலிய பல திறத்தராயுள்ள சைவ சமயத்தார் பலர்க்கும் பயன்படுவதென்பார், 'யாவரும் ஓதுமியற்கைத்து' என்றார். 'யாவரும்' என்பதில் உம்மை முற்று. பலரும் தொடினும் இழிக்கப் படாது உயர்வுற்றதென்பார், 'பொற்கல நிகர்க்கும்' என்றார்.

வேதம் நான்கும் வைதிக நெறியை மேற்கொண்ட அந்தணர் முதலிய மூவர்க்கும் உரியவென மொழியப்படினும், மற்றையிருவர்க் கும் ஓதுதற்கன்றி ஓதுவித்தற்கு உரிமை நுவலாமையானும், அந்தணர் ஒருவர்க்கே உரித்தாயவென்பார், 'பூசுரர் நான்மறை' என்றார். அந்தணரைப் பூதேவர் எனக் கூறுதலுண்மையான் 'பூசுரர்' எனப்பட்டார்.

நான்மறையுட்சில கூறு, ஏனையோராற்கேட்கவும் படாதென அந்தணரால் மறைக்கப்படுதலின், உற்றணுகுதற்கும் உரிமையுறாத வென்பார், 'மறை மட்கல நிகர்க்கும்' என்றார். இக்கருத்துப் பற்றியே இவ்வாசிரியரும் பிறாண்டும், "நிலக்கலமும், பொற்கலமு மன்ன மறையும் புகழ் மூவர், சொற்கலைய மொத்துத் துதிப்ப விருந்து" என்றார்.

பலர்க்கும் ஓதுதற்குரித்தாயதன்றி, உயர்கதியையும் நல்குவ தென்பார், 'மதுர வாசக மோதின் முத்தியே' என்றார். முத்தியளித்தல் முதுமறைகட்கு இன்றென்பார், 'வேதமோதினறமே' என்றார். நான் மறையை இழித்தும் திருவாசகத்தை உயர்த்தியும் கூறியது முகம னன்று, உண்மையே என்பார், 'மெய்ப்பயன்' என்று விதந்தார். இனி, வேத நான்கும் உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம் என்னும் சுரங்களின் வழுவாமல் ஓத வேண்டுமென்னும் நியதியவாகலின், அவற்றை

ஏட்டின் எழுதி வைப்பின் வலியில்லாரும் ஓதுதலான் அவற்றின் சொற்செறிவின் திட்பம் குறையுமென ஏட்டினெழுதாது, வாய்ப்பாடமாகப் போற்றி வருதலின், 'அச்சுரங்களில் வல்ல பூசுரரே அவற்றிற்குரியவராயினார்; இதற்கு அங்கியதியின்மையின், வல்லுநரும் வல்லாருமாகிய சைவ சமயத்தார் பலரும் ஏட்டிலெழுதி ஓதுகின்றாராதலின், அவரனைவரும் உரியவரே என்பது தோன்ற, 'யாவரும்' என்றார். 'மறை' என்பது மறைக்கப்படும் பொருளுடைமையிற் போந்த பெயரேயாயினும், ஈண்டு 'மறைக்கப்படுவது' என்னும் பொருட்குறிப்பின் மேற்று. 'அறம்' என்றது அறப்பயனை. அறமே என்னும் தேற்றேகாரம் முத்தி என்புழியும் கூட்டப்பட்டது உறுமெய்ப்பயன் என ஈரிடத்தும் கூட்டியும் முடித்தலும் ஒன்று. திருவாசகத்தேன் சிவானந்தம் பயத்தலை மேலே விதந்தாம் கடைப்பிடிக்க.

ஆனந்தத் தேன் தேக்கெறிதலை,

"குறிகுணங்கள் கடந்ததனிக் கூத்தனுரு வெழுத்தைந்தின்
கொடுவா ளோச்சிப்
பொறிகரணக் காடெறிந்து வீசிமனப் புலந்திருத்திப்
புனிதஞ் செய்து
நிறைசிவமாம் விதைவிதைத்துப் பசுபோதங் களைந்தருணன்
னீர்கால் பாய
வறிவுருவாய் விளைந்ததனிப் பரானந்த வமுதருந்தா
தருந்தி நின்றார்."

என வரும் திருவிளையாடற்புராணம் மண் சுமந்த படலத்தானுணர்க.

வேதமோதின் அறமே என்பதனை,

"சுருதிவழி யொழுகினர்கள் சுவர்க்கத்தார்"

என வரும் கோயிற்புராணம் இரணியவன்மச் சருக்கச் செய்யுளானறிக.

நான்மறையை ஏட்டிலெழுதாமையை,

"ஆற்ற லழியுமென் றந்தணரக ணான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்"

என வரும் திருவள்ளுவ மாலைச் செய்யுளானுணர்க.

## திருஞானசம்பந்தர்

### நேரிசை வெண்பா

'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானொ டூர்ந்தா னிடை' யை — மறுத்தார்சம்
பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து. 33

### பதவுரை

**சம்பந்தன் சிவிகை** - திருஞான சம்பந்தப் பெருமானது முத்துச் சிவிகையை,
**பரித்தார்** - தாங்கப்பெற்றவர்,
**உந்தும் சிவிகையினை**-செலுத்தும் வேறு சிவிகையை,
**ஊர்ந்து** - நடாத்தி,
**திரிகுவர்** - (இது பொழுதும் சிறந்த தேவராய்த்) திரிகின்றா ராகலான்,
**அறத்து ஆறு** - தருமத்தின் பயன்,
**இது என** - இது என்று (யாம் ஆகம அளவையால்) அறிவிக்க,
**வேண்டா** - வேண்டுவதில்லை ;
**சிவிகை** - தண்டிகையை,
**பொறுத்தானொடு**-சுமப்பவனோடு.
**ஊர்ந்தானிடையை** - செலுத்துவோனிடத்துக் காட்சியளவையினாலே அறிவிக்கப்படும் என்னும் பொருளமைந்த திருக்குறளை,
**மறுத்தார்** - மறுத்தவராயினார்.

### விளக்கவுரை

'சிவிகை பரித்தார்' இப்பொழுதும் சிறந்த தேவராய் உந்தும் சிவிகையினை ஊர்ந்து திரிகின்றார் ஆதலால், 'அறத்தாறிது' என்னும் திருக்குறளை மறுத்தார் என்க. 'ஆகலான்' என்பது சொல்லெச்சம்.

'பரித்தார் திரிகுவராய் ஊர்ந்து மறுத்தார்' எனப் பொருள் கோடலும் ஒன்று; அப்பொருட்குத் திரிகுவர் என்பது முற்றெச்சம் என்பர். அற்றேல், "வினைமுற்றே வினையெச்சமாகலும்" என்பதனால், இறந்தகால வினைமுற்று அங்ஙனமாதலன்றி, எதிர்கால வினைமுற்று எச்சமாதலின்மையானும், வகர இடைநிலை முக்காலத்தனமையுணர்த்துமெனின், முற்றாக்கிச் சொல்லெச்சம் வருவித்தலே சால்புடைத்தாதலானும் அவ்வுரை உரையின்மை அறிக.

அறவழியாற் செல்லுவதாலடையும் பயனை,'அறத்தாறு' என்றார. ஆறு பயன்; கருவியாகு பெயர். அதனை ஆறு (வழி) என்றது பின்னதாதலின்; 'அறத்தின் பயன் அறத்தைக் கைக்கொண்டொழுகியதன் பின்னர் உண்டாகின்றதாகலின்' என்று கொள்க. 'என' என்னும் செயவெனெச்சத்தால், சொல்லளவையாகிய ஆகமப் பிரமாணமும், 'பொறுத்தானொ டூர்ந்தானிடை' என்றதனால் காட்சியளவையாகிய பிரத்தியக்கப் பிரமாணமும் அறியப்படும்என்பது குறைந்துநின்றதனால் சொல்லெச்சமும் திருக்குறளில் உய்த்துணரக் கிடப்பதுணர்க. இடையென்னுந் திருக்குறளை மறுத்தார் எனற்பாலது இசையெச்சமாய் இடையை மறுத்தாரெனக் குறைந்து நின்றது. மற்று வினைமாற்று, தாங்குந் தொழிலை மாற்றி வேறு சிவிகையைச் செலுத்துந் தொழிலையுடைமையால்.

சம்பந்தன் சிவிகை பரித்தார், இம்மையின்பமெய்திய பின்னர், அம்மையிற்சிறந்த தேவராகி, இன்னவிடத்திற் செல்க என்ற துணையானே ஆண்டுச் சேறற்குரிய தேவயானமூர்வர் என்பார், தாங்கும் சிவிகை என்னாது 'உந்துஞ்சிவிகை' என்றார். அற்றேல், இந்திரன்

சிவிகை அகத்திய மாமுனிவர் முதலிய முனிவரெழுவரால் ஏந்தப்படுவ தென்பதென்னையெனின், இந்திரனென்னும் பெருமை அவனுக்குள தாக அவரால் ஓர் கால் ஏந்தப்படுவதன்றி எப்பொழுதும் ஏந்தப்படுவது அதற்கியல்பு அன்றென்க. இதனை,

"மாதவ ரெழுவர் தாங்க மாமணிச் சிவிகை மீது
போதரி னவனே வானோர் புரந்தரன்''

என வரும் திருவிளையாடல், இந்திரன் பழிதீர்த்த படலச் செய்யுளா னறிக.

திரிகின்றார் என்னாது 'திரிகுவர்' என்றார், விழாவில் இப்பொழுது பரித்தாரும் விண்ணுலகடைவர் என்பதறிவித்தற்கு. இனித் 'திரிகுவர்' என்பதற்கு, 'சின்னாள் நுகர்ந்த பின் அத்தேவவின்பத்தினும் வெறுப் புறுவர்' எனப் பொருள் கொண்டு. வெறுப்புறுவரேல், மேலெங்ஙன மெய்துவரென்னும் கடாவைத் தோற்றுவித்து, சிவிகை பரித்தலாகிய வழிபாடுடையார், சிவலோகமெய்துவது திண்ணமாகலின், இம்மை, மறுமை, வீடென்னும் மூன்றனுள் எய்தாது எஞ்சி நிற்கும் அவ்வீட்டை எய்தாநிற்பர் என்றிசைத்தலும் ஒன்று.

அறமுடையார் சிவிகையூர்தலும், அஃதிலார் அதனைப் பரித்தலும் விழுமிய வேத நூற்றுணிபும் அனுபவமுமாயினும், சம்பந்தனது சிவிகையைப் பரித்தல், அறமில் வழிக் கிட்டாதாகலின், அஃதுடைமை யிற் பரித்தார், அம்முப்பயனும் எய்துதலின் அங்கியதியைக் கடந்தவ ராயினார் என்பார், 'மறுத்தார்' என்றார். உவகைமேலீட்டால் திருநாவுக் கரசரும் ஓர்கால் பொறுத்த அச்சிவிகை பொறுக்கப் பெறுவது எவர்க் கும் எளிதன்று என்பது கருத்து.

சிறந்த தேவராதலை,

'மேனாட் டமரர் தொழவிருப் பாரும் வினைப்பயன்க
டானாட் டருகர கிற்றளர் வாருந் தமிழ்நர்தங்கள்
கோனாட் டருகர் குழாம்வென்ற கொச்சையர் கோன்கமலப்
பூநாட் டடிபணிக் தாருமல் லாத புலையருமே'

எனவும்,

சிவபதமெய்துவது திண்ணமாதலை,

'பெறுவது நிச்சய மஞ்சனெஞ் சேபிர மாபுரத்து
மறுவறு பொற்கழன் ஞானசம் பந்தனை வாழ்த்துதலான்
மிறையறு வான்மறி யுண்டடங் தோள்வல் விடையெடுத்த
பொறியுறு பொற்கொடி யெம்பெரு மானமர் பொன்னுலகே.'

எனவும் வரும் திருஞான சம்பந்தர் திருவந்தாதிச் செய்யுள்களானுணர்க.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

ஊர்ந்து வருமிள வேறுடை யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்விட் டுறுமுனக் கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ் செல்வமுமே. 34

#### பதவுரை

**நாவரசே** - திருநாவுக்கரசப் பெருந் தகையே!
**நல்குரவு** - வறுமையை,
**முனம் சேர்ந்து** - முன்னர்ச்சார்ந்து,
**மருவினர்க்கே** -பின்னர்ச் செல்வம் பெற்றவர்க்கே,
**செல்வமும்** - அச்செல்வமும்,
**சிறந்து ஓங்குறும்**- அருமையுடைத் தாய் விளங்கும் (அதுபோல),
**இள ஏறு**-இளமை வாய்ந்த காளை யூர்தியை,
**ஊர்ந்து வரும்** - செலுத்தி வரும்,
**உடையான்தன்**- இறைவருடைய,
**உளத்து அருளால்**-திருவுளக்குறிப் போடு கூடிய திருவருளானே,
**சமண் சார்ந்து** - சமணசமயத்தை அடைந்து,
**(அருளால்) விட்டு** - அத்திருவரு ளானே அதனை நீக்கி,
**உறும் உனக்கே**-சைவ சமயத்தைச் சார்ந்த உமக்கே,
**வரும் சைவ நலம்** - (சின்னாள் நீங் கிப் பின்னர்ச்) சேர்ந்த சைவத் தின் சிறப்பு,
**கூர்ந்து மிளிர்தரும்**-சிறந்து விளங் கும்.

#### விளக்கவுரை

இளவேறுடையான் - சிவபெருமான். அமண் அடைவித்தமை அருளாமை போலக் காணினும், உய்த்துணரின் அருளேயாமென்பார், 'அருளாற் சார்ந்து சமண்விட்டு' என்றார். சமண் வீட்டுறும் எனவும் பாடம். உளத்தருள்-உளத்தோடு கூடிய அருள். ஈண்டு உளமென்பது (அவ்வமணை அழிப்பிக்கும்) உளக்குறிப்பின் மேற்று. அருளாற்சார்ந்து அருளால்விட்டு எனத் தனித்தனி கூட்டுக. சமண் என்பது தாப்பிசை யாய் நின்றது. சமண் - சமணர் குழாம். 'உனக்கே' என்புழி ஏகாரம் தேற்றம். மிளிர்தரும் - செய்யும் என்னும் முற்று; (மிளிர்தா - பகுதி) வருமிளவேறு என்புழியும், வருஞ்சைவ நலம் என்புழியுமுள்ள 'வரும்' இரண்டும்;

"தருசொல் வருசொல் லாயிரு கிளவியும்
தன்மை முன்னிலை யாயீ ரிடத்த"

என்னுஞ் சூத்திரத்திற்கு மாறாகப் படர்க்கையிடத்திற்கு வந்தமையின் இடவழுவமைதி.

'நல்குரவு முன்னஞ் சேர்ந்து மருவினவர்க்கே சிறந்தோங்குறும் செல் வமும்' என்பது எடுத்துக்காட்டுவமை. நல்குரவு - தொழிற்பெயர்; நல்கூர் - பகுதி. மருவினர்க்கே என்புழி ஏகாரம் தேற்றம், ஓங்குறும்-

முற்று. ஈண்டு 'நலம்' என்றது சார்ந்தாரை அவ்விரு பேற்றிற்கும் உரியராகப் புரக்கும் தன்மையை. 'முனம்' என்பது காலத்தின் பழமை சுட்டாது பின் பெறும் செல்வத்திற்கு முற்படும் காலத்தைச் சுட்டி நின்றது. 'சிறந்தோங்குறுமதுபோலக் கூர்ந்து மிளிர்தரும்' என இயையும்.

நல்குரவு சார்தற்கும் செல்வமெய்தற்கும் வினை ஏதுவாதல்,

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று."

என்னும் திருக்குறளால் உணர்க. வறுமை மல்கிச் செல்வமெய்தியார் அதனருமையறிந்து போற்றலின், அவர்மாட்டே சிறத்தல் போன்று தேவரீர்மாட்டே அச்சைவத்தின் பொலிவு அரிது சிறக்கும் என்றலும் ஒன்று; அப்பொருட்கு 'உனக்கு' என்புழியும், 'மருவினர்க்கு' என்புழியு முள்ள நான்கனுருபு இரண்டையும் ஏழனுருபாக்குக.

இனி, 'கூர்ந்து மிளிர்தரும் - சிறந்து விளங்குகின்ற, நாவரசே - வாகீசப் பெருந்தகையே! சைவநலம் உனக்கே வரும் - சைவத்தின் சிறப்பு உனக்கே வராகிற்கும்' என்றலும் ஒன்று.

சைவநலங்கூர்ந்து மிளிர்ந்தமையை,

"பொய்வாய் மைபெருக் கியபுன் சமயப்
பொறையில் சமணீ சர்புறத் துறையா
மல்வாழ் குழியின் கண்விழுந் தெழுமா
றறியா துமடங் கியவம் புரிவேன்
மைவா சநறுங் குழன்மா மலையாண்
மணவா ளன்மலர்க் கழல்வந் தடையு
மிவ்வாழ் வுபெறத் தருசூ லையினுக்
கெதிர்செய் குறையென் கொலெனத் தொழுதார்."

எனவும்,

"இத்தன் மைநிகழ்ந் துழிநா வின்மொழிக்
கிறைபா கியவன் பருமிந் நெடுநாட்
சித்தந் திகழ்தீ வினையே னடையுந்
திருவோ விதுவென் றுதெருண் டறியா
வத்தன் மையனா யவிரா வணனுக்
கருளுங் கருணைத் திறமா னவதன்
மெய்த்தன் மையறிந் துதுதிப் பதுவே
மேல்கொண் டுவணங் கினர்மெய் யுறவே"

எனவும் வரும் பெரிய புராணத்தில் திருநாவுக்கரசு நாயனார் புராணச் செய்யுள்களாலுணர்க.

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

செல்வநல் லொற்றி யூரன்
 செய்யசங் கிலியா லார்த்து
மல்லலம் பரவை தன்கண்
 மாழ்குற வமிழ்த்து மேனு
மல்லுநன் பகலு நீங்கா
 தவன்மகி ழடியி லெய்தி
நல்லவின் படைந்தி ருப்ப
 னம்பியா ரூரன் றானே. 35

பதவுரை

**செல்வம் நல் ஒற்றியூரன்** - கல்விச் செல்வமும் பொருட்செல்வமு முடைய சிறந்த திருவொற்றி யூரில் எழுந்தருளிய சிவபெருமான்,
**செய்ய சங்கிலியால் ஆர்த்து**-பெருமையுற்ற சங்கிலி நாச்சியாராற் பிணிப்புடையராக்கி,
**மல்லல்** - பண்பு மிக்க,
**அம் பரவை தன்கண்** - அழகையுடைய பரவை நாச்சியாரிடத்தே,
**மாழ்கு உற** - ஆர்வ மீதூரக்கண்டு,
**அமிழ்த்துமேனும்** - அவர்பால் பொருத்துவித்தாராயினும்,
**நம்பியாரூரன்** - சுந்தரமூர்த்தி சுவாமிகள்,
**மகிழ் அவன் அடியில்** - மகிழ்ச்சியைப் பயக்கும் அக்கடவுளின் இரண்டு திருவடிகளில்,
**அல்லும் நண்பகலும்** - இரவும் பகலும்,
**நீங்காது எய்தி** - இடை விடாது ஒடுங்கி,
**நல்ல இன்பு** - சிறந்த இன்பத்தை,
**அடைந்திருப்பன்** - நுகர்ந்து திகழ்வார்.

விளக்கவுரை

"நாவீற் றிருந்த புலமா மகளோடு நன்பொற், பூவீற்றிருந்த திருமா மகள் புல்லி நாளும்" என ஆன்றோர் கூறினமையால், செல்வம் என்பதற்குக் கல்விச் செல்வம் பொருட்செல்வம் எனப் பொருளுரைக் கப்பட்டது. ஒற்றியூரன் - படம் பக்க நாதன். சங்கிலி நாச்சியாரை மணம் பேச விடுக்கப்பட்டாரோடு விடுத்தானும் மடிந்தானாகலின், அவர் மற்றை மாதர் போல மதிக்கற்பாலரல்லரென்பார், 'செய்ய சங்கிலி' என்றார். ஆர்த்து - பிணித்து. சங்கிலியார்பால் நெடு நாளுறுவித்திலராதலின், 'ஆர்த்து' என்றார்.

மல்லல் அம் பரவை - பண்பு மிக்க அழகையுடைய பரவை நாச்சியார். அம் - அழகு. மல்லல் அழகுக்கு அடையென்க; 'மல்லல் வளனே' (தொல் - உரி) என்றாராகலின். மல்லல் - வளம்; ஈண்டுப் பண்பு மிகுதி மேற்று.

அமரருட்சிறந்தார்க்கும் அணுகுதற்கும் அரியராகி, அருளா னெய்திய அற்புதக் காந்தியுடையரென்பார், 'மல்லலம் பரவை' என்றார். இனி, மல்லலம் பரவை என்பதற்கு, அம் - சாரியையாக்கி, 'எல்லாச் செல்வங்களையுமுடைய பரவை' எனினுமாம். ஆரூரருக்கு ஆர்வமேலீடு கண்டு இவர் மாட்டு நெடுநாள் எய்துவித்தனரென்பார், 'மாழ்குற அமிழ்த்து மேனும்' என்றார். மாழ்குற அமிழ்த்தல்-காரியத் தைக் காரியமாகவுபசரித்தல். மாழ்குறல் - மயங்குறல். காரியம், அதன்கண் ஆர்வம். அவ்விருவரையும் தாம் அவாவிய வாசனையகலத் திரோபவித்து, இங்ஙனம் சேர்த்தினாரேனும், அவ்வின்பத்தைச் சிற் றின்பமாக நுகராது, அக்கடவுளின் திருவடிகள் என்னும் ஞானசத்தி கிரியா சத்திகளின் வியாபகத்தில் தம்முடைய ஞானசத்தி கிரியா சத்திகள் வியாப்பியமாக இரவும் பகலும் இடையீடின்றித் தாடலைபோ லடங்கிப் பேரின்பமாக நுகர்ந்தனர் என்பார், 'அல்லும் நண்பகலும் நீங்காதவன் மகிழடியிலெய்தி யின்பமடைந்து' என்றார். பகல் பலவு மெய்தற்குச் சாதனமாகலின், 'நண்பகல்' எனப்பட்டது. மகிழடி - இரண்டனுருபும் பயனுமுடன் தொக்கதொகை. ஏனையின்ப முற்றும் அவற்றின் மிக்கவற்றை நோக்கத் துன்பமாய் முடிதலின் அவ்வின்ப மனைத்தும் ஒருங்கு திரளினும் அணுத்துணையும் ஒவ்வா இச் சிவானுபவவின்பமே இன்பமாவதென்பார், 'நல்லவின்பு' எனச் சிறப் பித்தார். இது பொழுதும் ஆலாலசுந்தரராய் இவ்வியல்பின் இருக் கின்றனரென்பார், 'இருப்பன்' என்றார். இருப்பன் - காலமயக்கம்; 'ஆடுவார் அடி சூடுவார்' எனபுழிப்போல. ஒற்றியூரர் சங்கிலியாலார்த்துப் பரவையிலமுழ்த்தினும், ஆரூரர் அவரையே நம்பி அவரடியினெய்தி இன்புற்றிருப்பரென்பது மற்றொரு பொருள். இதுவும் வஞ்சப் புகழ்ச்சி யாகவும் நிற்பதுணர்க. தான், ஏ - அசைகள்.

நாச்சிமார் இருவரையும் சிறப்பித்தமையை,

> 'தையலார்சங் கிலியாரதந் திறத்துப் பேசத் தகாவார்த்தை
> யுய்ய வேண்டு நினைவுடையா ருரையார்'

எனவும்,

> 'அணங்கே யாகு மிவள்செய்கை
> யறிந்தோர் பேச வஞ்சுவர்'

எனவும்,

> 'நங்கை பரவையார்,
> சென்றும்பர் தரத்தார்க்கும் சேர்வரியார்'

எனவும்,

> "பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகு
> மாசை மேலுமொ ராசை யளிப்பதோர்
> தேசின் மன்னியென் சிந்தை மயக்கிய
> வீச னரரு ளெங்நெறிச் சென்றதே."

எனவும் வரும் பெரிய புராணச் செய்யுள்களானுணர்க.

அடியிலெய்தி இன்புற்றமையை,

"தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனும்
மின்னிடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்றார்"

எனவும் (பெரிய புராணம் தடுத்தாட்கொண்ட புராணம் - 182),

"இந்நிலையிற் பேரின்ப மினிதமர்வா ரிறையுறையு
மன்னுபுக ழொற்றியூ ரதனின்மகிழ் சிறப்பினாற்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகலி"

எனவும் (கலிக்கம்ப நாயனார் புராணம் - 296) வருவனவற்றானுணர்க.

சிவானுபவ இன்பமே எவற்றினும் சிறந்தமையை,

"நரர்கடமி னரசாவர் தமினினிய திவவியாழ்
நண்ணுநர கந்தருவர்தா
நவிலுமவர தமினமர கந்திருவ ரவர்தம்மி
னாடரிய தேவ ரவரிற்
சுரரதிப னவனினுயர் சுரர்குரவ னவனினயன்
சொன்முறையி னூறு மடிமேற்
றுன்னுசுக மொருதிவலை யளவுமின் றாகமிகு
சுகவேலை" —இட்டலிங்க அபிடேகமாலை—10

என்பதனாலறிக.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

தானே முத்தி தருகுவன் சிவனவ
னடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே. 36

#### பதவுரை

**சிவன்** - சிவபெருமான்,
**அவன் அடியன் வாதவூரனை** - தனது அடியவராகிய திருவாத வூரடிகளை,
**கடிவு இல்** - நீக்கமில்லாத,
**மனத்தால்** - உள்ளத்தால்,
**கட்ட வல்லார்க்கு** - நேசித்துப் பிணிக்க வல்லார்க்கு,
**தானே** - தாமே (முற்பட்டு),
**முத்தி தருகுவன்** - மேலான முத்தியைத் தந்தருளுவார்.

#### விளக்கவுரை

'வல்லார்க்கே தருகுவன்' என இயையும். 'தானே முத்தி தருகுவன் சிவன்' என்பது எவர்க்கும் முத்தியளிக்க வல்ல முதற்கடவுள்

சிவபெருமானொருவரே என்னும் வேத நூற்றுணிபையுஞ்சுட்டி இரட்டுற மொழிதலாய் நின்றது. 'தானே' என்னும் படர்க்கைப் பெயர் சிவபெருமானையுணர்த்திற்று. அதிலுள்ள ஏகாரம் தேற்றம்.

இவ்வாதவூரடிகள் உலகை ஈடேற்றுவான் தோன்றிய அருட்குரவராதலின், மற்றச் சிறு தேவரைத் தெய்வமெனப் பேணுவாரைக் காண்டற்கும் அஞ்சுதலுடையராய்ச் சிவபெருமானை முதற்கடவுளென எவருந் தெளியுமாறு தெருட்டி, ஆனந்தமேலீட்டான் அக்கடவுளை அன்புடன் நோக்கி நிற்றலும் அழுதலும் தொழுதலும் முதலிய அமைந்தவ ரென்பார், 'அவனடியன் வாதவூரன்' என்றார். இவ்வுண்மையுணர்ந்து மனவொற்றுமையுற்று, இடையறவின்றி இவரை வழிபடல் சிவ புண்ணிய முதிர்வினர்க்கே சித்திக்குமென்பார், 'வாதவூரனைக் கடிவில் மனத்தாற் கட்டவல்லார்க்கு' என்றார். 'கடிவு இல் மனம்' என்புழி, இல் - எதிர்மறைப் பெயரெச்சம்.

பாலர், பித்தர் பசாசர் போன்று தம்மறிவிழந்து இறைவர் பணியினின்றாராகலின், இவர் செயலெல்லாம் இறைவர் செயலாக முடிதலின், இவரை வழிபடுவோர்க்கு அவ்விறைவர் தாமே அவற்றை யேற்று முத்தியளிப்பர் என்பார், 'தானே முத்தி தருகுவல்' என்றார். 'தானே' என்புழி ஏகாரம் தேற்றம்; தெளிந்தமையான். நுகர்வு நாடி வீழைதலின்மையாற் பாலரையும், நன்மை தீமை சீலம் அகன்றிடுதலாற் பித்தரையும், செய்யும் செயல் சிவன் செயலாய் முடிதலாற் பசாசரையும் உவமித்தவாறு. செயலற ஒழுகற்கும், ஒருகாற் செய்தொருகாலொழிதற்கும், செயலிழப்பினின்று செய்தற்கும் மூவரையும் முறையே ஒப்பித்ததென்னலும் ஒன்று.

'வல்லார்க்கே' என்புழி ஏகாரம் பிரிநிலை; வல்லார்க்கேயல்லது பிறர்க்குத் தருவரல்லர் எனக் கொள்ளுதலான்; அசையுமாம்.

சிவபெருமானே முத்தியளிக்க வல்லர் என்பதனை,

"அன்றியு மொன்று கேண்மோ வம்புய னாதி யாகி
நின்றவர் தம்மை யெல்லா நீக்கியச் சிவனென் றுள்ள
வொன்றொரு முதல்வன் றானே யுய்த்திடு முத்தி வேண்டி
னென்றுமஃ 'தியம்பிற் றென்னின் யாவரே தேவ ராவார்.

"பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும்
விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைது மென்ற
லுருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற் பின்னுமோர் சான்று முண்டோ."

என வரும் கந்த புராணம் உபதேசப் படலச் செய்யுள்களானுணர்க.

மூன்றடியான் முடிவது அகவற்பாவுக்குச் சிற்றெல்லையாகும் என்பதனையுணர்த்துவான் இங்ஙனம் கூறினார். அகவற்கு மூன்றடிச் சிறுமை என்பதனை,

"வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்
கெள்ளப் படாக்கலிக் கீரிரண் டாகு மிழிபு."

என்பதனாலறிக.

## திருஞான சம்பந்தர்

### நேரிசை வெண்பா

**வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி**
**நல்லா தரவின்ப ஞானங்க—ளெல்லாந்**
**திருஞான சம்பந்தன் சேவடியே யென்னு**
**மொருஞான சம்பந்த முற்று.** **37**

**பதவுரை**

**வண்மை** - பொருளும்,
**நலம்** - (அப்பொருளான் எய்தும்) புண்ணியமும்,
**இன்பம்** - (அப்புண்ணியப் பயனாகிய இம்மை மறுமை) இன்பங்களும்,
**கல்வி** - கல்வியும்,
**நல் ஆதரவு** - (அக்கல்வியால் எய்தும்) நல்லன்பும்,
**ஞானங்கள் எல்லாம்** - (அவ்வன்பின் பயனாகிய) ஞானமும் ஆகிய யாவும்,
**திருஞான சம்பந்தன்** - திருஞான சம்பந்தப் பெருமானது,
**சேவடியே என்னும்** - சிவந்த திருவடிகளே எனக் கருதும்,
**ஒரு ஞான சம்பந்தம்** - ஒரு ஞான சம்பந்தத்தை,
**உற்று** - அடைந்து,
**வல்லார்** - வல்லுநரல்லாரும்,
**பிறப்பு அறுப்பர்** - பிறப்பை யொழிப்பார்.

**விளக்கவுரை**

'ஞானங்களெல்லாம் சேவடியே என்னும் சம்பந்தமுற்று வல்லார் பிறப்பறுப்பர்' என முடிக்க. 'வல்லார்' என்பது இரட்டுறமொழிதலாய் எதிர்மறையினும் உடன்பாட்டினும் வந்த வினைக்குறிப்புப் பெயராய் வல்லுநரல்லாரையும் வல்லுநரையும் உணர்த்திற்று. வல்லாரும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது.

வண்மை முதலியன அவரவர் பரிபாகத்திற்கேற்ப இம்முறை பிறழ வருதலும் உளவேனும், இதுவே நியதியாகலின், இங்ஙனம் இசைத்ததென்பது. அற்றேல், இங்ஙனம் முறைப்படுத்தோதாததென்னையெனின், இக்காரண காரிய முறையுணராது எல்லாந் திருவடிகளேயெனக் கொள்ளும் சிந்தனையுடையாரும் பிறந்துழலார் என்பதுணர்த்துதற்கென்க.

அல்லதூஉம், காஞ்சியிற் சிவபெருமானருளியபடி செய்தற்கரிய தவமியற்றியிருந்த திருமாலுக்கும் சிவ சாரூபமளித்தமையின் இப்பெருந்தகையின் இணையடிகள் கிரியாசத்தி ஞான சத்தியுருவாய்க் கிளர்ந்து செல்வமுதலிய இன்பவழிகளையும் கல்வி முதலாகிய வீடடைய

வழிகளையும் நல்குவனவாமென்னும் இத்தகைய ஒப்பிகந்த ஞானத்தை யுற்று வல்லுநரும் பிறப்பையறுப்பர் என்னலும் ஒன்று. 'பிறப்பறுப் பர்' என்றமையின் மேற்பேறெய்துவரென்பது சொல்லாமலே யமையும்.

வண்மை - வளத்தின் தன்மை. எவர்க்கும் நன்மை பயத்தலின் அறத்தை 'நலம்' என்றும், அன்பை 'நல்லாதரவு' என்றும் கூறினார். உம்மைத் தொகையாக ஞானங்களெனப் பன்மையீறாயிற்றென்க. இதனை 'உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே' என்னும் சூத்திரத்தில் 'பலரீறே' என்ற தேற்றேகாரத்தால், அஃறிணையிலும் கொள்ளப்படும். அன்றி ஞானம், பரஞானம், அபரஞானம் என இரு தரப்படுதலின் ஞானங்கள் என்றாரெனினும் அமையும். இதனை,

"சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞான
முவமையிலாக் கலைஞான் முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

என்பதனாலறிக.

'எல்லாம் சேவடியே' என்பது காரியத்தைக் காரணமாக உபசரித்தல். அதிலுள்ள ஏகாரம் தேற்றம்; பிரிநிலையுமாம். முத்திக்கு முடிந்த சாதனமென்று உணர்ந்துகோடற்கு ஞானத்தை இறுதியில் வைத்தார். 'ஒரு ஞானம்' என்பது ஒப்பிகந்த ஞானத்தையும் வைராக்கிய ஞானத்தையும் சுட்டி இரட்டுற மொழிதலாய் நின்றது; தமிழடையுமாம்.

அறமும் இன்பமும் பொருட்பேறு ஆதலை,

'அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.'

என்பதனாலும்,

ஆதரவும் ஞானமும் கல்விப்பேறு ஆதலை,

"கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்ற மும்விடார் துரிசறார் மூடர்கள்
மற்றும் பலதிசை காணார் மதியில்லோர்
கற்றன்பி னிற்போர் கணக்கறிந் தார்களே."

என்னும் திருமந்திரத்தாலறிக.

ஞானமே முத்திக்கு ஏது ஆதலை,

"உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரியைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே"

என வரும் பிரபுலிங்க லீலை, சித்தராமதேவர் கதிச் செய்யுளாலுணர்க. திருமால் சிவசாரூபம் பெற்றதைக் காஞ்சிப் புராணம் திருமேற்றளிப் படலத்திற்காண்க.

பிறப்பறுத்தலை,

"நிலைத்தொழில் சேரற மானப யிற்றுவர்மா,
சதுரால் வினைசெற் றதன்மே லணுகார் பிறவிக்கடலே"

என்பதனாலறிக.

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

உற்றா னலன்றவந் தீயினின் றானல னூண்புனலா
வற்றா னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்றா னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்
பெற்றா னொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே. 38

பதவுரை

**ஒரு நம்பி அப்பூதி என்னும் பெருந்தகை** - ஒரு நம்பி அப்பூதி யென்று நம்பியாரூரரால் உயர்த்தித் துதிக்கப்பட்ட மிக்க மேன்மையுடையவர்,
**தவம் உற்றான் அலன்** - சரியை கிரியை யோகங்களாகிய தவத்தை மேற்கொண்டவரும் அல்லர்;
**தீயில் நின்றான் அலன்** - ஐந்து நெருப்பு நடுவில் நின்று கடுந் தவம் புரிந்தவருமல்லர்;
**புனல் ஊண் ஆ** - நீரை உணவாகக் கொண்டு,
**நுகர்வு அற்றானும் அலன்** - மற்றை யுணவுகளை நீக்கினவருமல்லர்;
**திருநாவுக்கரசு எனும் ஓர் சொல் தான்** - திருநாவுக்கரசு என்னும் ஒரு சொல்லையே,
**எழுதியும்** - (யாண்டும்) தீட்டியும்,
**கூறியுமே** - (அதனை உயிர்க்குறுதி பயக்கும் மந்திரமாகச்) சொல்லியுமே,
**என்றும்** - எக்காலத்திலும்,
**துன்பு இல் பதம்** - துன்பமென்பது எட்டுணையும் எய்துதலில்லாத முத்தியை,
**பெற்றான்** - எய்தினார்.

விளக்கவுரை

ஒரு நம்பி அப்பூதி என்று சுந்தரமூர்த்தி நாயனார் துதித்தமையை, "ஒரு நம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்" என வரும் திருத்தொண்டத் தொகையானுணர்க. 'தவம்' என்றது சரியையாதிகளை. இதனை,

"பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
மிசைத்து வருவினையி னின்ப—மிசைத்த
விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
மருவுவனா ஞானத்தை வந்து."

என வரும் செய்யுளில் 'தவத்தான்' என்புழிக் காண்க. (சிவஞான போதம்-சூத். 8). மனம் பொறிவழி போகாது நிற்றற்பொருட்டு மேற் கொள்ளும் வன்மை மென்மைத் தவங்களை வேறு விதந்தலின், இச் செய்யுளில் தவமென்றது சரியை கிரியை யோகங்களையென்க. 'புனல் ஆணாக ஏனை நுகர்வு அற்றானும் அலன்' என உம்மை பிரித்துக் கூட்டுக. புனலா என்புழி ஆக என்பது ஈறு குறைந்தது. நுகர்வும் என் புழியுள்ள உம்மை இறந்தது தழீஇயது; தவமுற்றானலன் என்பதைத் தழுவுகின்றமையால். திருநாவுக்கரசென்னும் திருமந்திரம், ஏனை மந்திரங்கள் போலாது, இம்மை மறுமை இன்பங்களில் உவர்ப்புறுவித்து, பிறவியிற் செலுத்தாது சிவபதத்து உய்ப்பதெனத் தேர்ந்து, அதனையே யாண்டுந் தீட்டி ஓதி வந்தமையின், அதுவே ஞானநெறியாய்ச் சிவபதம் நல்கிற் றென்பார், 'திருநாவுக்கரசெனுமோர், சொற்றானெழுதியும் கூறியுமே' என்றார். எழுதியும் கூறியும் என்புழியுள்ள உம்மை எண்ணின் கணின்ற சிறப்பு. 'சொற்றான்' என்புழித் 'தான்' கட்டுரைக்கண் வந்த அசை 'கூறியுமே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம்.

'இப்பேறு இன்பமெலாம் திரண்ட சிவானந்தப் பேறே' என்பார், 'என்றும் துன்பில் பதம்' என்றார். 'என்றும் எழுதியும் கூறியுமே துன்பில் பதம் பெற்றான்' எனினும் அமையும். பெருந்தகை-அன்மொழி: குணிப்பெர் எனினும் அமையும்.

திருநாவுக்கரசென்னும் திருமந்திரம் சிவபதத்துய்ப்பதென்பதனை,

"நிலைமா டென்றிடர் பரியா ரிந்திர
னேயொத் துறுகுறை வற்றாலு
நிலையா திச்செல்வ மெனவே கருதுவர்
மேழ்ச்சன் மக்கட விடையிற்புக்
கலையார் சென்றர னெறியா குங்கரை
யண்ணப் பெறுவர்கள் வண்ணத்தின்
நிலைமா டந்திகழ் புகழா மூருறை
திருநா வுக்கர சென்போரே."

என்பதனாலறிக. (திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை - 4) இச்சரியையே ஞான நெறியாய்ச் சிவபதம் நல்கியதை,

'இவ்வகை யரசி னாம மேத்தியெப் பொருளு நாளு
மவ்வருந் தவர்பொற் றாளே யெனவுணர்ந் தடைவார் செல்லும்
செவ்விய நெறிய தாகத் திருத்தில்லை மன்று ளாடு
நவ்வியங் கண்ணாள் பங்கர் நற்கழ னண்ணி னாரே.''

என வரும் பெரிய புராணத்தில் ஆப்பூதியடிகள் புராணச் செய்யுளான் அறிக. 'துன்பில் பதம்' என்பதனை,

"இரும்பைக்காந் தம்வலித்தாற் போலியைந்தங் குயிரை
யெரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
யரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
யறுத்தமல னப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னிளைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேனித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே"

என வரும் சிவஞான சித்தியார் சுபக்கம் 11-ஆம் சூத்திரம் 12-ஆம் செய்யுளானுணர்க.

## சுந்தரர்

### எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பெருமிழலைக் குறும்பரெனும் பரம யோகி
பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றா னென்றால்
விளங்கிழையா ரிருவரொடு முயங்க லாமோ
உரைமதிநின் றனைவெறுப்ப தென்கொ னின்னை
யுடையானுக் கடுத்தசெய லுனக்கு மாயிற்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
தொகைசெய்தோ யறமுதனால் வகைசெய் தோயே! 39

பதவுரை

**சுரர் முனிவர்** - தேவர்களும் முனிவர்களும்,
**பரவலுறும்** - துதிக்கின்ற,
**பெரு சீர் தொண்டத்தொகை**-மிக்க கீர்த்தி படைத்த திருத் தொண்டத் தொகையை,
**செய்தோய்** - அருளிச் செய்தவரே!
**அறம் முதல் நால்வகை** - அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள் நான்கையும்,
**செய்தோய்** - வகுத்தருளியவரே!
**பெருமிழலைக்குறும்பர் எனும் பரம யோகி** - பெருமிழலைப் பதியிலிருந்த குறும்பநாயனாரென்னும் பரமயோகியாரானவர்,
**பெரிது உவந்து** - கழிபேருவகையுற்று,
**உன் திருவடித் தாமரையை போற்றி**-தேவரீருடைய திருவடிக் கமலங்களைத் துதித்து,
**விரை மலர் தூய்** - மணமிக்க மலர்களானருச்சித்து,
**வந்தனை செய்கின்றான் என்றால்**- வழிபடுகின்றாரென அறிஞர் விதப்பராயின்,
**விளங்கு இழையார் இருவரொடு** - திகழும் அணிகளைப் புனைந்த தேவிமார் இருவரோடு,
**முயங்கல் ஆமோ** - சேர்ந்து வாழ்வது தகுதியோ? (தகுதியன்றாயினும்)
**நின்னை உடையானுக்கு** - உம்மை அடிமையாகவுடைய உமைகேள்வனுக்கு (சிவபெருமானுக்கு)
**அடுத்த செயல்** - உரிய செய்கை,
**உனக்கும் ஆயின்** - உமக்கும் பொருந்துமானால், (அஃது உணர்ந்து வழிபடாது)
**நின்தனை** - உம்மை,
**வெறுப்பது என் உரைமதி** - வெறுப்பது என்னை ? உரைப்பீராக. (மதி - முன்னிலையசை)

### விளக்கவுரை

பெருமிழலைக் குறும்பர் - பெருமிழலை என்னும் ஊரில் இருந்த குறும்பநாயனார். இந்நாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரின் பெருமைகளைக் குறித்துச் சிந்திக்க, அணிமாவாதி எண்வகைச் சித்திகளும் வாய்த்தமை கண்டு மேலும் மேலும் வழிபட்டனர் என்பார், 'பெரிதுவந்துன் திருவடித்தாமரையைப் போற்றி, விரை மலர் தூய் வந்தனை செய்கின்றான்' என்றார். இதனை,

"நாளு நம்பி யாரூரர் நாம நவின்ற நலத்தாலே
யாளும் படியா வணிமாதி சித்தி யான வணைந்தற்பின்
மூளுங் காத லுடன்பெருக முதல்வர் நாமத் தஞ்செழுத்துங்
கேளும் பொருளு முணர்வுமாம் பரிசு வாய்ப்பக் கெழுமினார்"

என வரும் பெரிய புராணத்தில், பெருமிழலைக் குறும்ப நாயனார் புராணச் செய்புளானுணர்க. இவர் குருபத்தி முதிர்ச்சியாலே தாம் முக்காலவுணர்ச்சியுடையராகி, சுந்தரமூர்த்தி நாயனார் வடகயிலையை அடைவதை முன்னுணர்ந்து, தாம் அவரைப் பிரிதலாற்றாமையால் முதனாளே யோக முயற்சியால் பிரமரந்திர வழியால் உடலினின்றும் பிரிந்து திருக் கயிலாயத்தையடைந்தனரென்பார், 'பெருமிழலைக் குறும்பரெனும் பரமயோகி' என்றார். இதனை,

"மண்ணிற் றிகழுந் திருநாவ லூரில் வந்த வன்றொண்டர்
நண்ணற் கரிய திருக்கயிலை நாளை யெய்த நான்பிரிந்து
கண்ணிற் கரிய மணிகழிய வாழ்வார் போல வாழேனென்
றெண்ணிச் சிவன்றா ளின்றேசென் றடைவன்யோகத் தாலென்பார்"

எனவும்,

"நாலு கரணங் களுமொன்றாய் நல்ல வறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழி கருத்துச் செலுத்தக் கபாலநடு
வேல வேமுன் பயின்றநெறி யெடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாத மடைவார் கயிலை முன்னடைந்தார்."

எனவும் வரும் பெரிய புராணத்தில் பெருமிழலைக் குறும்பநாயனார் புராணச் செய்யுள்களானுணர்க.

என்றால் - என்று அறிஞர் விதப்பாராயின், அறிஞர் என்பது சொல்லெச்சம். இத்தகைய பரமயோகியர் வழிபடத் தாம்; பரமபோகி போன்றிருப்பது இயல்பன்றென்பார், "விளங்கிழையாரிருவரொடு முயங்கலாமோ?" என்றார்.

விளங்கிழையார் இருவர் என்றது, பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார் இருவரை. முயங்கலாமோ என்புழி ஓகாரம் எதிர்மறை. 'முயங்குதலை மறுத்தமையான், தேவிமாரிருவரும் கிரியா சத்தியும் ஞான சத்தியுமாய்த் திகழ, அக்கடவுள் போன்று, ஆன்மாக்களுக்கு

இன்பவீடுகளை அளிப்பவராயினார் என்பார், 'உடையானுக்கடுத்த செயலுனக்குமாயின்' என்றார். உடையான் என்றது சிவபெருமானை. குறும்பநாயனார் இவ்வுண்மை குணித்துப் பரமயோகியெனத் தேர்ந்து பரவித் தாமும் அங்ஙனமாக், அதனை அறிந்து வைத்தும், யோகியென மதித்துப் புகலாநிற்றல், எவ்வளவு பெரியதோர் அறியாமையென்பார். 'வெறுப்பதென்கொல்' என்றார். கொல்- அசைநிலை. வெறுப்பவர்,

'ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையும்
தான்புக் கழுந்து மளறு.'

என்பதற்கிலக்காயுள்ளார். ஆகலின், அவர்க்கிசைத்தல் பிறர்க்கிய லாது; அவரும் தெளிவெய்துவான் எல்லாம் வல்ல தேவரீரே உரைப்பீ ராகவென்பார், 'உரை' என்றார்.

இனி, 'நின்றனை வெறுப்பது என் உரைமதி' என்பதற்கு, 'உம்மை வெறுப்பது என்னை? மதியுரைப்பீராக'என்லும் ஒன்று. மதியுரைத்தல்- அறிவு கூறுதல். மதி - அறிவு.

சுரர் முனிவர் பரவல் திருத்தொண்டத் தொகைக்குமாம். இது வெளிப்படையின் வஞ்சப் புகழ்ச்சியாக நிற்பதுணர்க. இப்பொருட்கண் உடையானுக்கடுத்த செயலென்பது, இரு மனைவியரை உடையராதல் என்க.

சுந்தரமூர்த்திநாயனாரைத் திருமாலாதியர் எதிர்கொண்டு இறைஞ் சினமையை,

"இந்திரன் மால்பிரமன் னெழிலார்மிகு தேவரெலாம்
வந்தெதிர் கொள்ளவெள்ளை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ சிவனாரென வெம்பெருமான்
நந்தம ரூரனென்றா னொடித்தான்மலை யுத்தமனே.

என அந்நாயனாரருளிய திருக்கயிலாயத் திருப்பதிகச் செய்யுளானறிக.

தேசமுய்வான் திருத்தொண்டத் தொகையையருளினமையை.

"நேச நிறைந்த வுள்ளத்தா
னீல நிறைந்த மணிகண்டத்
தீச னடியார் பெருமையினை
யெல்லா வுயிருந் தொழவெடுத்துத்
தேச முய்யத் திருத்தொண்டத்
தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்."

என வரும் பெரிய புராணத்தில் சண்டேசுர நாயனார் புராணச் செய்யுளாலறிக.

தேசிகனைச் சிவனென மதித்தலியல்பை,

"சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணா வதிமூடர்
பொய்த்தகு கண்ணா னமரென்பர் புண்ணிய
ரத்த னிவனென் றடிபணி வாரே."

எனவும்,

"தேசிகனை யீசனெனச் சிந்தனைசெய் வார்திளைப்பார்
பாசமறுத் தேபேரின் பும்,"

எனவும் வரும் திருமந்திரம், குரு தரிசனம் சங்கற்ப நிராகரணத் திருக்குறள் செய்யுள்களான் முறையேயுணர்க. இந்நாயனார் செயல் இறைவர் செயலாய் நிகழ்ந்தமையை,

"மோக மறுத்திடினா முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன வவர்தம்மைத்—தோகையர்பாற்
றூதாகப் போகவிடும் வன்றொண்டன் றொண்டுகளை
யேதாகச் சொல்வே னியான்."

என வரும் திருக்களிற்றுப் படியார் செய்யுளானுணர்க.

## பெருமிழலைக் குறும்பநாயனார் வரலாறு:

மிழலை நாட்டில் பெருமிழலையென்னும் ஊரிலே, சுவபத்தி அடியார் பத்திகளிற்சிறந்த பெருமிழலைக் குறும்பநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களைக் காணுந்தோறும் விரைந்து எதிர்கொண்டு வணங்கி, அவர்களுக்குக் குறிப்பறிந்து தொண்டு செய்பவர்; அவர்களை நாடோறுந் திருவமுது செய்வித்து, அவர்களுக்கு வேண்டும் செல்வங்களைக் கொடுப்பவர். அவர் சுந்தரமூர்த்தி நாயனாருடைய பெருமையை அறிந்து, 'அவருடைய திருவடிகளை மனம் வாக்குக் காயங்களினாலே சிந்தித்துத் துதித்து வணங்குதலே பரமசிவனுடைய திருவடிகளை அடைதற்கு உரிய நெறி' என்று அப்படிச் செய்து வந்தார். அதனால், அவர் அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எண்வகைச் சித்திகளையும் அடைந்தார். அங்ஙனம் அடைந்தும் திருவைந்தெழுத்தைச் சிந்தித்து வந்தார்.

இப்படி நிகழுங்காலத்திலே, திருவஞ்சைக்களத்திற்சென்று திருப்பதிகம் பாடும் சுந்தரமூர்த்தி நாயனாருக்குப் பரமசிவனுடைய திருவருளினாலே வடகயிலையை அடையும் வாழ்வு கிடைப்பதைத் தம்முடைய ஊரிலிருந்துகொண்டே யோகக் காட்சியாலறிந்து, 'சுந்தரமூர்த்தி நாயனார் வடகயிலையை நாளைக்கு அடைய, நான் பிரிந்து இங்கே வாழமாட்டேன்' என்றுநினைந்து, 'இன்றைக்கு யோகத்தினாலே

சிவபெருமானுடைய திருவடியை அடைவேன்!' என்று துணிந்து, யோக முயற்சியினாலே பிரமரந்திரம் திறப்ப, உடலினின்றும் பிரிந்து, திருக்கயிலையில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய திருவடியை யடைந்தார் என்பதாம்.

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே.' 40

பதவுரை

**செய்ய** - சிவந்த,
**வார்சடை** - நீண்ட சடை முடியை யுடைய;
**தெய்வ சிகாமணி**-தேவர்களுக்குத் தலைவரான சிவபெருமானது,
**பாதம்** - திருவடிகளை.
**போற்றும்** - வழிபடுகின்ற,
**வாதவூர் அன்ப** - திருவாதவூரில் தோன்றிய அன்பரே!
**பூ எனப்படுவது** - பூ என்று யாவ ராலும் உயர்த்திச் சொல்லப் படுவது,
**பொறி** - திருமகள்,
**வாழ்** - வாழ்கின்ற (தங்கிய),
**பூவே** - செந்தாமரை மலரேயாம்; (அது போல)
**பா எனப்படுவது** - பாவென்று யாவரானும் பகரப்படுவது,
**உன் பாட்டு** - நுமது திருப்பாடலே யாம்.

விளக்கவுரை

"மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை"

எனவும்,

"நொச்சிப் பூவும் பச்சை மத்தமும்
கொன்றைப் போதும் மென்றுணர்த் தும்பையும்
கங்கை யாறும் பைங்கட் டலையு
மரவு மதியமும் விரவித் தொடுத்த
சூடா மாலை சூடிப் பீடுகெழு
நெருப்பிற் றிரித்தனைய உருக்கிளர் சடிலமொடு
நான்முகங் கரந்த பானிற வன்னங்
காணா வண்ணங் கருத்தையுங் கடந்து
சேணிகந் துளதே யொருபாற் றிருமுடி"

எனவும், இப்பொருள் குறிப்பின் விளங்கச் "செய்ய வார் சடை" எனச் சடையைச் சிறப்பித்துக் கூறினார். எவரெவர் எவ்வெத் தேவரைக் குறித்து வழிபடினும் அவ்வத்தேவரிடமாக நின்று அவற்றையேற்று

அவரவர் வேண்டிய பயன்களை அளிக்கவல்ல முதற்கடவுள் சிவபெருமானொருவரே என்பார் 'தெய்வசிகாமணி' என்றார். இதனை,

"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு
மாதலா னிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே"

என வரும் சிவஞானசித்தியார் இரண்டாம் சூத்திரம் 25-ஆம் செய்யுளா னுணர்க.

தெய்வசிகாமணி - சிவபெருமான்; தேவர்கள் முடி மணி போலக் கொள்ளத்தக்கவர் என்பது பொருள்.

மும்மலவழுக்கை ஞானநீராற்கழுவி, மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி, அவரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல்வனெனவே கண்டு வழிபடுதல், அரன் கழலணிந்த சீவன் முத்தர்க்கு இயல்பாகலின், இவ்வாசிரியரும் போக சாதனமாயுள்ள உட்கரணங்களும் புறக்கரணங் களுமாகிய பசுகரணங்களெல்லாம், அளத்திற்பட்ட புற்போலச் சிவப்பிரகாசத்தினாற் சிவகரணமாய் நிகழச் சுகானுபவ முதிக்கப் பெற்று அந்நெறியினொழுகினாரென்பார், 'பாதம் போற்றும் வாத வூரன்ப' என்றார்.

சிவபத்தியையும் தவப்பேற்றையும் பயப்பதாய்ப் பாடலுட்சிறந்தது திருவாசகமென மேல் விதந்தமையின், திருக்கோவையார் அவ்வியல் பினதன்றோவென ஐயப்பாடு நிகழுமன்றே? அது நிகழாமற்காத்தற் பொருட்டு, அஃதும் அவ்வியல்பினதே என்பார், வாசகமென்னாது, அதனையும் சுட்டப் 'பாவெனப்படுவதுன் பாட்டு' என்றார். 'உன்பாட்டு' என்புழி பூவே என்பதிலுள்ள தேற்றேகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.

அற்றேல், அத்திருக்கோவையார் சிற்றின்பப் பொருளதாய்த் திகழ்வதென்னையெனின்: — அண்ணல்பாலார்ந்த பேரின்பச் சுவையை ஆர்வமேலீட்டால் நாயகநாயகி முறையின் நயந்து பாராட்டல் ஞானி களியல்பாகலின், அதற்கோரிலக்கியமாக இறைவர் கட்டளைப்படியே அருளினமை பற்றிக் காமஞ் சான்றமைபோலக் காணப்படினும், பேரின்பப் பொருள் பயப்பதாய், வேத சிவாகமங்களின் சாரமாய்ப் பாடலிற்சிறந்து விளங்கலின், ஞானப்பனுவலேயாமென்க.

சிவபெருமானை முதல்வனென வழிபடுதலை,

"செம்மல் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே."

என வரும் சிவஞான போதம் பன்னிரண்டாஞ் சூத்திரத்தானுணர்க.

பாதம் போற்றுதலை,

"மன்னு முன்னுள வுயிர்க்கர ணங்கண்
மாய்ந்து பொய்முத லறவிழந் தருளாற்
றுன்னு மின்னருட் சிவகர ணங்க
டோன்ற லாற்சுக வறிவதிற் றோன்றிச்
சென்னி யின்மிசை மேவிய பாதந்
திருந்து கண்ணிணை சேர்த்திரு கரத்தா
லுன்னல் செய்திடு மிதயமே லணைவித்
துவகை கூர்ந்துமெய் யுணர்ச்சியி லெழுந்தார்."

என வரும் **திருவாதவூர்ப் புராணத்தில்** திருப்பெருந்துறைச் சருக்கச் செய்யுளானுணர்க.

திருக்கோவையார் வேதாகமங்களின் சாரமாய்ப் பாடலுட்சிறந் தமைமைய,

"ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்ப
ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே."

எனவும்,

"வருவாசகத்தினின் முற்றுணர்ந் தோனைவண் டில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே."

எனவும் வருவனவற்றாலும்,

திருக்கோவையார் பேரின்பப் பொருள் பயத்தலை,

"இயற்கைப் புணர்ச்சித் துறையீ ரொன்பதுஞ்
சத்திநி பாத மொத்திடுங் காலத்
துத்தம சத்குரு தரிசன மாகும்."

"பாங்கற் கூட்டம் பதினெட் டின்பம்
தாங்குதற் போதந் தான்கண் டகறல்."

என இங்ஙனம் தொகையும் வகையுமாகச் செய்யுள் முற்றும் விதந்து விளக்கிய திருக்கோவையார் உண்மையானும்,

திருக்கோவையார் சிவப்பேறளித்தலை,

"மெய்த்தவ வாத வூரர் விளம்பிட வெழுது மித்தப்
புத்தக மன்று ளாடல் புரிந்தவ னெழுத்தா மென்று
முத்தியை யுதவுங் கோவை முடிவிடத் தெழுதிப் பின்னர்ச்
சித்திர மலர்க்கை யாலே திருந்தமைக் காப்புஞ் செய்தார்."

என வரும் **திருவாதவூரர் புராணம்** திருவடி பெற்ற சருக்கச் செய்யுளா னும் அறிக.

சாக்கிரத்திலே நிருமல துரியாதீதத்தைப் பொருந்திச் சீவன் முத்தராய்த் திரியும் சிவஞானிகளுக்கே தலங்கடோறுஞ் சென்று தம் பெருமானைப் பணியும் சரியை முதலிய அநுட்டிக்க வேண்டுவதில்லையாகவும்; இணையின்றித் தெய்வத் திருவருளுருவாய் விளங்கிய இந் நால்வரும் அநுட்டித்தொழுகியது எற்றுக்கெனின் :—

நன்று வினாயினாய்! சிவஞானியராவார் நான்கிற்கும் உரியரென வகுத்ததூஉமன்றி,

"ஞால நீதியு நான்மறை நீதியும்
பால ருன்மத்தர் பசாசரி லேனவு
முறங்கி னோன்கை வெறும்பாக் கெனவும்
தானே தவிரா தானாற் புரியா
தொழிந்திடி னிரயத் தழுந்துத றிடமே."

எனவும் சிவாகமங்கள் செப்பினவாகலானும், தமதுண்மையை அறியமாட்டாது குருடாய்க் கிடந்த தமக்குப் பலவாற்றானும் அதனைத் தெரிந் துணர்த்தி, எத்தனையுமெளிய தம்மை எத்தனையுமரிய தானாம் வண்ணம் செய்தளித்த பெரியதோருதவியை மறப்பின், அஃது இதற்கு முன் அறியாமையான் மறந்த குற்றம் போலத் தீர் திறனுடையதோர் குற்றமன்றாகலானும், முதல்வன் தான்றானேயாகச் செய்தாலும் இது காறும் தமக்குச் சுதந்தரமின்றி முதல்வனது உபகாரத்தை இன்றியமையாதெய்தி அடிமையாகிய தாம் எக்காலத்தும் அவ்வாறு அடிமையேயாமாகலானும், அப்பெருமானை வழிபடுதல் அவர்க்கே வேண்டற்பாலதாம். ஆயின், ஆன்மாக்கள் உய்தற்குரிய ஞானவொழுக்கச் செயல்களை விளக்கிக் காட்டி அவற்றினிறுவி, இட்ட சித்திகளையும் பர முத்தியையும் பாலித்தற்பொருட்டே அவதரித்த இவ்வாசிரியர் நால்வருக்கும் அவை, உலகுய்வான் ஒருதலையாக வேண்டற்பாலனவென்பது சொல்லாமே அமைதலின், எத்தொண்டினுஞ் சிறந்த அத்தொண்டினை ஞானத்திற் சரியையாக அனுட்டித் தொழுகினாரென்க.

"வன்றொண்டர் சம்பந்தர் வாகீசர் மற்றுமுளோர்
பொன்றரிய ஞானம் புகுந்திருக்கச் — சென்று
பதிதோறும் பாடிப் பணியுமதென் மாட
மதிதோ யருட்டுறையாய் வந்து." —சதமணிக்கோவை - 21

என்றதூஉம் இக்கருத்துப் பற்றியே.

ஞானத்திற்கிரியை முதலியவற்றை,

"ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நானென தென்னாமை
ஞானத்தில் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்மூர்த்தி நாடலே."

— திருமந்திரம்-ஞானம் - 8

என்பதனாலும்,

ஞானிகள் ஞானாதி நான்கிற்கும் உரியராதலை,

"ஞானயோ கக்கிரியை சரியை நான்கு
நாதன்றன் பணிஞானி நாலினுக்கு முரிய
னூனமிலா யோகமுதன் மூன்றினுக்கு முரியன்
யோகிகிரி யாவான்றா னொண்கிரியை யாதி
யானவிரண் டினுக்குரியன் சரியையினி னின்றோ
னச்சரியைக் கேயுரிய னாதலினா லியார்க்கு
மீனமிலா ஞானகுரு வேகுருவு மிவனே
யீசனிவன் றானென்று மிறைஞ்சி யேத்தே"

சிவஞான சித்தியார்-சூத். 12-5.

என்பதனாலும்,

முத்தியிலும் அடிமையாதலை,

"தன்னை யறிவித்துத் தான்றானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது — முன்னவனே
தானேதா னாச்செய்துந் *தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி." —சிவஞான போதம், சூத். 12

என்பதனாலும்,

ஆசிரியர்க்கு ஆலய வழிபாடாதியன ஒருதலையாக வேண்டுமென்பதனை,

"போதகனா கியகுரவ னெஞ்ஞான்று நற்கருமம்
புரிக வென்று
வேதமுத லாகிய நூன் முழுதுமொருங் கொருவந்தம்
விதித்த லாலே
சாதகனா கியபருவ மாணாக்கன் பாசவலி
தணிக்க வல்லான்
மேதினிமே லுடலொடுநற் செயல்விடுவ தன்றியிடை
விடலா காதால்." —பிரபுலிங்க லீலை, கோரக்கர் கதி, 21

என்பதனாலும்,

* தைவம் - தேவனது உடைமை; எனவே அடிமை என்றபடி.

ஆலய வழிபாடு எவற்றினும் சிறந்தமையை,

"என்று கூடுமிப் பருவமென் றியம்பில்
யாமி ருந்துள விடந்தொறு மிறைஞ்சி
நன்றி சேர்சிவ புண்ணியம் புரிய
நன்மை யாவது நணுகுமென் றறிநீ."

—திருவாதவூரர் புராணம் - திருப்பெருந்துறைச் சருக்கம், 67

என்பதனாலும் அறிக.

இனி, இவ்வாசிரியர் நால்வரும் தொண்டர் போன்றாரேனும், ஒவ்வொருவரும், அக்காலத்திலே சைவ சமயம் குன்றும்படி வளர்ந்திருந்த பொய்ச்சமயங்களாகிய சமணம் பௌத்த முதலியவற்றை ஒழித்து, தன் வயத்தனாதல் முதலிய எண்வகைக் குணங்களுடைமையின் படை முதலாகிய தலைமைச் செயல்களை அருள் விளையாட்டினெய்திச் சைவ சமயப் பெருமைகளைப் பற்பல ஏதுக்களால் விளக்கினமையின் சைவ சமய குரவர் எனப் பெயர் பெற்று, தம்மை வழிபடுவார்க்கும் மேற்கூறிய சித்திகளையுளவாக்கிப் பரமுத்தியைப் பாலித்ததுமன்றிப் பிற்காலத்தவரும் ஓர்ந்துய்வான் இறைவரை எய்து தற்குரிய சாதன வகைகளையும் அச்சாதனநெறி நிற்பாரெய்தும் பயன்களையும் வகுத்தருளி, இறைவர் திருவுளப் பாங்கின்படி வதிந்த ஆசிரியத் தலைமையுடையவர்களேயாகலான், இவர் அருளிய அருட்டிறத்தை மறந்து, உய்திபில் குற்றம் பெறாது, இவரை இறைவரெனவே தேர்ந்து வழிபடின் அவ்விறைவரே முன்னின்று தம் வடிவமாக்குவரென்பதே இந்நூலாசிரியர் தந்துணிபாகக் கொண்டு,

'கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்குத்
தானே முத்தி தருகுவன் சிவன்'

என விளக்கியருளினாராகலின், அங்ஙனமே மனமொழி மெய்களான் வழிபட்டும், இவர்கள் அருளிய தேவாரம், திருவாசகம், திருக்கோவையார் என்பவற்றைப் பசு வாக்கியமென்று நினைப்பினும், அந்நினைவு, கொடிய பாதகமாகிய சிவத்துரோகமேயாகி எரிவாய் நிரயம் பரந்தே விடுமாகலின், பதி வாக்கியமெனவே ஐயந்திரிபறத் துணிந்து சிவமாந் தன்மைப் பெருவாழ்வெய்தலே தெள்ளியோர் கடமையாகும்.

இச்சமய குரவர் உலகுய்வான் தோன்றினமையை,

"அவம்பெருக்கும் புல்லறிவி னமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறுந்
தவம்பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாஞ்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதா ரஞ்செய்தார்."

—பெரிய புராணம் - சம்பந்தமூர்த்தி நாயனார் புராணம், 26.

எனவும்,

"அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ
வுலகில்வரு மிருணீக்கி யொளிவிளங்கு கதிர்போல
மலருமரு ணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார்."

**திருநாவுக்கரசர் புராணம்,** *17.*

எனவும்,

"மாத வஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போதுவார்' —**பெரிய புராணம், திருமலைச் சிறப்பு,** *25.*

எனவும்,

'தீதகன் றுலக முய்யத் திருவவ தாரஞ் செய்தார்'

—**தடுத்தாட்கொண்ட புராணம்.**

எனவும்,

"ஆயவளம் பதியதனி னமாத்தியரி லருமறையின்
தூயசிவா கமநெறியின் றுறைவிளங்க வஞ்சனையான்
மாயனிடும் புத்தவிரு ளுடைந்தோட வந்தொருவர்
சேயவிளம் பரிதியெனச் சிவனருளா லவதரித்தார்."

—**திருவிளையாடல், வாதவூரடிகளுக்குபதேசித்த படலம். 4.**

எனவும் வருனவற்றானும்,

அருள் விளையாட்டிற் படைப்பு முதலாயின எய்தினமையை,

"பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங்
காலையன் றேவிக் கராங்கொண்ட - பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தங்
கரணம்போ லல்லாமை காண்."

—**திருக்களிற்றுப்படியார், 12.**

எனவும்,

'தவந்த வென்பினைப் பெண்ணெனப் படைத்துஞ்சார் மழல
னுவந்த பெண்ணுயி ரளித்துமொட் டாதெதிர் புத்த
னிவந்த சென்னியை யுருட்டியு முத்தொழி னிறுவிப்
பவந்த டுத்துயிர்க் கருளுஞ்சொற் பனவனைப் பணிவாம்.'

—**பேரூர்ப் புராணம், கடவுள் வாழ்த்து.**

எனவும் வருவனவற்றானும், சைவ நெறி பாதுகாத்தமையை,

'சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுநஞ் சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு— முற்கோலி
வந்திலரே னீறெங்கே? மாமறைநூ றானெங்கே?
எந்தைபிரா னைந்தெழுத்தெங் கே?'

—**சிவானந்த மாலை: பாயிரம்.**

என்பதனாலும், இறைவர் திருவுளப் பாங்கின்படி வசித்தமையை,

'அன்ன தன்மையர் கயிலையை யணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
நன்னெ டும்புனற் றடமுமொண் டுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால்.''

—திருநாவுக்கரசு நாயனார் புராணம், 361

எனவும்,

''தித்திக்கு மணிவார்த்தை இன்னஞ் சின்னாட்
டிருச்செவியா லருந்தவுங்கைச் செம்பொ னெல்லாம்
பத்திப்பே ரன்பளித்துக் கவர்ந்து வேண்டும்
பணிகொடுபாண் டியனையிவர் பண்பு தேற்றி
முத்திக்கே விடுத்திடவும் புத்தை வாது
முடித்திட வுந் திருவுள்ள முன்ன மெய்தி
யெத்தித்தொண் டரைக்கருமஞ் சிறிதுண் டிங்கே
யிருத்தியென உருக்கரந்தா னடிய ரோடும்.''

—திருவிளையாடல், வாதவூரடிகளுக்குபதேசித்த படலம், 53,

எனவும் வருவனவற்றானும், மறத்தல் உய்தியில் குற்றமாதலை,

'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'

—திருக்குறள் - 110

என்பதனாலும், பவப்பகையொழித்தலை,

'ஒழித்தி டும்பவப் பகைவிரைந் துள்ளமே
யோதுமூ துணர்வோர்முற்
பழிச்சு பாடலை யரற்கவை விடர்க்கிளம்
பாவைய ருரைபோலுங்
கழித்தி டேனுப சாரமென் றிதனைநீ
கட்டுரை யெனக்கொள்வாய்
விழித்து மாரனை யெரித்ததே வருள்பெறும்
விருப்பினர் விருப்பீதே.'

—வைராக்கிய சதகம்

என்பதனாலும், சிவன் தற்சொருபமாக்குதலை,

'சிவனெனவே சிந்தித்துச் செய்பூசை கொண்டே
சிவனே பலத்தைச் செயும்.'

—சங்கற்ப நிராகரணத்திருக்குறள்

எனவும்,

'பரப்பிரம மிவனென்றும் பரசிவன்றா னென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன்றா னென்று
மரன்றருசீர் நிலையெல்லா மிவனே யென்று
மருட்குருவை வழிபடவே யவனிவன்றா னாயே

யிரங்கியவா ரணமாமை மீனண்டஞ் சினையை
யியல்பினொடும் பரிசித்து நினைத்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போற்சிவமே யாக்கும்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந் தானே'
—சிவஞான சித்தி. சூத். 12 - 5

என வருவனவற்றானும் அறிக.

இந்நூல், அந்தாதித் தொடையால் முடிய வேண்டுமாதலால், பூவென நூன்முகத்தி லெடுத்து இறுதியில் பூ என முடித்தார்.

இப்பிரபந்தம், இவ்வாசிரியர்களின் அற்புதங்களுட்பலவற்றை எடுத்துக்கொண்ட செய்யுட்கு இணங்குமளவும் சுருங்கச் சொல்லல் முதலிய அழகு நிரம்பத் தொகுத்து விதத்தலால், சுருங்கியதோர் தோற்றமுடைத்தாய் விளங்கினும், உரை செய்வான் புகும் நுண்ணறிவாளர்க்கெல்லாம் பொருளகலங் காட்டி அணிபெற விரிந்து நிற்றல் பற்றி, திராவிட பாடிய கருத்தர் என வியக்கத்தக்க பெரியாரும் இதயத்தமைத்துப் பேணிய தெய்விகமுடையதென, அறிஞர் பலரால் அறிந்து வைத்தும், இதற்குச் சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளவர்களால் இயற்றப்பட்ட உரையையொருவாறு தழுவி, எம் சிற்றறிவிற்கு இயன்றவளவு எழுதிய இவ்வுரையில், இன்னும் ஆங்காங்கு விரித்துரைக்கற்பாலன மிகப்பலவுளவாகவும் அவற்றைவிரிவஞ்சி விடுத்தமையின், விரித்தவைகொண்டு விரியாதவற்றையும் உய்த்துணர்ந்து முரண்பாடின்றி அறிஞர் பெரிதும் இன்புறுவாராக.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாருக்கு **வெண்பாவும்**, திருநாவுக்கரசு நாயனாருக்குக் **கட்டளைக்கலித்துறையும்**, சுந்தரமூர்த்தி நாயனாருக்கு **விருத்தமும்**, மாணிக்கவாசக சுவாமிகளுக்கு **அகவலு**மாக அருளிச்செய்த

**நால்வர் நான்மணி மாலை**

விருத்தியுரையோடு முற்றுப்பெற்றது.

## திருச்சிற்றம்பலம்

### சிவப்பிரகாச சுவாமிகள் துதி

'புனையெழில் விடிவி னாளோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் தமிழ்ப்பா மாலை
சினவிடை யவற்கே சாத்துஞ் சிவப்பிர காச னென்னும்
முனைவனெம் மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்.'

"சிவப்பிர காசந் திருவடி போற்றத்
தவப்பிர காசந் தானே வருமே."

**சைவ சமய குரவர் திருவடி வாழ்க!**
**சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க!!**

## பாட்டு முதற்குறிப்பு

(எண் : பாட்டு எண்)